# KṢATRACŪḌĀMAṆI

# க்ஷத்ர சூடாமணி

## பாகம் - II



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்
மற்றும் ஆய்வு மையம்,
தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 528

श्रीः

श्री वादीभसिंहविरचितः

# क्षत्रचूडामणिः

வாதீபஸிம்ஹன் இயற்றிய

# க்ஷத்ரசூடாமணி

## பாகம் - II

பதிப்பாசிரியர்கள்:

ஸாஹித்ய சிரோமணி

**S. இராஜலக்ஷ்மி,** M.A., B.L.I.S.,

சம்ஸ்க்ருதபண்டிதர்

சரசுவதி மகால் நூலகம்

**Dr. V. M. அனந்தநாராயணன்,** M.A., M. Phil., Ph. D.,

இணைப்பேராசிரியர் & தலைவர்,

சம்ஸ்கிருதத்துறை,

தேசியக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

**மற்றும் ஆய்வு மையம்**

தஞ்சாவூர்.

2009

விலை : ரூ. 180-00






T.M.S.S.M-2016

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | க்ஷத்ரசூடாமணி பாகம் - II |
| பதிப்பாசிரியர்கள் | : | S. இராஜலக்ஷ்மி, & |
| | | Dr. V. M அனந்தநாராயணன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 528 |
| மொழி | : | சம்ஸ்கிருதம் - தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2009 |
| தாள் | : | TNPL 18.6 kgs. |
| நூல் அளவு | : | 21 x 14 c.m. |
| பக்கங்கள் | : | 244 |
| படிகள் | : | 250 |
| எழுத்து | : | 16 & 12 |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | காப்பியம் |
| விலை | : | ரூ. 180-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் அறிவுச் செல்வமாகப் பயன்பட்டுக்கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் சரசுவதி மகால் நூலகமாகும். சுவடிக் கருவூலகமாகவும். பன்மொழி நூற்களஞ்சியமாகவும், பன்மொழி ஆய்வு மையமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது. இந்நூலகம் தமிழகத்தினர் மட்டுமின்றிப் பிற மாநிலத்தவரும், பிற நாட்டினரும் பயன்படுத்தி வருகின்ற ஓர் அரிய ஞான ஆலயமாகும்.

அறிவுக் கருவூலமாக பயன்பட்டுவரும் சரசுவதி மகால் நூலகத்தின் முக்கிய நோக்கங்களில் ஒன்று அறிஞர்களைக் கொண்டு, அரிய சுவடிகளைப் பதிப்பித்து அச்சு நூலாக்கி மக்கட்கு பயன்படச் செய்தலாகும். தமிழ், சம்ஸ்கிருதம், மராட்டி, தெலுங்கு ஆகிய மொழிகளைச் சார்ந்த நூல்களை வெளியிட்டு இந்திய இலக்கிய வளரச்சிக்கும், மொழி பரிமாற்றத்திற்கும் பெருந் தொண்டினைத் தொடர்ந்து ஆற்றி வருகின்றது. இதுவரை 527 புத்தகங்கள் வெளியிடப் பட்டுள்ளன. அவ்வகையில் சிறந்த சம்ஸ்கிருத மொழிக் காவியமான **க்ஷத்ரசூடாமணி** எனும் நூலின் இரண்டாம் பாகம் தற்போது வெளிவருகிறது. இச்சுவடி தமிழ் மொழிபெயர்ப்புடன் கூடிய ஒரு அரிய சுவடியாகும். இந்நூல் இந்நூலக சுவடி எண். 857ல் இடம்பெற்றுள்ளது.

பிற்காலத்தில் தமிழில் தோன்றிய சீவகசிந்தாமணி என்ற காப்பிய நூலுக்கு அடிப்படையாக இந்த காவியம் விளங்கியது என சைனர் கருதுவதாக தமிழ்த்தாத்தா உ. வே. சா. அவர்கள் கூறுகிறார்கள். ஜீவந்தரன் அல்லது சீவகன் என்று அழைக்கப்பட்ட காப்பியத் தலைவனின் சரிதத்தைச் சுருக்கமாகக் கூறுகிறது. இக்காவியத்தில் மன்னர்களின்

அறவழிச் செயல்பாடுகள், அமைச்சர்களின் கடமைகள், குலமாதர்களின் இலக்கணங்கள், இல்லறத்தின் இயல்பு, துறவறத்தின் மேன்மை, முன்வினைப்பயன், முயற்சியின் பெருமை, நன்றி மறத்தலின் தீமை இன்னும் சமதாயத்திற்கு பயனுறும் வண்ணம் என்றும் நிலைத்து நிற்கும் விழுமியக் கருத்துகளும் அறிவுரைகளும் நிறைந்து காணப்படுகின்றன. இலக்கியத் திறத்தானும், கதை அமைப்பானும் தமிழ்நூலும், சம்ஸ்கிருத நூலும் ஒத்திருக்கின்றனவா மாறுபடுகின்றனவா என்பதை இந்த பதிப்பு இனிது உணர்த்தும். இலக்கிய ஆர்வலர்களுக்கு இந்நூல் பயன்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இந்த நூலினைச் சிறந்த முறையில் பதிப்பித்துள்ள இந்நூலக சம்ஸ்கிருதப் பண்டிதர் திருமதி எஸ். இராஜலெட்சுமி மற்றும் திருச்சி தேசியக்கல்லூரி, சமஸ்கிருதப் பிரிவில் பணிபுரியும் V. M. அனந்தநாராயணன் அவர்களுக்கு எனது பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் கணினி அச்சில் வெளிவர கணினி பிரிவில் பணிபுரியும் அனைவருக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தஞ்சாவூர்
23- 9 -2009

**எம். எஸ். சண்முகம்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.



# முன்னுரை

வாதீபஸிம்மன் இயற்றிய க்ஷத்ரசூடாமணி என்ற நூலின் இரண்டாம் பகுதி இப்பொழுது வெளியிடப்படுகிறது. நூல் வரலாறு, நூலாசிரியரின் மற்ற நூல்கள் பற்றிய குறிப்பு, ஜைன மதக்குருமார்களால் எழுதப்பட்ட மற்ற நூல்கள், சுவடி வரலாறு சீவகசிந்தாமணிக்கும் க்ஷத்ரசூடாமணிக்கும் உள்ள ஒற்றுமை - வேற்றுமைகளுக்கான ஒரு சில சான்றுகள், ஆகியவை முதற் பகுதியின் முன்னுரையில் இடம் பெற்றுள்ளன.

ஆறாம் லம்பகம் முதல் பதினொன்றாம் லம்பகம் வரை இப்பகுதியில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஜீவகன் க்ஷேமஸ்ரீ, கனகமாலா, விமலா, ஸுரமஞ்ஜரீ, லக்ஷ்மணா ஆகிய பெண்களை மணந்து, கடைசியில் துறவு மேற்கொண்டு ஜினதேவரின் வழியைப் பின்பற்றி வீடுபேறு அடையும் வரையிலான கதை இங்கு வழங்கப்படுகிறது.

இந்த இரண்டாவது பகுதியைத் தயாரிக்கும்போது International Digambar Jain Organisation (IDSO) என்றஅமைப்பின் இணையதளத்தில், க்ஷத்ரசூடாமணி காகிதச் சுவடியின் புகைப்படப் பிரதி காணப்பட்டது. நமது நூலகச் சுவடிக்கும் அதற்கும் ஒரு சில இடங்களில் பாடபேதங்கள் அதில் காணப்பட்டன. அவற்றையும் அடிக்குறிப்பில் இணைத்திருக்கின்றோம்.

ஆறாம் லம்பகம் முதல் பதினொன்றாம் லம்பகம் வரையிலான கதைச்சுருக்கமும், துணைநூற்பட்டியலும் இப்பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன.

செய்யுட்களின் பதவுரை சுவடியிற்கண்டவாறே கொடுக்கப்பட்டுள்ளது. 19ஆம் நூற்றாண்டில் பன்மொழி அறிஞர்கள் தமிழை எவ்வாறு கையாண்டார்கள் என்பதற்கான சான்று இம்மொழிபெயர்ப்பு. பதவுரையின் கீழே கொடுக்கப்பட்டிருக்கும் பொருள் எளிய தமிழ்நடையில்

எழுதப்பட்டுள்ளது. தமிழறிஞர்களும், ஸம்ஸ்கிருத அறிஞர்களும் இந்நூலை இதற்குமேலும் ஆராய்ந்து அறிய இப்பதிப்புப் பயன்படும்.

**நன்றியுரை**

இந்நூலைப் பதிப்பிக்க அனுமதி வழங்கிய தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குநர் உயர்திரு. எம். எஸ். சண்முகம், இ. ஆ. ப., அவர்களுக்கு எங்கள் நன்றி என்றென்றும் உரித்தாகுக. பணி தொய்வுற்ற போதெல்லாம், ஊக்கமளித்து, ஆலோசனைகள் நல்கி, பணி சிறக்கவைத்த இந்நூலக நிர்வாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) உயர்திரு சாமி. சிவஞானம் அவர்கள் எங்களால் போற்றுதற்குரியவர்.

இந்நூலை பதிப்பிக்க எடுத்துக் கொள்வதற்கு ஆலோசனை வழங்கி உதவிய ஜைன மதத்தைச்சார்ந்த இந்நூலக சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் அறங்கூறும் அன்னை திருமதி ராஜலக்ஷ்மி ஜிநக்குமார் அவர்களுக்கும் எங்களது உள்ளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம். திருச்சிராப்பள்ளி தேசியக் கல்லூரிச் செயலர் உயர்திரு K. ரகுநாதன் அவர்களும், உயர்திரு முதல்வர் முனைவர் கு. அன்பரசு அவர்களும் நாம் எடுக்கும் முயற்சிகள் எல்லாவற்றிலும் துணை நிற்பவர்கள். கல்லூரிப் பணிநேரம் தவிர, மற்ற நேரங்களில் இலக்கியப் பணி செய்ய என்றென்றும் ஊக்குவிக்கும் அவர்கள் இருவருக்கும் யான் என்றென்றும் நன்றிக்கடன் பட்டவன்.

இந்நூலினைச் சிறப்பாக அச்சிட்டுத்தந்த சரசுவதி மகால் நூலக கணினித் துறையினருக்கும், நூற்கட்டுப் பிரிவினருக்கும் எங்களது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

*தஞ்சாவூர்*
*25 - 8 - 09*

S. **இராஜலக்ஷ்மி,**
Dr. V. M. **அனந்தநாராயணன்.**

# முன்கதைச் சுருக்கம்

## 6. க்ஷேமஶ்ரீலம்பம்

ஜீவகன் திலோத்தமையின் பெண்ணான பத்மாவை மணம் முடித்தான். சிலகாலம் சென்றதும் அங்கிருந்து புறப்பட்டான். பத்மா ஜீவகனின் பிரிவினால் துயரக் கடலில் மூழ்கினாள். பிறகு ஜீவகன் பல நதிகளையும், புண்ணிய க்ஷேத்திரங்களையும் அடைந்து பூஜித்துவிட்டு முடிவில் காட்டிலிருக்கும் தவசிகளின் ஆச்ரமத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அவ்விடம் முனிவர்கள் தவறாக தவம் செய்வதைக் கண்டு வருந்தினான். தத்துவங்களையுணர்ந்த ஜீவகன் தவசிகளைப் பார்த்து அன்புடன் உண்மைத் தத்துவத்தைப் போதிக்கலானான். எந்தப் பிராணியையும் வருத்தக்கூடாது என்று வேதவாக்கியமே சொல்லும். துயர்படுவதையே பயனாகக் கொண்ட தவத்தை நீங்கள் ஏன் செய்கிறீர்கள். நீரில் மூழ்கும்போது சடாமுடியில் இருக்கும் உயிர்களையும், விறகுகளைத் தீயில் போடும்பொழுது அழியும் உயிர்களையும் பாருங்கள். ஐந்து புறமும் நெருப்புச்சூழத் தவமியற்றுவது ஏற்புடையது அன்று.

இந்த உலகத்தில் உள்ள உயிர்கள் இறப்பதால் மீண்டும் பிறவி எடுக்க காரணமாக அது அமைகிறது. உயிர்களுக்கு எந்தவிதத்திலும் தீங்கிழைக்காததே உண்மையான தவமாகும். எந்த ஒரு செயலும் உயிருக்கு தீங்கு விளைவிப்பதாகவே இருந்தால் அச்செயலிலிருந்து விடுபடுவதே தவத்துக்கு வழிவகுக்கும். இது போன்ற பல அறிவுரைகளை ஜீவகன் அவர்களுக்குக் கூறினான். இதைக்கேட்ட தவசிகள் ஜீவகன் சொன்னதே சரியென்று அங்கீகரித்து அதன்படி நடக்கலாயினர். அதனைக் கண்ட ஜீவகன் பெரிதும் மகிழ்ந்தான். தங்களைக் காட்டிலும் பிறர் மேம்பாட்டில் சான்றோர்கள் மிக்க மகிழ்ச்சி அடைவார்களன்றோ!

பிறகு ஜீவகன் அங்கிருந்து அகன்று தக்ஷிண தேசத்திலுள்ள ஸஹஸ்ர கூடத்திற்குச் சென்று அங்கு மூடிய கதவை உடைய ஒரு ஜிநாலயத்தைக் கண்டு இறைவனைத் துதிக்கலானான். ஜீவகனின் துதியால் திறக்க முடியாத அந்த ஜைன மடத்தின் கதவு தானாகவே திறந்துகொண்டது. பிறரால் செய்யவொண்ணாத காரியத்தைச் செய்த ஜீவகன் வியப்படையவில்லை. உலகம் முழுவதையும் பிரகாசிக்கச் செய்யும் சூரியன் தன் செயலைக் கண்டு ஆச்சரியம் அடைவதில்லை. அப்பொழுது ஒருவன் ஜீவகனை கண்டு வணங்கி நின்றான். ஜீவகன் அவனை யாரென வினவினான்.

ஐயா ! இங்கே க்ஷேமபுரி என்றொரு நகரமிருக்கின்றது அதனில் நரபதிதேவன் என்ற அரசன் செங்கோல் செலுத்தி வருகின்றான். அந்நகரில் சுபத்ரன் என்றொரு வணிகன் இருக்கிறான். அவனுக்கு நிர்விருதி என்றொரு மனைவியுண்டு. அவர்களுக்கு க்ஷேமஸ்ரீ என்றொரு பெண் பிறந்தாள். அவள் பிறந்த தினத்திலேயே ஜோதிடர்கள் இந்த ஜிநாலயத்தின் கதவு எவன் வந்தவுடன் திறக்கின்றதோ அவனே இவளுக்கு கணவனாவான் என்று தெரிவித்தார்கள். இதனைக் கண்டு தேர்ச்சி செய்யவே குணபத்திரன் என்னும் நான் அவர்களால் நியமிக்கப்பட்டு எஜமானனுடைய கட்டளைப்படி இங்கே காத்திருந்து தங்களைக் கண்டுகொண்டேன். இனி எனக்குச் செல்ல விடைதர வேண்டும் என்று கூறி, பின்பு தன்தலைவனிடம் சென்று ஜீவகனுடைய வரவையும் ஜிநாலயம் திறக்கப்பட்டதையும் தெரிவித்தான். இந்த மங்களவார்த்தையைக் கேட்டதும் சுபத்ரன், ஜிநாலயத்திற்கு வந்து பூஜை செய்து கொண்டிருந்த ஜீவகனைக் கண்டான். அவன் பார்த்தவுடனேயே ஜீவகனை இளவரசன் என்று உணர்ந்தான். பூஜை முடித்தவுடன் ஜீவகனும் சுபத்ரனும் ஒருவருக்கொருவர் மரியாதைச் செலுத்திக்கொண்டனர். நட்பை விரும்பும் ஜீவகன்

சுபத்ரனுடைய மாளிகைக்கு சென்றான். ஜீவகன் சுபத்ரன் வேண்டுகோளுக்கிணங்கி, அவன் மகளை மணக்க இசைந்தான். பின்னர் நல்லதொரு நாளில் சுபத்ரன் தன் புதல்வியாகிய க்ஷேமஸ்ரீயை தாரை வார்த்துக்கொடுக்கவே தூய்மையான ஜீவகன் அவளை விதிப்படி ஏற்றுக் கொண்டான்.



## 7. கனகமாலாலம்பம்

க்ஷேமஸ்ரீயுடன் ஜீவகன் அங்கேயே சிலகாலம் வசித்தான். ஒரு நாளிரவில் அவன், முன்பு பத்மாவை விட்டுப் பிரிந்ததுபோலவே, யாதொன்றும் சொல்லாமல் க்ஷேமஸ்ரீயை விட்டுப் பிரிந்து சென்றான்.

பிறகு ஜீவகன் தன்னிடமிருந்த விலையுயர்ந்த அணிகலன் ஒன்றை ஒரு அறவோனுக்குக் கொடுக்க வேண்டுமென்று எண்ணிக் கொண்டே காட்டின் வழியாகச் சென்றுகொண்டிருந்தான். அப்பொழுது ஓர் உழவன் அவனுக்கு எதிரே வந்தான். உடனே ஜீவகன் அவனைப் பார்த்து நீ எங்கிருந்து வருகிறாய், எங்கு செல்கிறாய், நீ நலமாக இருக்கிறாயா என்று கேட்க, அவன், "நான் ஒரு செயல் முடிக்க இங்குமங்கும் அலைகின்றேன். உம்மைப் பார்த்ததால் எனக்கு எச்செயலிலும் நிறைந்த நன்மை உண்டாகும் என்று தோன்றுகிறது" என்றான். உடனே ஜீவகன் அவனுக்கு அறிவுரை கூறத்துவங்கினான். "நல்வாழ்வு என்பது உழவுத் தொழிலால் மட்டுமே உண்டாவது இல்லை. ஆறுவகை செயல்களால் ஏற்படும் நல்வாழ்வு ஆசைக்கு அடிப்படையாகவும் அழியக் கூடியதாகவும், தீவினைக்கு காரணமாகவும், துயரத்தோடு கூடியதாகவும், பிறரை எதிர்பார்த்து இருப்பதாகவும், தீய முடிவுள்ளாதாயும்

இருக்கின்றது. வீடுபேற்றினால் ஏற்படும் இன்பம் ஆத்மாவிடம் தோன்றியதாகவும், ஆத்மாவினால் அடையக் கூடியதாகவும் தடையற்றதாகவும், சிறந்ததாகவும், அழிவற்றதாகவும், வேட்கையற்றதாகவும் இருக்கிறது. தன்னையும் தனக்கு மாறாக இருப்பதையும் அறியச் சாதனமாக விளங்கும் நல்லறிவு, நற்காட்சி, நல்லொழுக்கம் இவைகளால் மட்டுமே அந்த பேரின்பத்தை அடைய முடியும். ஆகவே மனைவி, மக்கள், உடல், இவை யாவும் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டன. அறிவின்மையால்தான் மீண்டும் ஆத்மா உடலோடு சம்மந்தப்பட்டு அதன் வாயிலாக மறுபிறவி ஏற்படுகிறது. ஆகவே நீ இப்போது இல்லற அறத்தை மேற்கொள்வாயாக" என்று கூறினான்.

ஜீவகனுடைய அறிவுரையை ஏற்றுக்கொண்ட உழவன் இல்லறத்தை மேற்கொண்டான். ஜீவகன் தன்னிடம் இருந்த அணிகலனை உழவனிடம் இருந்த மரியாதை காரணமாக அளித்தான். விலைமதிப்பற்ற ஆபரணங்களையும், அறிவுரைகளையும் அடைந்த உழவன் மிக மகிழ்ந்தான். பின்பு ஜீவகனும் களைப்பினால் காட்டில் அமர்ந்திருந்தான். அப்பொழுது ஓர் அழகிய பெண் தனியாக அவனுக்கு எதிரில் வந்து நின்றாள். ஜீவகன் அவளைக் கண்டதும், அவளைக்காண விருப்ப மில்லாமல் திரும்பி நின்றான். ஜீவகன் அவள் மனம் இயல்பாக இல்லாமல் அறத்திற்கு ஒவ்வாத எண்ணம் கொண்டதாக இருப்பதை அறிந்து அவளை வெறுத்தான். ஜீவகன் மேல் காதல்கொண்ட அப்பெண், தன்னிடம் வெறுப்பு கொண்டிருந்த ஜீவகனை தன்வயப்படுத்த, தனது வாழ்க்கையை அவனுக்கு கூறினாள்.

"நான் ஒரு வித்யாதரப்பெண். எனது மைத்துனன் என்னை இங்கு பலாத்காரமாக தூக்கிவந்துவிட்டான். தனது மனைவியின் மீதுள்ள அச்சத்தால் என்னை விட்டுவிட்டான்.

அடைக்கலம் புகுந்தவரை காப்பவராதலால் நான் உம்மைச் சரணடைந்தேன். நீர் என்னைக் காக்க வேண்டும்" என்று சொன்னாள். அப்பொழுது, "அன்பானவளே ! நீ எங்கே போய்விட்டாய் ? என் உயிர் போகிறதே !" என்ற கதறல் ஜீவகன் செவிகளில் புகுந்தது. உடனே அந்தப்பெண் எவ்விதமாகவோ மறைந்துவிட்டாள். பின்பு ஒருவன் கதறிக்கொண்டே ஜீவகனைக்கண்டு தனது துயரை அவனிடம் கூறினான். "நானும் என் மனைவியும் இக்காட்டிற்கு வந்தோம். அப்பொழுது என் மனைவிக்கு நீர் வேட்கை அதிகரித்தது. நான் அவளை இங்கு இருக்கும்படி சொல்லிவிட்டு தண்ணீர் கொண்டுவருவதற்காக மற்றொருபுறம் சென்றேன். தண்ணீருடன் திரும்பி வந்து பார்க்கையில் அவளைக் காணவில்லை. வித்யாதரர்களுக் குரிய வித்தையும் என் காதலி போனவுடன் போய்விட்டது. நான் இப்பொழுது என்ன செய்வதென்று தெரியவில்லை. அறிவாளியாகிய நீரே இனி செய்யத்தக்கதை அறிவிக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான்.

ஜீவகன் அவ்வித்யாதரனைப் பார்த்து "ஹே ! பவதத்தனே, கல்வியறிவைக் கொண்டிருந்தும் நீ ஏன் வீணாக வருந்துகிறாய். கல்வியால் அடையத்தகாத அழகிய பொருள் ஒன்றுமேயில்லை. ஹே ! வித்யாதரனே ! துன்பம் வந்த போது வருந்துவதால் அறிவாளிக்கும் அறிவீனனுக்கும் மாறுபாடு இருக்காது. கருணையும் ஆதரவும், அன்பும், கட்டுப்பாடும் அற்றவர்களும் தீவினைக்கு காரணமானவர்களுமான பெண்களிடம் உனக்கு ஆசை எதற்கு ? நீ மனைவியைப் பிரிந்ததற்காக வருந்தவேண்டாம்" என்று உபதேசித்தான். இதனைக் கேட்ட வித்யாதரன் சிறிதும் சமாதானமடைய வில்லை. பின்பு ஜீவகன் வித்யாதரனுடைய அறியாமையை எண்ணிக்கொண்டு அக்காட்டிலிருந்து வெகுதூரம் சென்று ஹேமாபம் என்ற நகரை அடைந்து, அங்கிருந்த ஒரு

தோட்டத்திற்குச் சென்றான். அச்சோலையில் விஜயன் என்ற இளவரசன் ஒரு மாம்பழத்தைக் கண்டு அதனை உண்பதற்காக அதன்மேல் ஓர் அம்பை எய்தான். அது குறி தவறியது. அக்கனியை வீழ்த்தமுடியவில்லை. அப்பொழுது ஜீவகன் அவனிடமிருந்த வில்லை வாங்கி வளைத்து அக்கனியின்மேல் ஓரம்பைத் தொடுத்து அது நிலத்தில் விழுமுன்பே அக்கனியில் தைத்துநின்ற அம்போடு அதைப்பிடித்து இளவரசனிடம் கொடுத்தான். அம்புகளை நழுவவிட்டு, மாங்கனியைக் கொய்யமுடியாத அவன் ஜீவகனின் செயல் கண்டு அதிசயித்து, அவனைப் பார்த்துத் தான் கூறுவதைக் கேட்கவேண்டும் என்று கூறி, "இது ஹேமாபம் என்ற நகரம். திருடமித்திரன் என்பவன் இந்நாட்டிற்கு அரசன். நளினா என்பவள் அவனது அரசி. அவர்களுக்கு சுமித்ரன் முதலிய புதல்வர்கள் இருக்கின்றார்கள். அவர்களுள் நானும் ஒருவன். நாங்கள் வயதால் மட்டுமே முதிர்ந்தவர்கள். கல்வியால் அல்ல. தாங்களோ வித்தைகளைக் கசடறக் கற்றிருக்கிறீர்கள். ஆதலால் என்னோடு வந்து என் தந்தையைக் காணவேண்டும்" என்று கூறவே ஜீவகனும் அவன் வேண்டுகோளுக்கு இசைந்தான்.

பிறகு இருவரும் திருடமித்ரனிடம் போய்ச் சேர்ந்தனர். ஜீவகன் அரசனைச் சந்தித்தான். இருவரும் ஒரே மனப்பாங்கை உடையவர்களாக இருந்ததால் ஜீவகன், அரசனையும் தன்வயப்படுத்தினான். பிறகு மன்னன் ஜீவகனை நோக்கி எனது மைந்தர்களுக்கு வில்வித்தையைக் கற்பிக்க வேண்டும் என்றான். ஜீவகன் சரி என்று ஒப்புக்கொண்டு அவர்களுக்கு எல்லாக் கலைகளையும் கற்பித்தான். சில நாட்களில் அம்மைந்தர்கள் நல்லறிவுபெற்று வல்லவராய் விளங்கினார்கள். தன்புதல்வர்களின் திறத்தை அறிந்த வேந்தன் ஜீவகனை மிகவும் புகழ்ந்தான். பிறகு அரசன்,

"பேருதவி செய்த ஜீவகனுக்கு நான் என்ன கைமாறு செய்யக்கூடும் ? என் புதல்வியாகிய கனகமாலையை இவனுக்கு மணமுடித்துக் கொடுப்பேன்", என்று தீர்மானித்து, ஜீவகனிடம் தன் விருப்பத்தை வெளியிட்டான். ஜீவகனும் அதற்கு இசைந்தான். பிறகு அரசன் நல்ல நேரத்தில் தன் பெண்ணான கனகமாலையை ஜீவகனுக்கு திருமணம் செய்து கொடுத்தான்.



## 8. விமலாலம்பம்

ஜீவகன் கனகமாலையை மணம் முடித்த பின்னர், வெகுகாலம் அங்கு வசித்து வந்தான். அன்பு நிறைந்தவர் களுடன் வசித்தால் ஆண்டொன்று போனாலும் ஒரு கணநேரம் கழிந்தது போலத்தான் இருக்கும். பின்பு ஒரு சமயம் அவ்விடத்திற்கு வந்த ஒரு பெண், ஜீவகனிடம் ஆயுதங்கள் வைக்கும் அறையில் தங்களைப்போலவே இருக்கக்கூடிய ஒருவரைக் கண்டேன் என்று கூறினாள். ஜீவகன் அச்சொல்லைக்கேட்டு மிகவும் வியப்படைந்தான்.

பின்பு ஜீவகன் ஆயுதசாலைக்கு சென்று அங்கு நந்தாட்யனைக் கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தான். நந்தாட்யனும் ஜீவகனைக் கண்டதும், தான் பட்ட துன்பங்களை எல்லாம் மறந்தான். பின்பு ஜீவகன் தன் தம்பியிடம், "நீ இங்கே எவ்விதம் வந்தாய்", என்று கேட்க, நந்தாட்யன், "நீ தலைநகரிலிருந்து எங்களுடைய பாபவசத்தினால் வெளியே சென்றதும், நமது சுற்றத்தினரெல்லாம் துக்கசாகரத்திலே மூழ்கித் தவித்தனர். அதைக்கண்ட நானும் இறப்பதற்கு தீர்மானித்தேன். அப்போது தனது நுண்ணறிவால் உலக நடப்புக்களை

உணர்ந்த தங்கள் மனைவி கந்தர்வதத்தை எவ்வாறு இருக்கிறாள் என்பதை அறிய எனக்கு ஆவல் ஏற்பட்டது. உடனே நான் கந்தர்வதத்தையின் வீட்டிற்குச் சென்று துயருடன் நின்றேன். நான் அவளைப் பார்த்தவுடன் எனது உள்ளக்கிடக்கையை அறிந்த அவள், "நீர் ஏன் வருந்துகிறீர் ? உமது தமயனார் நலமாக வசித்து வருகின்றார். நான் மட்டும் விதிப்பயனால் அவரைப் பிரிந்து வருந்த நேரிட்டது. அவர் ஒவ்வொரு கிராமத்திலும் யாவராலும் போற்றப்படுகிறார். நீர் அவரை பார்க்க விரும்புகிறீர். ஆதலால் இப்படுக்கை மீது படுத்துக்கொள்ளும். நான் உம்மை அவரிடம் சேர்ப்பிக்கின்றேன். இக்கடிதத்தையும் அவரிடம் கொடும்' என்று கூறி கடிதத்தையும் கொடுத்து, மந்திர மகிமையினால் என்னை இங்கே அனுப்பி வைத்தாள்", என்று பதிலுரைத்தான். ஜீவகன் குணமாலை எழுதியதாகக் காணப்பட்ட, கந்தர்வதத்தை எழுதிய கடிதத்தை படித்துப் பார்த்து தனது பிரிவால் அவள் வருந்துகிறாள் என்பதை அறிந்து அவனும் வருத்தமடைந்தான். திருமண வீட்டினர் அனைவரும் நந்தாட்யனை சூழ்ந்துகொண்டு நல்வரவு கூறி தக்கபடி விருந்தோம்பல் செய்தனர்.

தமது பசுக்களை யாரோ ஓட்டிச் சென்றுவிட்டார்கள் என்று கதறி அழுதபடி இடையர்கள் அங்கு வந்தனர். அக்குரலைக் கேட்ட அரசன் அதற்கான காரணத்தை அறிந்து சினம்கொண்டான். அரசர்கள் குடிமக்களை ஆபத்தில் இருந்து காக்காவிட்டால் உலகில் மனிதர்கள் எவ்வாறு வாழமுடியும்? எனவே ஜீவகன் பசுக்களை மீட்பதற்காக புறப்பட்டுச் சென்றான். எதிரிகள் போருக்கு வருவதற்கு முன்னால் அந்நாட்டு ஆவினங்களைக் களவாடிச் செல்வர். அதனை எதிர்த்துப் போருக்குச் செல்லும் அரசனை வென்று ஆட்சியைப் பிடிப்பர். ஆனால் இங்கு பசுக்களைத் திருடியவர்கள் ஜீவகனுடைய நண்பர்களாகவே

இருந்தார்கள். ஆகவே, அரசனுக்குப் போர் புரிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. அதனால் அரசன் திருடமித்ரனுக்கு தனது மருமகன் ஜீவகனிடத்தில் மிகுந்த மதிப்பு ஏற்பட்டது. ஜீவகனும் தனது தோழர்களோடு சேர்ந்ததால் மிக்க மகிழ்ச்சியடைந்தான். அவர்களுள் சிறந்த நண்பனாக விளங்கிய பங்கஜானனனிடம், ஜீவகன் நடந்த விபரத்தைக் கேட்டான். நண்ப ! முன்பு தங்களைப் பிரிந்ததால் நாங்கள் மிக வருந்தினோம். பின்னர் ஒருவாறு தேறுதலடைந்து தங்களைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காகப் படையுடன் குதிரைமீதேறிக் கிளம்பி வெகுதூரம் சென்று களைப்பைத் தீர்த்துக்கொள்வதற்காக தண்டகாரண்யத்தில் உள்ள தபோவனத்திற்குச் சென்றோம். அங்கு எங்களுடைய நல்வினைப்பயனால் தவம் செய்யும் ஒரு புண்ணியவதியைக் கண்டோம். அந்தத் தாய் எங்களைப் பார்த்தவுடன், நீங்கள் யார் ? எங்கிருந்து வருகிறீர்கள் ? என்று கேட்டாள். அதற்கு நாங்களும் முறைப்படி பதில் கூறத் துவங்கினோம்.

நாங்கள் தலைநகரில் வசித்த வணிகர் மகன் ஜீவகனுடைய நண்பர்கள். நன்றி மறந்த மாயாவியாகிய காஷ்டாங்காரன் என்ற அரசன் ஜீவகனிடம் பொறாமை கொண்டு அவனை கொல்ல முயற்சித்தான் என்று சொன்னவுடன் அவள் மூர்ச்சை அடைந்து வீழ்ந்தாள். உடனே நாங்கள் அம்மா ஜீவகனைக் கொல்லவில்லை வருந்தவேண்டாம் என்று கூறியபின் அவள் நினைவு திரும்பி கண்ணீர் சிந்தினாள். அந்தப் பெண்மணி தனது அழுகையினூடே தங்களுடைய பிறப்புவளர்ப்பைக் கேட்டறிந்த நாங்கள் அவளைத் தேற்றி விடைபெற்றுக் கொண்டு இங்கே வந்து சேர்ந்தோம்" என்று கூறினான். பின்பு ஜீவகன் உடனே தன் தாயை பார்ப்பதற்கு முயற்சித்தான். தனக்குத் தாயைப் பார்க்க விருப்பமதிகரிப்பதைத் தன் மனைவியிடமும் மாமன் முதலோரிடமும் தெரிவித்து

அவர்களை அங்கேயே இருக்கச் செய்துவிட்டுத் தான் மட்டும் தண்டகாரண்யம் வந்துசேர்ந்தான். அங்கே அவன் தாயைக் கண்டு நமஸ்கரித்து அன்பால் உருகி நின்றான். மகன் பிறந்தவுடனேயே பிரிந்ததால் உண்டான துக்கத்தை மகனைக் கண்டதால் நீக்கிக் கொண்டாள்.

பின்பு விஜயை புதல்வனைப் பார்த்து அவன் அரசனாக வேண்டும் என்று விரும்பினாள். ஜீவகனும், "அம்மா ! நீ வருந்த வேண்டாம். நான் தந்தையின் பதவியை நிச்சயமாக அடைவேன்" என்றான். அவனது சொல்லைக் கேட்ட அந்த தாயும் அரசு கைக்கு வந்துவிட்டது என்றே எண்ணி மகிழ்ந்தாள். பின்பு செயல் முடிக்கும் திறமை படைத்த ஜீவகன் தனது தாயை தாய்மாமன் வீட்டிற்கு அனுப்பி வைத்தான்.

பிறகு ஜீவகன் தண்டகாரண்யத்தினின்றும் நண்பர்களுடன் கிளம்பி தலைநகருக்கு அருகிலுள்ள பூங்காவனத்திற்கு வந்து, தன் தோழர்களை அங்கேயே இருக்கும்படி சொல்லிவிட்டு அந்நகரைச் சுற்றிப் பார்க்கச் சென்றான். அப்பொழுது மாளிகை மீதிருந்து பந்து விளையாடிக்கொண்டிருந்த ஒரு பெண் அந்தப் பந்தை கீழே வீசினாள். பந்து விளையாடிய பெண்ணைக் கண்டு ஜீவகன் மனதைப் பறிகொடுத்தான். அவள்மீது கொண்ட ஈடுபாட்டின் காரணமாக அவன் அந்த மாளிகையின் முன்பக்கமிருக்கும் திண்ணையில் சென்று அமர்ந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் அவ்வீட்டுக்காரனாகிய சாகரதத்தன் தன்னிடமிருந்த சரக்குகளையெல்லாம் விற்றுவிட்டு ஜீவகனிடம் வந்து, "இது என் வீடு. என்பெயர் சாகரதத்தன். என் மனைவிக்கு கமலா என்று பெயர். எங்களுக்கு விமலா என்றொரு புதல்வி இருக்கின்றாள். அவள் பிறந்தவுடன் ஜோதிடர்கள் வெகுகாலமாய் விற்காமல் குவிந்திருக்கும் இரத்தினங்கள் எவன் உமது வீட்டில் வந்து உட்கார்ந்தவுடன் விற்கின்றனவோ, அவனே இப்பெண்ணுக்கு கணவனாவான்

என்று தெரிவித்தார்கள். நீர் எனது வீட்டில் அமர்ந்தவுடன் வெகுகாலமாய் விற்காமல் குவிந்திருந்த இரத்தினங்கள் எல்லாம் விற்றுவிட்டன. ஆதலால் பாக்கியவானாகிய நீர் தடை சொல்லாமல் எனது புதல்வியை மணந்துகொள்ள வேண்டும்" என்று தெரிவித்தான். ஜீவகனும் அவளை மணப்பதற்கு இசைந்தான். ஒரு சுபமுகூர்த்தத்தில் சாகரதத்தன் தன் புதல்வியாகிய விமலாவை சத்யந்தரனின் மகன் ஜீவகனுக்கு அக்னி சாக்ஷியாக திருமணம் செய்து கொடுத்தான்.

....-:-....

## 9. ஸுரமஞ்ஜரீலம்பம்

ஜீவகன் தான் மணந்துகொண்ட விமலாவுடன் சிலகாலம் அங்கேயே வசித்துக்கொண்டிருந்தான். பின்பு அவன் தனக்கு வெளியே சென்று செயல் முடிக்க வேண்டி யிருப்பதைத் தன் மனைவி முதலியோரிடம் தெரிவித்து. தன் தோழர்களுடன் அங்கிருந்து புறப்பட்டான். அப்பொழுது விகடகவி புத்திஸேனன் என்ற நண்பன் ஜீவகனைப் பார்த்து, "நண்பனே ! இந்நகரத்திலேயே ஆடவர் முகத்தையே காண்பதில்லை என்று நோன்பு கொண்டிருக்கும் ஸுரமஞ்ஜரியை நீ மணந்து வந்தால் அப்பொழுது நீ சிறந்தவனாவாய். உனது முற்பிறவியில் செய்த நல்வினைப்பயன் நீ ஸுரமஞ்ஜரியை திருமணம் செய்வதில்தான் இருக்கிறது" என்று கூறினான். ஜீவகனும், "நீ கூறியபடியே நான் ஸுரமஞ்ஜரியை மணந்து வருகிறேன்" என்று கூறி விடைபெற்றுச் சென்றான்.

தான் கிழவன் வேடத்தில் சென்றால்தான் ஸுரமஞ்ஜரியைக் காணமுடியுமென்று ஜீவகன் தீர்மானித்து, முன்பு யக்ஷன் தனக்கு உபதேசித்த மந்திர மகிமையினால்

கிழத்தனமுள்ள உருவத்தை வரவழைத்துக்கொண்டு அந்நகரமெங்கும் சுற்றிவிட்டுப் பின்னர் ஸுரமஞ்ஜரியின் மாளிகைக்குச் சென்றான். அங்கே காவல் காக்கும் பெண்கள் ஜீவகனைப் பார்த்து, " ஐயா ! நீர் யார் ! இங்கு வந்த காரணம் யாது ?" என்று வினவ, அவன் எனக்குப் பசி மிகுதியாக இருப்பதால் ஏதேனும் உண்ணக் கொடுங்கள்" என்றான். அவர்கள் உள்ளே செல்ல எந்தவித தடையும் செய்யாமல் மாளிகைக்குள் அவன் செல்ல வழிவிட்டனர்.

ஸுரமஞ்ஜரியின் தோழிகள் கிழவன் வந்திருக்கும் விஷயத்தைப் பயத்துடன் எஜமானிக்குத் தெரிவித்தனர். ஆடவர் முகத்தையே வெறுத்தவந்த ஸுரமஞ்ஜரியும் அக்கிழவனை அமரச்செய்தாள். பின்பு கிழவன் தனக்கு பசியாயிருப்பதாக அறிவித்தான். உடனே ஸுரமஞ்ஜரி பசியோடு இருக்கும் அவனுக்கு உணவளித்தாள். பின்பு அக்கிழவன் களைத்தவன் போல, அங்கிருக்கும் கட்டில் மேல் படுத்தான். பிறகு அவன் யாவர் மனத்தையும் வசப்படுத்தக் கூடிய ஒரு பாட்டை இனிய குரலில் பாடினான். அதைக்கேட்ட ஸுரமஞ்ஜரி இசையில் அவனுக்கு இருந்த திறமையைக் கண்டு அவனை வலிமைப் படைத்தவனாக எண்ணினாள். அவள் தன் விருப்பத்தை இவனிடம் தேர்வு செய்து பார்ப்பதற்கு முடிவு செய்தாள். அவனுக்கு இசையைப் போல வேறு ஏதாவது கலைகளில் தேர்ச்சி உண்டா என்று அறிய விரும்பினாள். அறிஞனான ஜீவகன், தான் எதையும் சாதிக்க வல்லவன் என்று கூறினான். வேண்டுவதை விரும்பிப் பெறும் வரத்தை அடைவதற்கான வழியை ஸுரமஞ்ஜரி ஜீவகனிடம் யாசித்தாள். ஜீவகனும் விரும்பியதைத் தரக்கூடிய காதற்கடவுளைக் குறித்த மந்திரத்தை அவளுக்கு உபதேசம் செய்தான். ஸுரமஞ்ஜரியும் தான் விரும்பியது கைவரப்பெற்றதாக நினைத்தாள். மறுநாள் பொழுது புலர்ந்ததும், ஸுரமஞ்ஜரி, காமக்கோட்டத்திற்குச் சென்று

ஸ்வாமி எனக்கு ஜீவகனையே மணவாளனாகத் தரவேண்டும், என்று கூறி வணங்கினாள். அப்பொழுது அக்கடவுளின் பின் மறைந்திருந்த புத்திஸேனன், "பெண்ணே நீ விரும்பியவாறே ஜீவகனைக் கணவனாகப் பெறுவாய்; நீ வருந்தாமல் உன்னிருப்பிடம் செல்" என்று கூறினான். அவள் தனக்குத் தெய்வம் கூறியதென்றே நினைத்து மகிழ்ச்சியுடன் போய்ச் சேர்ந்தாள். அந்த நேரத்தில், ஜீவகனை இளமையாகக் கண்டு அவள் வெட்கமடைந்தாள். பின்பு ஜீவகனின் தோழர்கள் ஸுரமஞ்ஜரியின் தந்தை குபேரதத்தனிடம் சென்று, தங்கள் புதல்வியை ஜீவகனுக்கு மணம் செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டனர். அவன் அதைக்கேட்டு மகிழ்ந்து தன் புதல்வியின் சம்மதத்தையும் அறிந்துகொண்டு ஸுரமஞ்ஜரியை ஜீவகனுக்கு திருமணம் செய்து கொடுத்தான். ஜீவகனும் அவளை விதிப்படி ஏற்றுக் கொண்டான்.



## 10. லக்ஷ்மணாலம்பம்

பிறகு ஜீவகன் நண்பர்களுடன் அங்கிருந்து புறப்பட்டுத் தன் பெற்றோரின் மாளிகைக்குச் சென்று கந்தோத்கடனையும் சுநந்தையையும் வணங்கினான். அவன் பிரிவால் வருந்தியிருந்த அவர்கள் அவனைக் கண்டதும் மிகுந்த மகிழ்ச்சியடைந்தனர். பிறகு ஜீவகன் கந்தர்வத்தை குணமாலை இருவரையும் கண்டு, அவர்களையும் மகிழச்செய்தான். பின்னர், அவன் தன் பகைவனை ஒழிப்பதற்கு இனி தான் செய்ய வேண்டிய செயல்களைக் குறித்து கந்தோத்கடனுடன் ஆலோசித்தான். அதன்படி ஜீவகன் விதேஹ நாட்டின் தலைநகரான தரணீதிலகம் என்ற ஊரை அடைந்தான். அங்கு அவன் மாமனாகிய

கோவிந்தராஜன், ஜீவகனையும் அவன் தோழர்களையும் தக்கபடி உபசரித்தான். கோவிந்தராஜனும் காஷ்டாங்காரனோடு தாமதமின்றி போர்புரிந்து அரசை மீட்க வேண்டுமென்று தீர்மானித்தான். அமைச்சர்களின் வாயிலாக கோவிந்தராஜன், காஷ்டாங்காரன் அனுப்பிய செய்தியை ஜீவகனுக்கு தெரியப்படுத்தினான். காஷ்டாங்காரன் விதேஹ நாட்டு மன்னனுக்கு அனுப்பிய செய்தியாவது, "சத்தயந்திர வேந்தனை நான் கொன்றதாக பொய்ப்பழி நகரமெங்கும் பரவியிருக்கிறது. இதைப் பலர் உண்மையென்றே நம்புகின்றனர். உண்மையை அறிவதில் திறமையுள்ள நீ இதை மெய்யென்று நம்பமாட்டாய். நடந்தது என்னவென்றால் பட்டத்து யானை ஒருநாள் மதவெறிகொண்டு தேர்களையும், குதிரைகளையும், வீரர்களையும் வதைக்கத் தொடங்கிற்று. அதனால் அரசன் அதை அடக்கும்படி யானைப்பாகர்களை அனுப்பினான். அவர்களையும் அது அழித்துவிட்டது. பின்பு அரசன் தானே அதை அடக்கி கட்டுத்தறியில் கட்ட முயற்சிக்கும்போது அவ்வேழம் அரசனை துதிக்கையால் பற்றி இழுத்துக் காலின் கீழ்போட்டு மிதித்துக் கொன்றுவிட்டது. அதனால் அவருடைய அரசை நான் ஏற்க நேர்ந்தது. எனக்கு நேர்ந்திருக்கும் பெரும்பழியை நீக்கவேண்டும்" என்பது. இச்செய்தியை அறிந்த கோவிந்தராஜன், காஷ்டாங்காரன் நம்மை வஞ்சகமாய் கொல்ல நினைத்திருக்கிறான். இதைக் கொண்டே நாமும் அவனைக் கொல்ல முயல வேண்டும். இதன்படி நாம் காஷ்டாங்காரனுடன் பகையையொழித்து நட்பு கொண்டதாக முதலில் தெரிவித்துவிட்டு பின்பு நமது படைகளை ஒன்று சேரும்படி பறையறைவிக்க வேண்டும் என்றான். உடனே மந்திரி, "நமது அரசர் காஷ்டாங்காரனுடன் நட்புரிமை பூண்டார். ஆதலால் நமது நாட்டு குடிகள் அனைவரும் எல்லா இடங்களையும் அழகுபடுத்தி விழாக் கொண்டாட்டங்களைத் தொடங்க வேண்டும்" என்று பறையறையும்படி உத்தரவளித்தார்.

"நமது மன்னன் தலைநகர் செல்லக் கருதி இருப்பதால், நமது வீரர்கள் யாவரும் ஆயுதங்களோடும், நால்வகைச் சேனைகளோடும், நமது கோட்டைக்கு வந்து சேரவேண்டும்" என்று மீண்டும் பறையறையும்படி உத்தரவிட்டான். உடனே வீரர்கள் யாவரும் அவ்வாறே அரசனது கோட்டைக்கு வந்தனர். பின்னர் கோவிந்தராஜன் ஒரு நல்ல நேரத்தில் தானங்களைச் செய்துவிட்டு ஜீவகனுடன் தலைநகர் போய்ச் சேர்ந்தனர். அவன் வந்திருப்பதை அறிந்த காஷ்டாங்காரன் மகிழ்ந்து அவனுக்கு சில குதிரைகளையும், வீரர்களையும் கோவிந்தராஜனிடம் காணிக்கையாக அனுப்பினான். கோவிந்தராஜனும் அவனுக்கு பதில் காணிக்கைகளை அனுப்பினான்.

கோவிந்தராஜன் காஷ்டாங்காரனைக் கொல்ல எண்ணியிருந்தான். அதனால் அவன் தன் மகளை திருமணம் செய்ய விரும்புபவர் பரிசமாக சுழல் இயந்திரத்தில் வெற்றியடைவதைப் பணயமாக வைத்தான். இதைக்கேட்ட பல அரசர்கள் லக்ஷ்மணாவை மணக்க விரும்பி அங்கே வந்து கூடினர். சிலர் அந்த இயந்திர அமைப்பையும் அதில் சுழலும் பன்றிகளையும் பார்த்துவிட்டு, "இப்பன்றிகளை ஓரம்பால் வீழ்த்துவது இயலாத காரியம்" என்று திரும்பிச் சென்றனர். உடனே ஜீவகன் யந்திரத்தின் அருகிற்சென்று அப்பன்றிகள் மூன்றும் ஒன்று சேருவதை உற்று நோக்கிச் சுழலும் சக்கரத்தின் மேலேறி ஓர் அம்பை எய்தான். உடனே அப்பன்றிகள் மூன்றும் கீழே வீழ்ந்தன. அப்பொழுது கோவிந்தராஜன் ஜீவகனது பிறப்புண்மையை அனைவருக்கும் அறிவித்து, பன்றிகளை வீழ்த்தியவனே ஜீவகன் என்றும் தெரிவித்தான். அதைக் கேட்டு அரசர்கள் மகிழ்ச்சி அடைந்தனர்.

ஜீவகனைக் கண்டதும் காஷ்டாங்காரன் சிங்கத்தைக் கண்ட வேழம் போல் நடுங்கி, "ஐயோ ! இவனைக்

கொன்றுவிட்டதாக மதனன் என்னிடம் கூறினானே! என்னை ஏமாற்றிவிட்டானே! இனி நான் தப்புவதெப்படி ? ஜீவகன் சுத்த வீரனல்லவா, அவனை வெல்லுவது எங்ஙனம். தப்பெண்ணம் கொண்ட அவன் மாமனையும் நான் இங்கே வரவழைத்து மோசம் போனேன். நெருப்புக்குக் காற்று சேர்ந்தது போல் ஜீவகனுக்குக் கோவிந்தராஜனும் துணையாகப் படையுடன் வந்திருக்கிறானே !" என்று எண்ணிச் சோர்வடைந்தான்.

இவ்வாறு சிந்தனைவயப்பட்ட எதிரி, காஷ்டாங்காரனை, ஜீவகனின் நண்பர்கள் மிரட்டத் தொடங்கினர். ஜீவகனின் நண்பர்கள் தன்னை மிரட்டுவதைக் கண்டு காஷ்டாங்காரன், அவனுடன் போர்புரிய விரும்பினான். ஒரு சில அரசர்கள் குரு வம்சத்தில் தோன்றிய ஜீவந்தரனின் பக்கமும் ஒரு சிலர் எதிரி காஷ்டாங்காரனின் பக்கமும் போருக்காக அணிவகுத்தனர். பின்பு ஜீவகன் வில்லை வளைத்து கணக்கற்ற அம்புகளைப் பகைவர் மேல் எய்தான். அதனால் பல வீரர்கள் இறந்தனர். காஷ்டாங்காரன் மிக்க சினத்துடன் தன் உடைவாளை உருவிக்கொண்டு ஜீவகன் மேல் பாய்ந்தான். உடனே ஜீவகன் அவன் மேல் கூரிய ஒரு அம்பைத் தொடுத்து அவனைப் பூமியில் வீழ்த்திவிட்டான். இதைக் கண்டு ஜீவகன் சேனைகள் ஆரவாரம் செய்தனர். தலைநகரில் உள்ள யாவரும் மகிழ்ந்தனர். விஜயா இப்பொழுது வீரனின் தாய் ஆயினள்.

அப்பொழுது அந்நாட்டிலுள்ள குடிகள், "ஜீவகன் இளவரசனாக ஜனித்ததென்ன! சுடலையில் பிறந்ததென்ன! மீண்டும் அரசாட்சியைப் பெற்றதென்ன ! கர்மங்களின் விசித்திரத்தை அறிந்தவர் யார்! சுகதுக்கங் களுக்குக் காரணம் புண்ணிய பாவங்களேயாகும். சிலந்திப்பூச்சியின் நூல்கள்

கிணற்றில் விழுவோரைத் தடுக்க முடியுமோ ? ஜீவகன் தன்னைக் கொல்ல விரும்பிய காஷ்டாங்காரனை கொன்று அரசாட்சியை பெற்றான். அரசனை வஞ்சனையால் கொன்றுவிட்டு தான் மட்டும் வாழவேண்டுமென்றெண்ணிய இந்தக் காஷ்டாங்காரனும் அழிந்தான்" என்று பேசிக்கொண்டார்கள்.

பின்பு, ஜீவகன் அரண்மனையில் இருப்பதால் காஷ்டாங்காரன் உறவினர்கள் ஜீவகனால் தங்களுக்கு தீங்கு நேரிடுமோ என்று அஞ்சினர். மாறாக அவர்கள் இன்புற்று இருக்கவே ஜீவகன் விரும்பினான். பிறகு ஜீவகன் நந்தாட்யனை இளவரசனாகவும், ஜீவகனின் வளர்ப்புத் தந்தையும் நந்தாட்யனின் தந்தையுமான கந்தோத்கடனை வயது முதிர்ந்த அரசனுக்குரிய பதவியிலும் அமர்த்தினான். இவ்வாறு தனது தாய் விஜயாவையும், தனது வளர்ப்புத்தாய் சுனந்தாவையும் உலகினர் போற்றும்படிச் செய்தான். பின்னர் ஜீவகன் வெவ்வேறு இடங்களில் இருந்த மனைவியர் ஏழு பேர்களையும் தன் அரண்மனைக்கு வரவழைத்தான். அவர்கள் ஜீவகனின் பிரிவால் வருந்தியிருந்தவர்களாகையால் ஜீவகனைக் கண்டதும் அளவற்ற மகிழ்ச்சியடைந்தனர். அங்குள்ள பெரியோர்கள் ஜீவகனுக்கு லக்ஷ்மணாவை விவாகம் செய்து வைக்கக் கருதி நல்லநேரத்தை நிச்சயித்தனர். குறித்த நாளில் அரண்மனையில், அமைச்சர்கள், சிற்றரசர்கள், படைத்தலைவர்கள் முதலியோர் வந்து சேர்ந்தனர். நல்லதொரு நேரத்தில் கோவிந்தராஜன் தன் புதல்வியாகிய லக்ஷ்மணாவை ஜீவகனுக்கு முறைப்படித் திருமணம் செய்து கொடுத்தான். அங்கு வந்திருந்த அரசர்கள் அவ்விழாவினைக் கொண்டாடி மகிழ்ந்தார்கள்.



## 11. முக்திஸ்ரீலம்பம்

பிறகு ஜீவகன் அரசாகிய செல்வத்தையும் லக்ஷ்மணா என்ற மனைவியையும் பெற்று மிகுந்த மகிழ்ச்சி அடைந்தான். ஜீவகன் அரசாட்சியைப் பெற்ற பின்பும் சகல நற்குணங்களோடும் விளங்கினான். அவன் கப்பம் வாங்கிய பொருளை எல்லாம் குடிகளின் நன்மையின் பொருட்டே செலவு செய்தான். நண்பன் உதாசீனன், சத்ரு இவர்களின் நாடுகளில் ஒற்றர்களை அனுப்பி செய்திகளை உணராவிடினும், தன்னுடைய அறிவின் கூர்மையால் அதனை உணர்ந்தான். மிகுந்த முயற்சியின் பின் கிடைத்த ஒரு அரசை காப்பாற்றுவது என்பது தவம் இயற்றுவதற்கு சமமானது. சிறிது மயக்கத்தினால் வீழ்ச்சியும், கவனம் தவறாமையால் உயர்வும் ஏற்படுகிறது. ஜீவகன் விழிப்புடன் இந்த உலகை ஒரே ஒரு நகரம் போல் காத்துவரும்போது பூதேவியும் நல்ல அரசனை பெற்றவளாயும், இரத்தினங்களை உண்டாக்குபவளாயும் ஆயினள்.

இவ்வாறு ஜீவகன் விளங்கிவரும்பொழுது விஜயையானவள், என் புதல்வன் அரசாட்சி புரிவதையும், என் கண்ணால் கண்டு விட்டேன்; முன்பு எனக்கு உதவி செய்த எல்லோருக்கும், அவர்கள் செய்த செயல்களுக்கான நன்றிக்கடன் செலுத்தப்பட்டுவிட்டது. நான் செய்த நற்செயல்களுக்கும், தீச்செயல்களுக்கும் பயன்கள் என்னாலே என்னிடத்திலேயே கண்டு கொண்டேன். ஆதலால் நான் இனிப் புதல்வனிடம் வாஞ்சையை விட்டுவிட்டுத் தவம் செய்வதே தகுதியானது. அறிந்திருந்தும் அக்னியில் விழுவது தீயோர் செய்கையன்றோ ! என்று உணர்ந்த அந்த விஜயா துறவறம் மேற்கொண்டாள். அதைக் கண்டு சுனந்தாவும் துறவறத்தை மேற்கொண்டாள். பின்பு இருவரும் ஜீவகனை வாழ்த்தி, அவனிடம் அனுமதி பெற்று தவம் செய்வதற்காக காட்டிற்குச் சென்றனர். ஜீவகனும் அவர்கள் அடியொற்றிச் சென்றான்.

பிறகு வனத்திலுள்ள 'பத்மா' என்ற தவசியானவள் விஜயைக்கும், ஸுநந்தைக்கும் தவம் செய்வதற்குரிய வழியைத் தெரிவித்தாள். அவள் ஜீவகனைப் பார்த்து, "தவம் செய்வோரை எப்பொழுதும் ஒருவரும் தடை செய்வது கூடாது. முதுமை பருவத்திலாகிலும் அறிவாளிகள் தீக்ஷையை ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆதலால் நீ தாயின் பிரிவுக்கு வருந்தாமல் நாட்டுக்குச் சென்று, செங்கோல் செலுத்தி வா !" என்று உபதேசித்தாள். ஜீவகன் ஒருவாறு சமாதானமடைந்து தவசினியையும் தாய்மாரையும் வணங்கிவிட்டுத் தனது அரண்மனைக்கு வந்து அரசு செலுத்தினான். சிறந்த அறிவையுடைய ஜீவகன் இந்திரபோகத்தை அனுபவித்துக்கொண்டு முப்பது ஆண்டுகள் அரசாட்சி செய்தான்.

ஒரு சமயம் வசந்த காலத்தில் ஜீவகன் தன் மனைவியருடன் ஆற்றில் ஜலக்கரீடை செய்து மகிழ்ந்தான். களைப்பினால் தோட்டத்தில் கொடிப்பந்தலில் உட்கார்ந்துகொண்டு, அங்கே குரங்குகள் விளையாடுவதைப் பார்த்துக்கொண்டிருந்தான். அங்கே ஓர் ஆண் குரங்கு தான் வேறு ஒரு பெண் குரங்கோடு சேர்ந்ததால் கோபித்திருந்த தன் மனைவியான பெண் குரங்கைப் பலவாறு முயன்றும் சமாதானப்படுத்த முடியவில்லை. உடனே சூதுள்ள ஆண் குரங்கு இறந்தது போல் கீழே படுத்துவிட்டது. அதைக் கண்ட பெண் குரங்கு உடனே ஓடிவந்து ஆண் குரங்கைக் கையால் தடவிக் கொடுத்துச் சமாதானப்படுத்தியது. பிறகு ஆனந்தமுற்ற ஆண் குரங்கு தன் மனைவிக்கு ஓர் பலாப்பழத்தைக் கொடுத்தது. உடனே தோட்டக்காரன் கையில் தடியுடன் வந்து குரங்கை அதட்டிவிட்டு அப்பழத்தைப் பிடுங்கிச் சென்றான். இவற்றையெல்லாம் கண்டதும் அறிவாளியாகிய ஜீவகன் வைராக்கியமடைந்து தத்துவங்களைச் சிந்திக்கலானான். தன்னைத் தோட்டக்கார னாகவும், கைப்பழமிழந்த குரங்கைக் காஷ்டாங்காரனாகவும், அரசைப் பழமாகவும் உருவகப்படுத்திச் சிந்தித்தான்.

ஆதலால் அரசாட்சியை விலக்க வேண்டும் என்று எண்ணினான். "ஹே ஆத்மாவே ! பிராணிகள் பிறக்கின்றன, வளர்கின்றன, இறக்கின்றன. எவரும் எப்பொழுதும் இருப்பதில்லை. இவ்வுலகில் உள்ள பொருட்களில் ஒரு சில நெடுங்காலம் வாழ்ந்தும் அழிந்து விடுகின்றன. ஆகவே இந்த உலகப்பொருட்களின் மீது இருக்கக்கூடிய ஈடுபாட்டை விட்டுவிட வேண்டும். அப்போது தான் வீடுபேறு கிடைக்கும். இல்லையென்றால் மீண்டும் இந்த உலக வாழ்க்கைதான். உயிரே உனது நன்மைக்காக அப்பழுக்கற்ற வீடுபேற்றை கொடுக்கக்கூடிய நிலையான ஜைன அறத்தை மேற்கொள்வாயாக. அது ஒன்றே வீடுபேறுபெறும்வரை உலகப் பொருட்களினின்று விடுதலையை வழங்கக்கூடியது" என்று சிந்தித்த, ஜீவகனுக்கு ஐம்புலன்களால் ஏற்படும் இன்பங்களில் நாட்டம் இல்லாமல் போய்விட்டது. சரியான நேரத்தில் வந்தடைந்த இப்படிப்பட்ட உணர்வு சான்றோர்களுடைய நல்லொழுக்கத்தை நிலைநிறுத்துவது அன்றோ ! இவ்வாறு ஈடுபாடு அற்றுப்போன ஜீவகன் அரசையும், மற்ற செல்வங்களையும் ஒரு புல்லாகக்கூட மதிக்கவில்லை.

அங்கிருந்து புறப்பட்ட ஜீவகன் இறைவனை வணங்கிவிட்டு, ஒரு முனிவரிடம் மாணவனாக சேர்ந்து ஜைனமதகோட்பாடுகளைக் கற்றுக்கொண்டான். அந்த அறத்தைக் கற்ற ஜீவகன் தூய்மையான அறத்தின் அறிவைப் பெற்றவன் ஆனான். தனது முற்பிறவியைப் பற்றிய அறிவைப் பெறவேண்டும் என்ற எண்ணத்தில் தனக்கு உபதேசம் செய்த முனிவரை தனது முற்பிறவியை பற்றிக் கூறுமாறு வின்வினான். அவரும் அதனை ஜீவகனுக்கு எடுத்துரைத்தார்.

"அரசே, தாதகீஷண்டம் என்ற இடத்தில் பூம்யாதி திலகம் என்ற நகரில் பவனசேனன் என்ற அரசனுக்கு

யசோதரன் என்ற பிள்ளையாக நீ பிறந்தாய். அந்தப்பிறவியில் ஒரு சமயம் நீ, ஒரு அன்னப்பறவையின் குஞ்சு ஒன்றை அதனுடைய கூட்டிலிருந்து விளையாட்டாகப் பிரித்து எடுத்து வந்து எந்தவிதமான குறையுமில்லாமல் வளர்த்து வந்தாய். இச்செய்தியை கேட்டறிந்த, அறத்தை நன்கறிந்த உனது தந்தை நீ சிறந்த அறவோனாக திகழ வேண்டும் என்பதற்காக அறத்தை உனக்கு உபதேசித்தான். பிறகு தந்தை தடுத்தும் கேளாமல் நீ வைராக்யமாய், உனது எட்டு மனைவியருடன் ஜைன தீக்ஷையை ஏற்றுக்கொண்டாய். பின்பு நீ கடும் தவம் புரிந்து தேவர் உருவத்தை அடைந்து, அதனின்று இப்படிப்பட்ட எட்டு பெண்களுடன் இந்தப் பிறவியை எடுத்தாய். முற்பிறவியில் நீ, அன்னத்தின் குஞ்சை பெற்றவர்களிடம் இருந்து பிரித்ததால், இப்பிறவியில் உனக்கு உறவினர்களிடமிருந்து பிரிவும், இப்படிப்பட்ட பந்தங்களும் ஏற்பட்டது என்று தெரிவித்தார். இவ்வாறு முனிவர் மொழிந்ததைக் கேட்ட ஜீவகன் இடியுண்ட நாகம் போல் நடுங்கி, முனிவரை வணங்கி, விடைபெற்று நகருக்குச் சென்றான்.

அரசாட்சியில் வெறுப்புற்ற ஜீவகன், மனைவிகளுக்குத் தருமோபதேசம் செய்தான். அதைக் கேட்டதும் அவர்கள் அரச இன்பங்களை நஞ்சாக எண்ணினர். ஜீவகன் கந்தர்வதத்தையின் புதல்வனாகிய சத்யந்தரனுக்கு முடிசூட்டி, அரசை ஒப்படைத்துவிட்டு, மனைவியருடன் தபோவனத்திற்குச் சென்றான். பின்பு அவன் ஸ்ரீசபைக்குப் போய் ஜினதேவரைப் பூஜித்துத் துதிக்கலானான். பகவானே! நான் உலக வாழ்வு என்னும் நோயால் பீடிக்கப்பட்டு பயப்படுகின்றேன். நீ எல்லோருக்கும் நன்மை செய்பவன். எல்லாவற்றையும் அறிந்தவன். எல்லா கடமையையும் விட்ட எனக்கு உலக வாழ்வாகிய நோய் ஏன் நீங்கவில்லை ? தேவனே ! நீர் பிறவிக் கடலுக்கு மாலுமியாய் இருக்கின்றீர் ! பிறவிக்கடலின் நடுவில் மூழ்கியிருக்கும் எனக்கு நற்காட்சி,

நல்லறிவு, நல்லொழுக்கம் என்னும் இரத்தினத்திரயமாகிய மரக்கலம் எனக்கு கிடைத்திருக்கிறது. அது எனக்கு முக்தியை அளிக்க வேண்டும்" என்றான்.

இவ்வாறு துதித்த ஜீவகன் வர்த்தமான ஸ்வாமியிடம் அனுமதி பெற்று, ஜினதீக்ஷையை ஏற்றுக்கொண்டு கணநாதரை வணங்கினான். பின்பு அவன் அந்த கணநாதருடைய அருகிலேயே துறவு மேற்கொண்டான். எட்டுவிதமான பிரகார கருமங்களையும் முறைப்படி விட்டொழித்து, மிகக் கடுமையான தவத்தை மேற்கொண்டான். அதனால் ரத்னத்ரயங்களில் முழுமை அடைந்ததால் ஜீவகன் என்னும் மாமுனிவன் எட்டுவித குணங்களால் முழுமையடைந்தான்.

குணங்களால் க்ஷத்ரியர்களுக்கு சூடாமணி போன்றவனும் தேஜசாலும், வயதாலும், திறமையாலும், சிறந்த செல்வங்களினாலும் குபேரனைப் போன்றவனும் அரசர்கரசனுமான இவ்வரசன் எப்பொழுதும் நன்கு விளங்கட்டும்.

முன்கதைச் சுருக்கம் முற்றிற்று



श्रीः

श्री वादीभसिंहविरचितः

# क्षत्रचूडामणिः

வாதீபஸிம்ஹன் இயற்றிய

# க்ஷத்ரசூடாமணி

பாகம் - II

## षष्टोलम्भः

## क्षेमश्रीलम्भः

## க்ஷேமஸ்ரீலம்பம்

अथोपयम्य पद्मां तां रमयन्नप्ययाततः ।
असक्तो हि सुखं भुङ्क्ते कृतार्थोऽपि जनः कृती ॥ 1

अथ - பிற்பாடு, तां पद्मां - அந்த பத்மையை, उपयम्य - விவாஹம் பண்ணி, रमयन्नपि - ரமியாநின்றவனாய்க் கொண்டு, ततः - அங்கு நின்றும், अयात् - அடைந்தான். (तथाहि) कृतार्थोऽपि - க்ருதார்த்தமான, कृती - புண்யவானாக, जनः - ஜனமானது, असक्तः - ஆசக்தி இல்லாதவனாய், सुखं - சுகத்தை, भुङ्क्ते हि - அனுபவியாநின்றதன்றோ. 1

*பொருள் : - பிறகு, பத்மா என்ற அப்பெண்ணை மணம் முடித்து, அதன்பின் அங்கிருந்து புறப்பட்டான். தான் விரும்பிய பொருளை அடைந்து விட்டாலும் கூட, முயற்சியுள்ள ஒரு மனிதன் எந்தவித ஈடுபாடும் இன்றியே இன்பத்தை அடைகிறான்.*

पद्मा तु तद्वियोगेन दुःखसागरसादभूत् ।
तत्वज्ञानविहीनानां दुःखमेव हि शाश्वतम् ॥ 2

तु - பின்னை, पद्मा - பத்மையானவள், तद्वियोगेन - ஜீவந்தரன் பிரிந்ததினாலே, दुःखसागरसात् - துக்கமாகிற சமுத்திரத்தினின்றும், अभूत् - ஆனாள், तत्वज्ञानविहीनानां - தத்வஞானமில்லாதவர்களுக்கு, दुःखमेव शाश्वतम् हि - நித்யமன்றோ. 2

*பொருள் : - பத்மா அவனது பிரிவினால் துயரக்கடலில் மூழ்கினாள். பகுத்தறிவற்றவர்களுக்கு (உண்மையறிவு அற்றவர்களுக்கு) துயரே நிரந்தரம்.*

लोकपालजनैर्नायं रोद्धुं शेके गवेषिभिः ।
प्रतिहन्तुं न हि प्राज्ञैः प्रारब्धं पार्यते परैः ॥ 3

गवेषिभिः - தேடப்பட்டிருக்கிற, लोकपालजनैः - லோகபாலனுடை ஜனங்களினாலே, अयं - இந்த ஜீவந்தரனானவன், रोद्धुं - தடை பண்ணுகிறதற்கு, शेके - சமர்த்தமானவன், न - அல்ல, प्राज्ञैः - ஞானவான்களினாலே, प्रारब्धं - துடங்கின காரியத்தை, परैः - அன்யர்களினாலே, प्रतिहन्तुं - கெடுக்கிறதுக்கு, पार्यते - சமர்த்தமாகாநின்றது, नहि - இல்லையன்றோ. 3

*பொருள் : - அரசனால் அனுப்பப்பட்ட ஏவலர்கள் தேடியும் அவனைத் தடை செய்ய (கண்டுபிடிக்க) முடியவில்லை. அறிவாளிகள் தொடங்கிய செயலை மற்றவர்கள் கடை செய்ய முடியாதன்றோ ?*

सत्वरं गत्वरः स्वामी तीर्थस्थानान्यपूजयत् ।
पावनानि हि जायन्ते स्थानान्यपि सदाश्रयात् ॥ 4

सत्वरं - சீக்கிரமாக, गत्वरः - போகாநின்றிருக்கிற, स्वामी - ஜீவந்தர ஸ்வாமியானவன், तीर्थस्थानानि - தீர்த்தஸ்தானங்களை, अपूजयत् - பூஜித்தான். (तथा) सदाश्रयात्- சத்புருஷர்களுடைய, स्थानान्यपि - ஸ்தானங்களும், पावनानि - பவித்ரங்களாக, जायन्ते हि - உண்டாகாநின்றதுகளன்றோ. 4

*பொருள் : - விரைவாகச் செல்லவிரும்பிய ஜீவகன் புண்ணியத்தலங்களில் வழிபாடு செய்தான். சான்றோர்களின் சேர்க்கையால் அவர்கள் தங்கிய இடங்கள் கூடத் தூய்மையடைகின்றன.*

सद्भिरध्युषिता धात्री संपूज्येति किमद्भुतम् ।
कालायसं हि कल्याणं कल्पते रसयोगतः ॥ 5

सद्भिः - சத்புருஷர்களினாலே, अध्युषिताधात्री - இருக்கப்பட்ட பூமியானது, संपूज्या - பூஜ்யமானது, इति - என்று சொல்லுகிறது, अद्भुतं किं - ஆச்சரியமோ, तथा कालायसं - இரும்பானது, रसयोगतः - ரஸ சம்யோகத்தினின்றும், कल्याणं - ஸ்வர்ணமாக, कल्पते हि - கல்ப்பிக்கப்படாநின்றதன்றோ. 5

*பொருள் : - சான்றோர்கள் இருந்த இடம் போற்றத்தகுந்தது என்று கூறுவதில் வியப்படைய ஏதுமில்லை. ரஸவாதத்தினால் இரும்பு, தங்கமாக மாறுவது என்பது இயல்பு.*

सदसत्संगमादेव सदसत्वे नृणामपि ।
तस्मात्सत्संगताः सन्तु सन्तो दुर्जनदूरगाः ॥ 6

सदसत्संगमादेव - சஜ்ஜன துர்ஜனங்களுடைய கூட்டுறவிநின்றுமே, नृणामपि - மனுஷ்யர்களுக்கும், सदसत्वं - சஜ்ஜனதுர்ஜனத்வமானதும், तस्मात् - அது காரணத்தி னின்றும், सन्तः - சத்புருஷர்கள், दुर्जनदूरगाः - துர்ஜனரை தூரத்திலே யுடைத்தானவர்களாய்க்கொண்டு, सत् संगताः - சத்புருஷர்களுடைய சம்சர்கத்தை உடைத்தானவர்கள், सन्तु - ஆகக்கடவர்கள். 6

*பொருள் : - சான்றோர்களைச் சேர்வதால் மனிதர்கள் தாங்களும் சான்றோர்களாவதும், கீழ்மக்களைச் சேர்வதால் கீழ்மக்களாவதும் ஏற்படுகிறது. ஆகவே சான்றோர்களைச் சேர்ந்தவர் கீழ்மக்களைத் தொலைவில் நிறுத்துவர். (அதாவது கீழ்மக்களுடன் அவர்கள் சேரமாட்டார்கள்)*

याजं याजमटन्नेव तीर्थस्थानानि जीवकः ।
क्रमेणारण्यमध्यस्थं तापसाश्रममाश्रयत् ॥ 7

जीवकः - ஜீவகனானவன், तीर्थस्थानानि - தீர்த்தஸ்தானங்களை, याजं याजं - பூஜித்து பூஜித்து. अटन्नेव - சஞ்சயாநின்றவனே, क्रमेण - க்ரமத்தினாலே, अरण्यमध्यस्थं - அரண்யமத்யத்திலே இருக்கிற, तापसाश्रमम् - தாபசாஸ்ரமத்தை, आश्रयत् - அடைந்தான்.

*பொருள் : - ஜீவகன் மீண்டும் மீண்டும் புனிதத் தலங்களைப் பூசித்து, இங்குமங்கும் அலைந்து, மிக்க முயற்சியுடையவனாக காட்டிலிருக்கும் தவச்சாலையை அடைந்தான்.*

असत्तपो विलोक्यासीदनुकम्पी तपस्विनाम् ।
निर्व्याजं सानुकम्पा हि सार्वाः सर्वेषु जन्तुषु ॥ 8

असत्तपः - மித்யாதபசை, विलोक्य - பார்த்து, तपस्विना - தபஸ்விகளுக்கு, अनुकम्पी - அனுகம்பையை யுடைத்தானவன், आसीत् - ஆனான், तथा सार्वाः - சர்வ ஜனங்களுக்கு, सर्वेषु जन्तुषु - ஸமஸ்த ஜீவன்களிலே, निर्व्याजं - வ்யாஜமில்லாமல், सानुकम्पा हि - அனுகம்பையோடே கூடினவர்களன்றோ. 8

*பொருள் : - அங்குள்ள முனிவர்கள் தவறாகத் தவம் செய்வதைக் கண்டு, அவர்களிடம் கருணைகொண்டான். எல்லோருக்கும் பொதுவாக சான்றோர்கள் வேற்றுமை இல்லாமல் கருணை காட்டக்கூடியவர்கள்.*

अतत्वज्ञेऽपि तत्वज्ञैर्भवितव्यं दयालुभिः ।
कूपे पिपतिषुर्बालो न हि केनोप्युपेक्ष्यते ॥ 9

अतत्वज्ञेऽपि - தத்வத்தை அறியாதவனிடத்திலேயும், दयालुभिः - தயாளுக்களான, तत्वज्ञैः - தத்வஞானிகளினாலே, भवितव्यं - ஆகக்கடவது. (तथाहि - அப்படியன்றோ) कूपे - கிணற்றிலே, पिपतिषुः - விழாநின்றிருக்கிற, बालः - பாலனானவன், केनापि - எவனாளேயும், उपेक्ष्यते - உபேக்ஷிப்பண்ணப்படாநின்றது. नहि - இல்லையன்றோ.

*பொருள் : - உண்மைநிலை அறியாதவர்களிடத்து, உண்மைநிலையறிந்தவர்கள் கருணை கொள்ளவேண்டும். கிணற்றில் விழ விரும்பும் சிறுவனை யார்தான் கவனியாமல் இருப்பர் ?*

तानप्यबूबुधत्तत्वं तत्वज्ञः सोऽयमादरात् ।
भव्यो वा स्यान्न वा श्रोता पारार्थ्यं हि सतां मनः ॥ 10

तत्वज्ञः - தத்வஞானி, सोयं - அப்படி இருக்கிற ஜீவந்தரனானவன், तत्वं - தத்வத்தை, आदरात् - தாத்பர்யத்தினின், अबूबुधत् - போதித்தான், तथा श्रोता - கேட்கிறவன், भव्यः - பவ்யனானவன், स्यात् - ஆகக்கடவன், वा - அல்லது, नवा - பவ்யனல்லதவன்தான், सतां - சத்புருஷர்களுக்கு, मनः - மனஸானது, पारार्थ्यं हि - பரப்ரயோஜனத்தை உடைத்தானதன்றோ. 10

*பொருள் : - அந்த, உண்மையறிந்த ஜீவகன், அவர்களுக்கு மிக மரியாதையுடன் உண்மையை உணரச்செய்தான். உபதேசிக்கப்படுபவர் அடக்கமானவரா, அல்லவரா என்பதைச் சான்றோர்களின் மனம் பார்ப்பதில்லை. ஏனெனில் அது பிறருடைய பயனுக்காகச் செயல்படுவது.*

न हिंस्यात्सर्वभूतानीत्यस्मिन्प्रवचने सति ।
तप्यध्वं किं बुधा यूयं हिंसामात्रफलं तपः ॥ 11

सर्वभूतानि - எல்லா உயிரினங்களையும், न हिंस्यात् - ஹிம்ஸை பண்ணக் கடவதல்ல, इति - என்று, अस्मिन् प्रवचने - இந்த ப்ரவசனத்தில், सति - உண்டாயுள்ளளவில், बुधाः - வாராய் ஞானவான்களே, यूयं - நீங்கள், हिंसामात्रफलं - ஹிம்சாமாத்ரத்தையே பலமாக உடைய, तपः - தபசை, किं - என்ன, तप्यध्वं - தபியா நின்றீர்கள். 11

*பொருள் : - வேதங்களில் உயிர்களைத் துயர்ப்படுத்தக் கூடாது என்று இருக்கும்போது, துயர்ப்படுத்துவதையே பயனாகக்கொண்ட தவத்தை நீங்கள் ஏன் செய்கிறீர்கள் ?*

जलावगाहने लग्नाञ्जटायां काष्टगानपि ।
नश्यतः पश्यतां जन्तून्पश्यताग्नौ पुनश्च्युतान् ॥ 12

जलावगाहने - ஜலத்திலே மூழ்கிறத்திலே, जटायां - ஜடையிலே, लग्नात् - பற்றியிருப்பதுகளாய், काष्टगानपि - மரங்களையும் அடைந்திருப்பதாய், अग्नौ - அக்னியிலே, पुनः - பிற்பாடு, च्युतान् - விழாநின்றிருப்பதுகளாய், पश्यतां- பார்க்கிற பேர்களுக்கு, नश्यतः - நாசமாகா நின்றிருக்கிறதுகளாயிருக்கிற, जन्तून् - ஜீவன்களை, पश्यतां- பாருங்கோள். 12

*பொருள் : - நீரில் மூழ்கும்போது சடாமுடியில் இருக்கும் உயிர்களையும், விறகுகளைத் தீயில் போடும் போது அழியும் உயிர்களையும் பாருங்கள்.*

पञ्चाग्निमध्यमस्थानं ततो नैवोचितं तपः ।
जन्तुमारणहेतुत्वादाजवञ्जव कारणम् ॥ 13

ततः - அது காரணத்தினின்றும், जन्तुमारणहेतुत्वान् - ஜீவன்கள் மரணமாகிற காரணத்தினின்றும், आजवञ्जव-कारणम् - சம்சாரத்திற்கு காரணமான, पञ्जाग्निमध्यमस्थानं - பஞ்சாக்னிமத்யமஸ்தானத்தை உடைய, तपः - தபசானது, उचितं - யோக்யமானது, नैव - இல்லையே. 13

பொருள் : - ஐந்து புறமும்[1] நெருப்புச்சூழத் தவமியற்றுவது ஏற்புடையது அன்று. இந்த உலகத்திலுள்ள உயிர்கள் இறப்பதால் (ஏற்படும் பாவத்தால்) மீண்டும் பிறவி எடுக்கக் காரணமாக அது அமைகிறது.

तत्तपो यत्र जन्तूनां संतापो नैव जातुचित् ।
तच्चारम्भनिवृत्तौ स्यान्न ह्यारम्भो विहिंसनः ॥ 14

यत्र - யாதொரு தபஸிலே, जन्तूनां - ஜீவன்களுக்கு, सन्तापः - சந்தாபமானது, जातुचित् - ஒருக்காலும், नैव - இல்லையோ, तत् - அது, तपः - தபஸானது, तच्च - அந்த தபஸும், आरम्भनिवृत्तौ - ஆரம்ப நிவிருத்தியிலே, स्यात् - ஆகக்கடவது. आरम्भः - ஆரம்பமானது, विहिंसनः - ஜீவஹிம்சை இல்லாதத்தினின்றும், नहि - இல்லையன்றோ.

பொருள் : - உயிர்களுக்கு எந்த விதத்திலும் தீங்கிழைக்காததே உண்மையான தவமாகும். எந்த ஒரு தொழிலும் உயிருக்குத் தீங்கு விளைவிப்பதாகவே இருந்தால் அத்தொழிலினின்று விடுபடுவதே தவத்துக்கு வழிவகுக்கும்.

आरम्भविनिवृत्तिश्च निर्ग्रन्थेष्वेव युज्यते ।
न हि कार्यपराचीनैर्मृग्यते भुवि कारणम् ॥ 15

आरम्भविनिवृत्तिश्च - ஆரம்பநிவிருத்தியும், निर्ग्रन्थेष्वेव - நிர்க்ரந்த இடங்களிலே, युज्यते - யோஜிக்கப்படாநின்றது.

---

* நான்கு திசைகள்+ உச்சியில் சூரியன் = 5 புறம் நெருப்பு

(तथा) भुवि - பூமியிலே, कार्यपराचीनैः - கார்யவிமுகர் களினாலே, कारणं - காரணமானது, मृग्यते - தேடப்படாநின்றது, नहि - இல்லையன்றோ. 15

*பொருள் :- செய்தொழிலில் ஈடுபாடின்மை துறவிகளுக்குத்தான் ஏற்படும். செய்தொழிலை வெறுப்பவர்களுக்கு அதற்கான காரணம் கிடைப்பதில்லை. (அதாவது அவர்களின் ஈடுபாடற்ற தன்மைக்குக் காரணம் தேடுவது இயலாது).*

नैर्ग्रन्थ्यं हि तपोऽन्यत्तु संसारस्यैव साधनम् ।
मुमुक्षूणां हि कायोऽपि हेयः किमपरं पुनः ॥ 16

नैर्ग्रन्थ्यं - நிர்க்ரந்தமானது, तपः - தபஸானது, तु - விசேஷமுண்டு, अन्यत् - பரிக்ரஹத்தோடேகூடினது, संसारस्यैव - சம்சாரத்துக்கே, साधनम् - காரணம், मुमुक्षूणां - ரிஷிகளுக்கு, हि - ஸ்புடமாக, कायोऽपि - சரீரமும், हेयः - விடுகையானது, अपरं - அன்யமானது, किं पुनः - சொல்லவேணுமோ. 16

*பொருள் :- துறவு என்பதுதான் தவம் மற்ற யாவையும் உலக வாழ்க்கைக்கே காரணம். சமணத் துறவியின் உடல்கூட ஈடுபாட்டுக்கு உட்பட்டதன்று. (சமணத்துறவி தனது உடல்மீது கூட ஈடுபாடு கொள்ளமாட்டார்)*

*ग्रन्थानुबन्धी संसारस्तेनैव न परिक्षयी ।
रक्तेन दूषितं वस्त्रं न हि रक्तेन शुध्यति ॥ 17

---

** வெண்ணிறத் துகிலினங் கண்வீழ்ந்து மாசாகிநின்ற*
*வொன்றை வுதிரந் தன்னை யுதிரத்தா மொழிக்கலாமே*
*பின்றை கிளவியின் தம் பகையினை பிறந்தவாங்கா*
*கன்னை முலையினாதங்லவிற் கழிக்கலல்மே (சீவகசிந்தாமணி)*

ग्रन्थानुबन्धी - பரிக்ரஹானுபந்தீயானது, संसारः - சம்சாரமானது, तेनैव - அந்த சம்சாரத்தினாலேயே, परिक्षयी - கெடுக்கிறது. न - இல்லை, रक्तेन - ரத்தத்தினாலே, दूषितं - தூஷித்தமான, वस्त्रं - வஸ்த்ரமானது, रक्तेन - ரத்தத்தினாலே, शुध्यति - சுத்தமாகாநின்றது, नहि - இல்லையன்றோ. 17

*பொருள் : - ஈடுபாட்டைப் பின்பற்றிவருவது உலக வாழ்க்கை. அதனால்தான் அழிவு, குருதியால் களங்கப்பட்ட துணியை மீண்டும் குருதியாலேயே தூய்மையாக்க இயலாது.*

तत्वज्ञानविहीनानां नैर्ग्रन्थ्यमपि निष्कलम् ।
न हि स्थाल्यादिभिः साध्यमन्नमन्यैरतण्डुलैः ॥ 18

तत्वज्ञानविहीनानां - தத்வஜ்ஞானமில்லாதவர்களுக்கு, नैर्ग्रन्थ्यमपि - நிக்ரந்தமும், निष्फलम् - பலமில்லாதது. तथा अतण्डुलैः - அரசிகளில்லாத, अन्यैः - அன்யங்களான, स्थाल्यादिभिः - பாண்டமுதலானதுகளினாலே, अन्नं - அன்னமானது, साध्यं - சாதிக்கப்படுமது, नहि - இல்லையன்றோ. 18

*பொருள் : - உண்மையறிவு அற்றவர்களுக்குத் துறவுகூடப் பயனைத் தராது. ஏனெனில் அரிசியில்லாமல், பாத்திரத்தை மட்டும் வைத்துக்கொண்டு, சோறு சமைக்க முடியாது.*

तत्वज्ञानं च जीवादितत्वयाथात्म्यनिश्चयः ।
अन्यथाधीस्तु लोकेऽस्मिन्मिथ्याज्ञानं हि कथ्यते ॥19

तत्वज्ञानं च - தத்வஞானமும், जीवादितत्वयाथात्म्य-निश्चयः - ஜீவன் முதலான தத்வ ஸ்வரூபங்களை யதா ஸ்வரூபமாக நிச்சயம் பண்ணுவது, अस्मिन् लोके - இந்த லோகத்திலே, तु - விசேஷமுண்டு, अन्यथाधीः - ஜீவாதி தத்வங்களை, விபரீத புத்தியாக அறிகிறது, हि - ஸ்புடமான मिथ्याज्ञानं - மித்ய ஞானமென்று, कथ्यते - சொல்லப்படா நின்றது. 19

*பொருள் : - உண்மையறிவு என்பது உயிர் முதலான அறம், தீமை, தொடுதல் போன்ற உணர்வுகள், ஆகியவற்றை நிலைநிறுத்துவதாகும். வேறுவிதமான அறிவு இவ்வுலகில் பொய்யறிவு என்று அழைக்கப்படுகிறது.*

आप्तागमपदार्थाख्यतत्ववेदनतद्रुची ।
वृत्तं च तद्द्वयस्यात्मन्यस्खलद्वृत्ति धारणम् ॥ 20

आप्तागमपदार्थाख्यतत्ववेदनतद्रुची - ஆகமம் ஜீவாதி பதார்த்தமென்று பேரையுடைய தத்வஸ்வரூபத்தை அறிகிறது அந்த நட்பு. तद्द्वयस्यात्मनि - அந்த ரெண்டு ப்ராகாரத்தையுடைய ஆத்மநிடத்திலே, अस्खलद्वृत्तिधारणं - சலனமில்லாத வர்த்தனையை தரிக்கிறதான, वृत्तञ्च - சாரித்ரமும். 20

*பொருள் : - ஜினதேவன், சாத்திரம் (சமணர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கோட்பாடு) உயிர், உயிரற்றவை, அடக்கம், ஈடுபாடு, நிறுத்துதல், முழு அறிவு ஆகிய தனிமங்கள் என்றழைக்கப்படுபவற்றின் அறிவு, இம்மூன்றிலும் ஏற்படும் ஈடுபாடு, நற்காட்சி (सम्यक् दर्शनम्) எனப்படும். நல்லறிவையும், நற்காட்சியையும் உயிரிடத்து நிறுத்துவதே நல்வழிநடத்தல் (सम्यक् चारित्रम्) எனப்படுவதாகும்.*

इति त्रयी तु मार्गः स्यादपवर्गस्य नापरम् ।
बाह्यमन्यतपः सर्वं तत्त्रयस्यैव साधनम् ॥ 21

तु - பின்னை, त्रयी - சம்யக்தர்சன ஞான, சாரித்ரமென்னும் மூன்றும், आपवर्गस्य - மோட்சத்திற்கு மார்கமானது, स्यात् - ஆகக்கடவது, अपरं - அன்யம், न - அல்ல, बाह्यं - பாக்யதபசு, अन्यतपः - அப்யந்தர தபஸானது, तत्सर्वं - அதெல்லாம், तत्त्रस्यैव - சம்யக் தர்சன ஞான சாரித்தரத்துக்கே, साधनम् - ஸாதனமானது. 21

*பொருள் : - நல்லறிவு, நற்காட்சி, நல்லொழுக்கம் இவை மூன்றும்தான் வீடுபேறு பெறுவதற்கு வழியாகும். மற்ற எல்லாத் தவங்களும் வெளிப்படையானவை. அவை யாவும் இம்மூன்றையடைவதற்கே காரணமாகின்றன.*

न च बाह्यतपोहीनमभ्यन्तरतपो भवेत् ।
तण्डुलस्यैवे विक्लित्तिर्न हि वन्ह्यादिकं विना ॥ 22

बाह्यतपोहीनं - பாஹ்ய தபஸில்லாமல், अभ्यन्तरतपः - அப்யந்தர தபஸானது, भवेत् - ஆகக்கடவது, न च - இல்லையே, तण्डुलस्यैव - அரிசிக்கே, विक्लित्तिः - பாகமானது, वन्ह्यादिकं - அக்னி முதலானதை, विना - அன்றியிலே, नहि - இல்லையன்றோ. 22

*பொருள் : - வெளிப்படையான தவமின்றி, பிராயச்சித்தம், அடக்கம், தனிமை, தனக்கு விதித்ததைக் கற்றல், விடுத்தல், மனம் ஒன்றுதல் (*प्रायधित, विनय, व्यावृत्ति, स्वाध्याय, उत्सर्ग, ध्यान*) என்ற ஆறாலும் உள்ளார்ந்த தவம் ஏற்படாது. நெருப்பில்லாமல் அரிசி வேகாது.*

तत्त्रयं च न मोक्षार्थमाप्ताभासादि गोचरम् ।
ध्यातो गरुडबोधेन न हि हन्ति विषं बकः ॥ 23

आप्ताभासादिगोचरः - ஆப்தாபாச முதலான விஷயமான, तत्रयं च - அந்த மூன்றும், मोक्षार्थं - மோக்ஷ நிமித்யர்த்தம், न - அல்ல, गरुडबोधेन - கருட ஞானத்திலே, ध्यातः - த்யானிக்கிறவன், विषं - விஷத்தை, हन्ति - கெடாநின்றான், बकः - கொக்கானது, नहि - இல்லையன்றோ. 23

*பொருள் : - தவறான பார்வை, தவறான அறிவு, தவறான ஒழுக்கம் இவை மூன்றும் வீடுபேறு அளிக்காது. கருடன் என்று கொக்கை நினைத்தால் நஞ்சு நீங்காது.**

सर्वदोषविनिर्मुक्तं सर्वज्ञोपज्ञमञ्जसा ।
तप्यध्वं तत्तपो यूयं किं मुधा तुषखण्डनैः ॥ 24

सर्वदोषविनिर्मुक्तं - சர்வதோஷங்களினால் விடப்பட்ட, सर्वज्ञोपज्ञम् - சர்வக்ஞனாலே சொல்லப்பட்ட, तत्तपः - அந்த தபஸை, अञ्जसा - நிச்சயத்தினாலே, यूयं - நீங்கள், तप्यध्वं - தவியுங்கள், मुधा - வயர்த்தத்தினாலே, तुषखण्डनैः - உமியை குத்துகிறதுனாலே, किं - என்ன. 24

*பொருள் : - நிச்சயமாக எல்லாக் குறைகளுமற்ற தவத்தை இயற்றுங்கள். வீணே உமியைக் குத்துவதால் என்ன பயன் ? (உமியைக் குத்தினால் அரிசி வராது, நெல்லைத்தான் குத்த வேண்டும்).*

---

* *பாம்பின் நஞ்சைப் போக்க கருடனை வழிபடுவது மரபு.*

रागादिदोषसंयुक्तः प्राणिनां नैव तारकः ।
पतन्तः स्वयमन्येषां न हि हस्तावलम्बनम् ॥ 25

रागादिदोषसंयुक्तः - ராக முதலான தோஷங்களுடன் கூடினவன், प्राणिनां - ஜீவன்களுக்கு, तारकः - கடப்பிக்கிறவன், नहि - இல்லையன்றோ. स्वयं - தானே पतन्तः - விழுபவர்கள் விழுந்து கொண்டிருப்பவர்கள், हस्त अवलम्बनं - (பிறருடைய) கையைப் பிடித்துக் கொள்வது (அவர்களைக் காப்பாற்ற), नहि - இயலாது. 25

**பொருள் : -** *ஈடுபாடு முதலான தவறுகளுடன் கூடியவன், மற்றவர்களைக் கரை சேர்க்க இயலாது. தானே விழுந்து கொண்டிருப்பவர்கள் (பிறரைக் காக்கத்) தங்கள் கையைக் கொடுக்க முடியாது.*

न च क्रीडा विभोस्तस्य बालिशेष्वेव दर्शनात् ।
अतृप्तश्च भवेत्तृप्तिं क्रीडया कर्तुमुद्यतः ॥ 26

बालिशेष्वेव दर्शनात् - அக்ஞானிகளிடங்களிலேயே, तस्यविभोः - அன்னப்ரபுவுக்கு, क्रीडात् - விளையாட்டும், न - இல்லை, तृप्तिं - த்ருப்பதியை, क्रिडया - விளையாட்டினாலே, கஞ்சம் பண்ணுகிறதற்கு, उद्यतः - உத்யுக்தனானவன், अतृप्तश्च- திருப்தி இல்லாதவனும், भवेत् - ஆகக்கடவன். 26

**பொருள் : -** *அறிவிலிகளிடம் காணப்படும் (அர்த்தமற்ற) விளையாட்டுக்கள் அவனிடம் கிடையாது. விளையாட்டினால் மனநிறைவைச் செய்ய விரும்புபவன், மனநிறைவை அடைய விரும்பமாட்டான்.*

स्वैराचारस्वभावोऽपि नेश्वरस्यैश्यहानितः ।
अप्यस्मदादिभिर्द्वेष्यं सर्वोत्कर्षवतः कुतः ॥ 27

स्वैराचारस्वभावोऽपि - ஸ்வேசார ஸ்வபாவமும், ईश्वरस्य - ஈச்வரனுக்கு, ऐस्यहानित - ஈச்வரத்வம் கெடுக்கிறதினின்றும், न - இல்லை. अस्मदादिभिरपि - நாம் முதலான பேர்களினாலேயும், द्वेष्यं - த்வேஷ்யமானது, सर्वोत्कर्षवतः - சர்வருக்கும் உத்க்ருஷ்ட்னைன ப்ரபுவக்கு, कुतः - எங்கு நின்றும். 27

*பொருள் : - தலைமை பொறுப்பை இழக்க நேரிடும் என்ற காரணத்தால் இறைவன்கூடத் தன்விருப்பப்படி இயங்க இயலாது. எல்லோரைக்காட்டிலும் மேன்மையாக விளங்கக்கூடியவருக்கு, நம்முடையவற்றால் கூடத் (நமது நன்நெறிகளால்) தூற்றப்படும் செயல், எங்கிருந்து உயர்வை அளிக்கும்.*

अदोषश्चेदकृत्यं च कृतिनः किमुकृत्यतः ।
स्वैराचारविधिदद्दष्टो मत्त एव न चोत्तमे ॥ 28

कृतिनः - புண்யவானான ஸ்வாமிக்கு, अकृत्यश्च - அயோக்யமும், अदोषश्चेत् - தோஷமில்லாததாகில், कृत्यतः - யோக்யத்தை பண்ணுகிறதினின்றும், किमु - என்ன, स्वैराचारविधिः - ஸ்வேச்சாரத்தைப் பண்ணுகிறது, मत्त एव - என்னிடத்திலே, द्दष्टः - காணப்பட்டது, उत्तमे - உத்தமனிடத்திலே, न च - இல்லை. 28

*பொருள் : - செய்யக்கூடாத செயல் கூட, பழுதற்றது என்று ஆகிவிட்டால், சான்றோர்களின் நற்செயலால் என்ன பயன் ? தன் விருப்பப்படி நடத்தல் என்பது என்னிடத்தில் (நம்மிடத்திலேயே) காணப்படுகிறது. உயர்ந்த சான்றோர்களிடத்தில் அல்ல.*

इति प्रबोधिताः केचिद्बभूवुस्तेषु धार्मिकाः ।
मृत्स्ना ह्यार्द्रत्वमायाति नोपलं जलरोचनात् ॥ 29

इति - என்று, प्रबोधिताः - போதிக்கப்பட்டிருக்கிற, केचित् - சிறிது பேர்கள், तेषु - அவர்களுக்கே, धार्मिकाः - தார்மிகர்கள், बभूवुः - ஆனார்கள், तथा मृत्स्ना - மண்ணினாலே, जलसेचनात् - ஜலத்தினாலே, நனைக்கிறத்தினின்றும், आर्द्रवं - ஆத்ருத்ரத்தை, आयाति - அடையாநின்றது, उपलं - கல்லானது, नहि - இல்லையன்றோ. 29

*பொருள் : - இவ்வாறு போதிக்கப்பட்டவர்களாக (அறிவிக்கப்பட்ட) ஒருசில அறவோர் ஆயினர். மண்மூடுவதால் மட்டுமே பாறைகள் மறைந்துபோகும். நீரைத் தெளிப்பதால் மறைந்து போகாது.*

धर्माश्रितान्समालोक्य तापसान्मुमुदे कृती ।
प्रीतये हि सतां लोके स्वोदयाच्च परोदयः ॥ 30

कृती - புண்யவனான ஜீவந்தரனானவன், धर्माश्रितान् - தர்மத்தை அடைந்த, तापसानू - தாபசர்களை, समालोक्य - பார்த்து, मुमुदे - எ तयालोके - எ सतां - எ स्वोदयाच्च - எ परोदयः - எ प्रीतयो हि - ப்ரிதியின் பொருட்டன்றோ. 30

*பொருள் : -ஜீவந்தரன் அறத்தின்பாற்பட்டிருக்கும் தவமுனிவர்களைக் கண்டு மகிழ்ந்தான். தங்களைக் காட்டிலும் பிறர் மேம்பட்டிருந்தால் சான்றோர்கள் மிக்க மகிழ்ச்சி அடைவார்களன்றோ ?*

बोधिलाभात्परा पुंसां भूतिः का वा जगत्त्रये ।
किं पाकफलसंकाशैः किं परैरुदयच्छलैः ॥ 31

जगत्त्रये - மூன்று லோகத்திலே, पुंसां - புருஷர்களுக்கு தங்கள், बोधिलाभात् - ஞானலாபத்தினின்றும், पराः - உத்கிருஷ்ட்டமான, भूतिः - ஐச்வர்யமானது, का वा - எதுதான், किं पाक फलसंकाशैः - - கிம்பாகபலத்துக்கு சமானங்களான, उदयच्छलैः - ஐச்வர்யமென்கிற வ்யாஜ்யங்களான, परैः - புத்ரமித்ர களத்ர தான்யம் முதலான அன்யங்களினாலே, किं - என்ன. 31

*பொருள் : - அறிவைக் காட்டிலும் சிறந்த செல்வம் வேறேதும் உண்டோ ? கரும வினைகளாலுண்டான செல்வங்களும், மற்ற உறவினர்களும், இதற்குச் சமமாவார்களா ?*

ततस्तस्माद्विनिर्गत्य देशे दक्षिणनामके ।
सहस्रकूटमाश्रित्य श्रीविमानं नुनाव सः ॥ 32

ततः - பிற்பாடு, तस्मात् - அங்குநின்று, विनिर्गत्य - புறப்பட்டு, दक्षिणनामके - தக்ஷிணமென்று பேரையுடைய, देशे - தேசத்திலே, सहस्रकूट - ஸஹஸ்ரகூடமென்று பேரையுடைய, श्रीविमानं - சைத்யாலயத்தை, आश्रित्य - அடைந்து, सः - ஜீவந்தரனானவன், नुवाव - ஸ்தோத்ரம் பண்ணினான். 32

***பொருள் : - அப்பால் ஜீவகன் அங்கிருந்து அகன்று 'தக்ஷிண' தேசத்திலுள்ள ஸஹஸ்ரகூடத்திற்குச் சென்று அங்கு ஓர் ஜைன மடம் கதவு தாழிடப்பட்டுள்ளதைக் கண்டு வணங்கினான்.***

भगवन्दुर्नयध्वान्तैराकीर्णे पथि मे सति ।
सज्ञानदीपिका भूयात्संसारावधि वर्धनी ॥ 33

भगवन् - வாராய் ஸ்வாமியே, मे - எனக்கு, दुर्नयध्वान्तैः - துர்நயமாகிற அன்யகாரங்களினாலே, पथि - மார்க்கமானது, आकीर्णेन सति - நிறைந்துள்ளவில், ससाखधिवर्धनी - சம்சாரமுடைய, सज्ञानदीपिका - சம்யக் ஞானமாகிற தீபமானது, भूयात् - ஆக்கடவது. 33

பொருள் : - இறைவ ! எனது பாதை தீய நடவடிக்கைகளாகிய இருளால் நிறைந்துள்ளது. உலகியல் வாழ்வின் முடிவை ஏற்படுத்தும் அறிவோடுகூடிய விளக்கு எனக்குக் கிடைக்கட்டும்.

जन्मजीर्णाटवीमध्ये जनुषान्धस्य मे सती ।
सन्मार्गे भगवन्भक्तिर्भवतान्मुक्तिदायिनी ॥ 34

जन्मजीर्णाटवीमध्ये - ஜனனமாகிற தீர்ணாடவி மத்யத்திலே, जनुषान्धस्य - பிறவிக்குருடனான, मे - எனக்கு, भगवन् - வாராய் ஸ்வாமியே, सन्मार्गे - ஜனமார்க்கத்திலே, सती - ப்ரஸஸ்த்தமான, मुक्तिदायिनी - மோட்சத்தை கொடுக்கிறதான, भक्तिः - பக்தியானது, भवतात् - ஆகக்கடவது. 34

பொருள் : - பிறப்பாகிய பாழாய்ப்போன காட்டின் நடுவில் உள்ள பிறவிக் குருடனான எனக்கு வீடுபேறை அளிக்கும் உயர்ந்த நல்வழியில் ஈடுபாடு நிலைக்கட்டும்.

स्वान्तशान्तिं ममैकान्तामनेकान्तैक नायकः ।
शान्तिनाथो जिनः कुर्यात्संसृति त्येश शान्तये ॥ 35

मम - எனக்கு, एकान्ताः - மித்யாத்வமான, स्वान्तशान्तिं - மனதினுடைய உபசாந்தியை, अनेकान्तैकनायकः - அநேகாந்தத்துக்கு, शान्तिनाथः - சாந்திநாதரென்னும் பேரையுடைய, जिनः - ஜீனரானவர், संसृतित्येशसान्तये - சம்சாரசத்தினுடைய த்யேஷோபசாந்தியின் பொருட்டு, कुर्यात् - பண்ணக்கடவர்.

*பொருள் : - எல்லாவற்றுக்கும், அமைதிக்கும், தலைவனான ஜினர் எனது தனிமைப்படுத்தப்பட்ட மனதிற்கும், பிறவியின் பயனாக ஏற்பட்ட துயரத்திற்கும், அமைதியளிக்கட்டும்.*

इति स्तोत्रेण तच्चासीदुद्घाटितकवाटकम् ।
मुक्तिद्वारकवाटस्य भेदिना किं न भिद्यते ॥ 36

इति - என்கிற, स्तोत्रेण - ஸ்தோத்திரத்தினாலே, तच्च - அந்த சைத்யாலமும், उद्घाटितकवाटकम् - திறக்கப்பட்ட கதவையுடையது, आसीत् - ஆச்சுது, मुक्तिद्वारकवाटस्य - மோக்ஷத்வாரத்தினுடைய, भेदिना - பேதினா ஸ்தோத்திரத்தினாலே, किं - என்ன, भिद्यते - பேதிக்கப்படா நின்றது, न - அல்ல. 36

*பொருள் : - இப்படிப்பட்ட துதியால், திறக்க முடியாத அந்த ஜைன மடத்தின் கதவு திறந்தது. வீடுபேற்றின் நுழைவாயிலைத் திறக்க முடிந்தவர்க்கு, வேறு எந்த கதவுதான் திறக்க இயலாதது ? ஜீவகன் துதியினாலே ஆலயத்தின் கதவு தானாகவே திறந்து கொண்டது.*

अन्याशक्यमिदं मान्यो वितन्वन्न विसिष्मये ।
लोकमालोकसात्कुर्वन्नहि विस्मयते रविः ॥ 37

अन्याशक्यं - அன்யருக்கு அசக்யமான, इदं - இந்த ஸ்தோத்ரத்தை, वितन्वन्न - விஸ்தரியாநின்ற, मान्यः - பூஜ்யனான ஜீவந்தரன், न विसिष्मये - ஆச்சர்யப்படாநில்லை, तथा लोकं - லோகத்தை, आलोकसात् - காந்தியினின்றும், कुर्वन्- பண்ணாநின்ற, रविः - சூர்யனானவன், विस्मयते - ஆச்சர்யப்படாநின்றான், नहि - இல்லையன்றோ. 37

*பொருள் : - பிறரால் செய்ய வொண்ணாத காரியத்தைச் செய்த ஜீவகன் வியப்படையவில்லை. உலகம் முழுவதையும் பிரகாசிக்கச் செய்யும் சூரியன் தன் செயலைக் கண்டு ஆச்சரியமடைகிறதில்லையன்றோ ?*

तावता तं समासाद्य प्रणतः कोऽपि पिप्रिये ।
स्वमनीषितनिष्पत्तौ किं तुष्यन्ति जन्तवः ॥ 38

तावता - அவ்வளவினாலே, प्रणतः - நமஸ்காரம் பண்ணுகிறத்தினின்றும், तं - அவனை, कोऽपि - ஒருத்தன், समासाद्य - அடைந்து, पिप्रिये - மிகவும் சந்தோஷித்தான், तथा स्वमनीषितनिष्पत्तौ - தாங்கள் வாஞ்சித்த காரிய நிஷ்பத்தியிலே, जन्तवः - ஜீவகன்கள், किं नु तुष्यन्ति - ஏன் சந்தோஷியா நின்றார்களல்ல. 38

*பொருள் : - அப்பொழுது ஒருவன் ஜீவகனை வந்து வணங்கி நின்றார். தன் விருப்பம் ஈடேறினால் மகிழாதார் யார் உளர் ?*

स्वामी तु तं समालोक्य कस्त्वमार्येति पृष्टवान् ।
प्रभूणां प्राभवं नाम प्रणतेष्वेक रूपता ॥ 39

स्वामी - ஜீவந்தரஸ்வாமியானவன், तु - பின்னை, तं - அவனை, समालोक्य - பார்த்து, त्वं - நீ, कस्त्वमार्येति - வாராய் பூஜ்யனே என்று, पृष्टवान् - கேட்டான், (तथा) प्रभूणां - ப்ரபுக்களுக்கு, प्राभवं नाम - ப்ரபுவென்கிற பேரானது, प्रणतेषु- வணங்கிற பேரிடங்களிலே, एकरूपा हि - ஏகரூபமன்றோ.39

*பொருள் : - ஜீவகன் அந்த மனிதனைக் கண்டு, அவனை யாரென வினவினான். சான்றோர்களின் தன்மை எல்லோரிடத்திலும் சமமானதன்றோ!*

पृष्टः सोऽप्युत्तरं वक्तुमुपादत्त कृतत्वरः ।
समीहितेऽपि साहाय्ये प्रयत्नो हि प्रकृष्यते ॥40

पृष्टः - கேட்கப்பட்டிருக்கிற, सोऽपि - அவனும், उत्तरं - உத்தரத்தை, वक्तुं - சொல்லுகிறதற்கு, कृतत्वरः - சீக்கிரமாக, उपादत्त - சொன்னான், (तथा) समीहितेऽपि - வாஞ்சிதமானதும், साहाय्ये - சகாயத்தோடு கூடியுள்ளளவில், प्रयत्नः - ப்ரயத்தனமானது, प्रकृष्यते हि - வர்த்தியாநின்றதன்றோ. 40

*பொருள் : - அவனும் உடன் பதிலுரைத்தான். உதவி கிடைத்தவுடன் முயற்சியும் சிறந்ததாகிறது. (முயற்சி மட்டும் செய்து உதவியின்றி இருந்தால் பயன் போதுமான அளவு இருக்காது)*

इह क्षेमपुरी नाम राजधानी विराजते ।
नरपतिस्तु देवान्तो राजा तत्पुरनायकः ॥ 41

इह - இவ்விடத்திலே, क्षेमपुरीनाम - க்ஷேமபுரி என்று பேரையுடைய, राजधानी - ராஜதானியானது, विराजते - விளங்காநின்றது, तु - பின்னை, देवान्तः - தேவரூபத்தை அந்த்யத்திலேயுடைய, नरपतिः - நரபதி தேவனென்று பேரையுடைய, राजा - ராஜாவானவன், तत्पुरनायकः - அந்தப் பட்டத்துக்கு முக்யனானவன். 41

*பொருள் : - ஐயா, இங்கே க்ஷேமபுரி என்றொரு நகரமிருக்கின்றது. அதனில் நரபதிதேவன் என்ற அரசன் இருக்கிறான்.*

तस्य श्रेष्टिपदप्राप्तः सुभद्रस्तस्य गेहिनी ।
नाम्ना तु निर्वृतिः पुत्री क्षेमश्रीरित्यभूत्तयोः ॥ 42

तस्य - நரபதி தேவனுக்கு, श्रेष्टिपदप्राप्तः - ஸ்ரேஷ்டிபத ப்ராப்தனானவன், सुभद्रः - சுபத்ரனானவன், तस्य - சுபத்ரனுக்கு, तु - பின்னை, गेहिनी - ஸ்திரீயானவள், नाम्ना- பேரினாலே, निर्वृत्तिः - நிர்வ்ருதியானவள், तयोः - அந்த இரண்டு பேர்களுக்கும், क्षेमश्रीः - க்ஷேமஸ்ரீயானவள், इति - என்னும், पुत्री - புத்திரியானவள், अभूत् - ஆனாள். 42

***பொருள் : - அந்நகரில் சுபத்ரன் என்றொரு வணிகன் இருக்கிறான். அவனுக்கு நிர்விருத்தி என்றொரு மனைவி உண்டு. அவர்களுக்கு க்ஷேமஸ்ரீ என்றொரு பெண் பிறந்தாள்.***

जन्मलग्ने च दैवज्ञास्तत्पतिं तमजीगणन् ।
स्वयंविघटितद्वारो येनायं स्याज्जिनालयः ॥ 43

येन - யாதொருத்தனாலே, अयं जिनालयः - இந்த ஜீனாலயமானது, स्वयं - தான், विघटितद्वारः - திறக்கப்பட்ட துவாரத்தையுடையது, स्यात् - ஆகக்கடவது, तं - அவனை, तत्पतिं - அவளுக்குப் பதியாக, जन्मलग्ने च - ஜன்மலக்னத்திலேயும், दैवज्ञाः - நிமித்தக்ஞர்கள், अजीगणन् - கணித்தார்கள். 43

***பொருள் : -  அவள் பிறந்த தினத்திலேயே ஜோதிடர்கள் இந்த ஜிநாலயத்தின் கதவு எவன் வந்தவுடன் திறக்கின்றதோ, அவனே இவளுக்கு கணவனாவான் என்று தெரிவித்தார்கள்.***

तत्परीक्षाकृतेऽत्रैव गुणभद्रसमाह्वयः ।
प्रेष्योऽहं प्रेरितस्तिष्टन्भवन्तं दृष्टवानिति ॥ 44

तत्परीक्षाकृते - அந்தப் பரீக்ஷையை பண்ணுகிறதிலே, अत्रैव - இவ்விடத்திலேயே, गुणभद्रसमाह्वयः - குணபத்ரன் என்று பேரையுடைய, प्रेष्यः - ஏவலாளால், प्रेरितः - ஏவப்பட்டிருக்கிற, अहं - நான், तिष्टन् - இராநின்றவனாய்க் கொண்டு, इति - என்று, भवन्तं - உன்னை, दृष्टवान् - கண்டேன். 44

***பொருள் : - இதனை கண்டு தேர்ச்சி செய்யவே, குணபத்திரன் என்னும் நான், அவர்களால் நியமிக்கப்பட்டு, உன்னை இப்போது கண்டேன்.***

इत्युक्त्वा स पुनर्नत्वा गत्वा सत्वरमात्मनः ।
स्वामिने स्वामिवृत्तान्तममन्दप्रीतिरब्रवीत् ॥ 45

इति - என்று, उक्त्वा - சொல்லி, सः - அவன், पुनः - பிற்பாடு, नत्वा - நமஸ்கரித்து, सत्वरं - சீக்கிரமாக, गत्वा - போய், आत्मनः - தன்னுடைய, स्वामिने - ஸ்வாமியின் பொருட்டு, स्वामिवृत्तान्तं - ஜீவந்தரஸ்வாமி விருத்தாந்தத்தை, अमन्दप्रीतिः - பகுப்ரீதியையுடைத்தானவன், अब्रवीत् - சொன்னான். 45

*பொருள் : - இனி எனக்குச் செல்ல விடைதர வேண்டும் என்றான். அவ்வாறு சொல்லி, மீண்டும் வணங்கிவிட்டுத் தன் தலைவனிடம் சென்று மிகுந்த மகிழ்ச்சியுடன் ஜீவகனுடைய வரவையும், ஜினாலயம் திறக்கப்பட்டதையும் தெரிவித்தான்.*

भद्रवार्तां ततः शृण्वन् सुभद्रोऽपि समागतः ।
तत्क्षणे च तमद्राक्षीज्जिनपूजाकृतक्षणम् ॥ 46

ततः - பிற்பாடு, भद्रवार्तां - குணபத்ரனுடைய வசனத்தை, शृण्वन् - கேளாநின்றவனாய்க்கொண்டு, समागतः - வந்திருக்கிற, सुभद्रोऽपि - சுபத்ரன், तत्क्षणे - அந்த க்ஷணத்திலேயும், जिनपूजाकृतक्षणम् - ஜினபூஜையை பண்ணுகிற சமர்த்தனான, तं - ஜீவந்தரனை, अद्राक्षीत् - கண்டான். 46

*பொருள் : - இம்மங்கள வார்த்தையைக் கேட்டதும் சுபத்ரன் ஜினாலயத்திற்கு வந்து பூஜை செய்துகொண்டு இருந்த ஜீவகனைக் கண்டான்.*

न गात्रमात्रमद्राक्षीद्विभवं चास्य वैश्यराट् ।
सौगन्धिकस्य सौगन्ध्यं शपथात्किं प्रतीयते ॥ 47

वैश्यराट् - வைச்யமுக்யனானவன், गात्रमात्रं - சரீரமாத்ரத்தை, अद्राक्षीत् - கண்டான், न - அல்ல, अस्य - ஜீவந்தரனுடைய, विभवञ्च - விபவத்தையும், अद्राक्षीत् - கண்டான், सौगन्धिकस्य - பரிமளமான வஸ்த்துவுக்கு, सौगन्ध्यं - பரிமளத்தை, शपथात् - ஆணையினின்றும், प्रतीयते - அறிவியாநின்றது, किं - என்ன. 47

பொருள் : - அவன் பார்த்தவுடனேயே ஜீவகன் இராஜகுமாரன் என்று அறிந்து கொண்டான். செங்கழுநீர்ப் பூவின் மணம் சொல்லித்தான் தெரியவேண்டுமோ!

इत्यन्तेऽभूद्यथायोग्यमुपचारः परस्परम् ।
सतां हि प्रह्वता शास्ति शालीनामिव पक्वताम् ॥ 48

इत्यन्ते - பூஜையினுடைய கடைசியிலே, परस्परं - ஒன்றுக்கொன்று, यथायोग्यम् - யதாயோக்யமாக உபசாரமானது, अभूत् - ஆச்சுது, (तथाहि) पक्वताम् - பக்வமான, शालीनां - நெல்லுக்கதிர்களுக்கு, इव - போல, सतां - சத்புருஷர்களுக்கு, प्रह्वता - வணக்கமானது, शास्ति हि - இல்லாததன்றோ. 48

பொருள் : - வழிபாட்டை முடித்தவுடன் ஜீவகனும் சுபத்ரனும் ஒருவருக்கொருவர் மரியாதை செலுத்திக் கொண்டனர். பக்குவமான நெற்கதிர்கள் வணங்கி நிற்பது போல, சான்றோர்கள் இயல்பாகவே வணங்கி நிற்பர்.

तद्वेश्म तस्य निर्बन्धादथ बन्धुप्रियो गतः ।
सख्यं साप्तपदीनं हि लोके संभाव्यते सताम् ॥ 49

तद्वेश्म - சுபத்ர செட்டியினுடைய மனையை, तस्य - சுபத்ர செட்டியினுடைய, निर्बन्धात् - நிர்பந்தத்தினின்றும், बन्धुप्रियः - பந்துபிரியான், गतः - அடைந்தான், (तथा) लोके- லோகத்திலே, सतां - ஸத்புருஷர்களுக்கு, सख्यं - மித்ரத்வமானது, साप्तपदीनं - ஏழடி வைத்தலை, संभाविते हि- பாவிக்கப்படாநின்றதன்றோ. 49

*பொருள் : - நட்பை விரும்பும் ஜீவகன், சுபத்திரனுடைய மாளிகையை அடைந்தான். ஏழடி சேர்ந்து நடந்தால் நட்பு ஏற்படுகிறது என்பது உலக வழக்கு.*

कन्यायाः करपीडां च तद्दैन्यादन्वमन्यत ।
आश्रयन्तीं श्रियं को वा पादेन भुवि ताडयेत् ॥ 50

कन्यायाः - கன்யகயினுடைய, करपीडाञ्च - பாணிகிரஹத்தையும், तद्दैन्यात् - அவனுடைய - தைன்யத்தினின்றும், अन्वमन्यत - சம்மதித்தான், (तथा) आश्रयन्तीं - அடையப்பட்டிருக்கிற, श्रियं - ஐச்வர்யத்தை, को वा - எவன்தான், भुवि - பூமியிலே, पादेन - காலினாலே, ताडयेत् - உதைக்கக்கடவன். 50

*பொருள் : - வலுவிலே வந்த செல்வத்தைக் காலாலே உதைத்துத் தள்ளுபவனும் உண்டோ? ஜீவகன் சுபத்ரன் வேண்டுகோளுக்கிணங்கி கன்னிகயை மணக்க இசைந்தான்.*

अथ भद्रतरे लग्ने सुभद्रेण समर्पिताम् ।
क्षेमश्रियं पवित्रोऽयमुपयेमे यथाविधि ॥ 51

अथ - பிற்பாடு, भद्रतरे - சுபதரமான, लग्ने - லக்னத்திலே, सुभद्रेण - சுபத்ரனாலே, समर्पितां - கொடுக்கப்பட்டிருக்கிற, क्षेमश्रियं - க்ஷேமஸ்ரீயை, पवित्रः - பவித்ரனான, अयं - ஜீவந்தரனானவன், यथाविधि - விதிகிரமமாக, उपयेमे - விவாஹம் பண்ணினான். 51

इति श्रीमद्वादीभसिंहसूरिविरचिते क्षत्रचूडामणौ
क्षेमश्रीलम्भो नाम षष्टोलम्भः ॥

*பொருள் : - பின்னர் சுபமுகூர்த்தத்தில் சுபத்திரன், தன் புதல்வியாகிய க்ஷேமஸ்ரீயை தாரை வார்த்துக் கொடுக்கவே பவித்ர குமாரனாகிய ஜீவகன் அவளை விதிப்படி ஏற்றுக்கொண்டான்.*

*க்ஷேமஸ்ரீலம்பம் முற்றிற்று*



## सप्तमो लम्भः

### कनकमालालम्भः

### கனகமாலாலம்பம்

अथ वध्वा तया साकमनुबोभूय भूयसीम् ।
सुखतातिं ततो यातुं विततान मतिं कृती ॥ 1

अथ - பிற்பாடு, तया वध्वा - அந்த க்ஷேமஸ்ரீயோட, साकम् - கூட, भूयसीं - மிகவும், अनुबोभूय - அனுபவித்த, ततः - அங்குநின்றும், सुखतातिं - சுக சமூகத்தை, यातुं - அடையிறதற்கு, कृती - புண்யவானானவன், मतिं - புத்தியை, विततान - விஸ்த்தரிச்சான். 1

*பொருள் : - பிறகு அந்த க்ஷேமஸ்ரீயுடன் நீண்ட காலத்தை இன்பமாகக் கழித்துவிட்டு, நிலையான இன்பத்தைத் பெற எண்ணி, இல்லறத்தில் மனதைச் செலுத்தினான்.*

अकथयन्नथ स्वामी गणरात्रात्यये गतः ।
न हि मुग्धाः सतां वाक्यं विश्वसन्ति कदाचन ॥ 2

अथ - பிற்பாடு, स्वामी - ஜீவந்தரஸ்வாமியானவன், अकथयन् - சொல்லாதவனாய்க்கொண்டு, गणरात्रात्यये - பகுராத்ரியினுடைய கடைசியிலே, गतः - அடைந்தான், (तथा) मुग्धाः - மூடர்கள், सतां - சத்புருஷர்களுடைய, वाक्यं - வசனத்தை, कदाचन - ஒருகாலும், विश्वसन्ति - விஸ்வஸியாநின்றார்கள், नहि - இல்லையன்றோ. 2

பொருள் : - பிறகு ஜீவந்தரன் ஒருவரிடமும் கூறாமல் ஒரு விடியற்காலைப் பொழுதில் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றான். சான்றோர்களின் சொற்களில் அறிவிலிகள் நம்பிக்கை வைக்க மாட்டார்கள். (அதாவது சிற்றின்பம் விட்டொழிக்கப்படவேண்டும் பேரின்பமாகிற வீடுபேற்றை அடைய முயலவேண்டுமென்ற நற்செய்திகளை அறிவிலிகள் செவிமடுக்கமாட்டார்கள். ஜீவந்தரனைப் பொறுத்தவரை இல்லற வாழ்க்கையில், மணைவி, சிற்றின்பத்தையே விரும்புபவன் என்பது செய்யுளின் கருத்து)

तद्वियोगादभूत्पत्नी दग्धरज्जुसमद्युतिः ।
प्राणाः पाणिगृहीतीनां प्राणनाथो हि नापरम् ॥ 3

तद्वियोगात् - ஜீவந்தரனுடைய வியோகத்திநின்றும், पत्नी - பத்னியானவள், दग्धरज्जुसमद्युतिः - வெந்த புரிக்கு (கயிறு) ஸமானமான காந்தியை உடைத்தானவள், अभूत् - ஆனாள், (तथा) पाणिगृहीतीनां - விவாஹம் பண்ணப்பட்ட ஸ்திரியர்களுக்கு, प्राणनाथः - புருஷனானவன், प्राणाः - ப்ராணகள், अपरं - அன்யமானது, नहि - இல்லையன்றோ. 3

பொருள் : - அவனது பிரிவால் அவன் மனைவி எரிக்கப்பட்ட கயிறுபோல வாழ்க்கையில் எந்தப் பிடிப்புமில்லாமல் போயினள். (எரிந்த கயிறு எதையும் கட்டுவதற்குப் பயன்படாது. சாம்பலாகிவிடும் என்பது கருத்து) திருமணமான பெண்களுக்கு உயிர், கணவனே ஆவான்.

सुभद्रोऽपि पवित्रं तमन्विष्याधिमयोऽभवत् ।
बहुयत्नोपलब्धस्य प्रच्यवो हि दुरुत्सहः ॥ 4

सुभद्रोऽपि - சுபத்ரனானவனும், पवित्रं - பவித்ரனான, तं - ஜீவந்தரனை, अन्विष्य - தேடி, आधिमयः - துக்கமயனானவன், अभवत् - ஆனான், बहुयत्नोपलम्बस्य - பகுப்ரயத்தனத்தினாலே பெறப்பட்ட வஸ்த்துவினுடைய, प्रच्यवः - நழுவிப்போரதானது, दुरुत्सहो हि - சஹிக்கிறதற்கு உரித்தானதன்றோ. 4

**பொருள் : - சுபத்திரன் ஜீவந்தரனைத் தேடிக்களைத்தான். மிகுந்த முயற்சியில் பெறப்பட்ட பொருள் கைநழுவிப்போகும்போது அத்துயரைப் பொறுப்பவர் எவரோ?**

स्वामी स्वाभरणत्यागमैच्छद्गच्छन्न तुच्छधीः ।
विवेकभूषितानां हि भूषा दोषाय कल्पते ॥ 5

तुच्छधीः - கம்பீரபுத்தியுடைய, गच्छत् - போகாநின்றிருக்கிற, स्वामी - ஜீவந்தரஸ்வாமினவன், स्वाभरणत्यागं - ஸ்வாபரணத்யாகத்தை, ऐच्छत् - இச்சித்தான், (तथा) विवेकभूषितानां - விவேக ஞானமே பூஷிதரானவர் களுக்கு, भूषा - ஆபரணமானது, दोषाय - தோஷத்தின் பொருட்டு, कल्पते हि - கல்ப்பிக்கப்படாநின்றதன்றோ. 5

***பொருள் : - தான் அணிந்திருந்த அணிகலன்களைக் கழற்றி எரியத் தீர்மாணித்தான் ஜீவந்தரன். விவேகத்தை அணிகலனாகக் கொண்டவற்கு, வேறு எந்த அணிகலன் அணிந்தாலும், அவை பொருத்தமற்றதாகவே தோன்றும்.***

धार्मिकाय तदाकल्पं दातुं च समकल्पयत् ।
स्थाने हि बीजवद्दत्तमेकं चापि सहस्रधा ॥ 6

तदा - அப்பொழுது, आकल्पं - ஆபரணத்தை, धार्मिकाय - தார்மிகன் பொருட்டு, दातुं च - கொடுக்கிறதற்கும், समकल्पयत् - கல்பித்தான், स्थाने - ஸ்தானத்திலே, बीजवत् - விரையானது போல, दत्तम् - கொடுக்கப்பட்ட, एकं चापि - ஒன்றும், सहस्रधा हि - ஆயிரமன்றோ. 6

*பொருள் :- அந்த அணிகலன்களை ஒரு அறவோனுக்குக் கொடுக்க அவன் நிச்சயித்தான். சரியான இடத்தில் விதைக்கப்பட்ட விதைதான் பன்மடங்காகப் பெருகும்.*

तावता संन्यधात्कोऽपि सज्ञिधेस्तस्य संनिधौ ।
भागधेयविधेया हि प्राणिनां तु प्रवृत्तयः ॥ 7

तावता - அவ்வளவினாலே, कोपि - ஒருவன், सज्ञिधेः - சத்புருஷர்களுக்கு நிதியான, तस्य - ஜீவந்தரனுடைய, सज्ञिधौ - சமீபத்திலே, संन्यधात् - வந்தான், तु प्राणिनां - ஜீவன்களுக்கு, प्रवृत्तयः - வர்த்தனைகள், भागधेयविधेया हि - ஐச்வர்யங்களை பண்ணுகிறதுகளன்றோ. 7

*பொருள் :- அச்சமயம், சான்றோர்களிற் சிறந்த ஒருவன் ஜீவகனை நெருங்கி வந்தான். ஈடுபாடுகள் எப்போதுமே நற்பயனைத் தருகின்றன.*

आगच्छन्तमपृच्छच्च पामरं पार्श्वमात्मनः ।
कुतः कुत्र प्रयासि त्वं स्वास्थ्यं चास्ति न वेति च ॥ 8

आत्मनः - தன்னுடைய, पार्श्वं - ஸமீபத்தை, आगच्छन्तं- அடைந்திருக்கிற, पामरं - க்ருஷிகனை, कुतः - எங்குநின்றும், कुत्र - எவ்விடத்திலே, त्वं - நீ, प्रयासि - போகாநின்றாய், स्वास्थ्यं च - ஸ்வஸ்தமும், अस्ति - உண்டாகாநின்றது, न वा- இல்லையேதான, इति च - என்றும், अपृच्छच्च - கேட்டான். 8

***பொருள் :*** - தன்னை நோக்கி வரும் அந்த உழவனைப் பார்த்து, "நீ எங்கிருந்து வருகிறாய், எங்கு செல்கிறாய், நீ நலமாக இருக்கிறாயா இல்லையா" என்பன போன்ற கேள்விகளைக் கேட்டான்.

प्रीतः प्रत्यब्रवीत्सोऽपि प्रश्रयेण समाश्रितः ।
मुखदानं हि मुख्यानां लघूनामभिषेचनम् ॥ 9

प्रीतः - ப்ரீதியுடைய, प्रश्रयेण - வணக்கத்தினாலே, समाश्रितः - அடைந்திருக்கிற, सोऽपि - க்ருஷிகனும், प्रत्यब्रवीत्- ப்ரத்யுத்தரம் சொன்னான், मुख्यानां - முக்யர்களுடைய, मुखदानं - முகங்கொடுக்கிறது, लघूनां - கொஞ்சமான பேர்களுக்கு, अभिषेचनं हि - அபிஷேகமன்றோ. 9

***பொருள் :*** - அவன் மகிழ்ச்சி அடைந்தவனாக மிகவும் அடக்கத்துடன் முகம் கொடுத்துப் பேசினான். சிறந்தவர்களுடன் பேசுவது எளியோரைக் கௌரவிக்கும் செயலன்றோ.

इतस्ततो मया मह्यं गम्यते कार्यकाम्यया ।
स्वास्थ्यं स्वास्थ्यतमं भूयात्कार्येऽप्यार्यदृशो मम ॥10

इतस्ततः - இங்குமங்கும், मया - என்னாலே, मह्यं - என் பொருட்டு, कार्यकाम्यया - காரிய வார்த்தையினாலே, गम्यते - அடையாநின்றது, कार्येपि - கார்யத்திலேயும், आर्यादृशः - பூஜ்யனைக் கண்டிருக்கிற, मम - எனக்கு, स्वास्थ्यं - ஸ்வாஸ்த்யமானது, स्वास्थ्यतमं - ஸ்வாஸ்த்ய முகமானது, भूयात् - ஆகக்கடவது. 10

*பொருள் : - இந்த பூமியில் எனக்காக ஒரு செயல் முடிக்கப்பட வேண்டும் என்பதன் பொருட்டு நான் இங்கு மங்கும் அலைந்து கொண்டு இருக்கிறேன். வழிபடத்தக்க உம்மைக் கண்டதனால் அது ஈடேறும் என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டுள்ளது.*

इत्युक्तेन कुमारेण प्रत्युक्तो वृषलः पुनः ।
स्वास्थ्यं नाम न कृष्यादि जायमानं कृषीवल ॥ 12

कृषीवल - வாராய் க்ருஷீவலநே, कृष्यादि जायमानं - க்ருஷி முதலானத்தினாலே உண்டானது, स्वास्थ्यं नाम - ஸ்வாஸ்த்யமென்கிற பேர், न - அல்ல, इति - என்று, मत्तेन - சொல்லப்பட்டிருக்கிற, कुमारेण - குமாரனாலே, पुनः - பிற்பாடு, वृषलः - எருதுகளை மேய்ப்பவன், प्रत्युक्तः - சொல்லப்பட்டான். 12

*பொருள் : - இவ்வாறு கூறப்பட்டவுடன், ஜீவகன் அவனைப்பார்த்து பின் வருமாறு கூறினான். நல்வாழ்வு என்பது உழவுத் தொழிலால் மட்டுமே உண்டாவது இல்லை.*

षट्कर्मोपास्थितं स्वास्थ्यं तृष्णाबीजं विनश्वरम् ।
पापहेतुः परापेक्षि दुरन्तं दुःखमिश्रितम् ॥ 12

षट्कर्मोपास्थितं - ஷட்கர்மத்தினாலே உண்டான, स्वास्थ्यं - சுகமானது, तृष्णाबीजं - வார்த்தைக்கு விரையானது, विनश्वरम् - கெட்டதோடு கூடினது, पापहेतुः - பாபத்துக்கு காரணமானது, परापेक्षि - அன்யர்களினாலே, அபேக்ஷிக் கிறது, दुरन्तं - பொல்லாதது, दुःखमिश्रितम् - துக்கத்தினாலே மிஸ்ருதமானது. 12

**பொருள் : - ஆறு வகை செயல்களால் ஏற்படும் வாழ்வு, ஆசைக்கு அடிப்படையாகவும், அழியக் கூடியதாகவும், தீவினைக்கு காரணமாகவும், துயரத்தோடு கூடியதாகவும், பிறரை எதிர்பார்த்து இருப்பதாகவும், கெட்ட முடிவைக் கொண்டதாகவும் இருகிறது.**

आत्मोत्थमात्मना साध्यमव्याबाधमनुत्तरम् ।
अनन्तं स्वास्थ्यमानन्दमतृष्णमपवर्गजम् ॥ 13

आत्मार्थं - ஆத்மநிடத்திலே யுண்டானது, आत्मना - தன்னாலே, साध्यं - சாத்யமானது, अव्याबाधम् - பாதை இல்லாதது, अनुत्तरम् - உத்க்ருஷ்ட்டமானதும், अतृष्णं - வாஞ்சை இல்லாதது, अपवर्गजम् - மோக்ஷத்திலே உண்டானது, अनन्तम् - அனந்தமானது, स्वास्थ्यं - ஸ்வாஸ்த்யமானது, आनन्दं - சுகமானது. 13

**பொருள் : - வீடுபேற்றினால் ஏற்படும் இன்பம் ஆத்மாவிடம் தோன்றியதாகவும் ஆத்மாவினால் அடையக்கூடியதாகவும், தடையற்றதாகவும், சிறந்ததாயும், அழிவற்றதாகவும், வேட்கை அற்றதாயும் இருக்கிறது.**

**तदपि स्वपरज्ञाने याथात्म्यरुचिमात्रके ।
परित्यागे च पूर्णे स्यात्परं पदमात्मनः ॥ 14**

तदपि - அந்த சுகமும், स्वपरज्ञाने - தன்னையும் பரத்தையும் அறிகிற ஞானமும், याथात्मरुचिमात्रके - யதாஸ்வரூபமாக நம்புகிற ஸம்யக்த்வமும், परित्यागे - விடுகிறதற்கும், पूर्णे - நிறைந்துள்ளளவிலும், आत्मनः - தனக்கும், परं - உத்க்ருஷ்ட்டமான, पदं - ஸ்தானமானது, स्यात् - ஆகக்கடவது. 14

*பொருள் : - தன்னையும் தனக்கு மாறாக இருப்பதையும், அறியச் சாதனமாக விளங்கும் நல்லறிவு, நற்காட்சி, நல்லொழுக்கம் இவைகளால் மட்டுமே அந்த பேரின்பத்தை அடைய முடியும்.*

स्वमपि ज्ञानदृक्सौख्य सामर्थ्यदिगुणात्मकम् ।
परं पुत्रकलत्रादि विद्धि गात्रमलं परैः ॥ 15

ज्ञानदृक्सौख्यसामर्थ्यादिगुणात्मकम् - ஞானதர்சன ஸௌக்ய வீர்ய முதலான, குணஸ்வரூபமான, स्वमपि - தன்னையும், पुत्रकलत्रादि - புத்ர களத்ர முதலான, गात्रं - சரீரத்தையும், परं - அன்யமாக, विद्धि - அறிந்து, परैः - அன்யங்களினாலே, अलं - அமையும். 15

***பொருள் : - ஆத்மா அளவற்ற அறிவுள்ளது, அளவற்ற நோக்குள்ளது, அளவற்ற இன்பத்தைத் தரக் கூடியது என்று அறிவாயாக. மனைவி, மக்களையும், சரீரத்தையும் அந்த ஆத்மாவுக்கு ஏற்படும் அறிவின்மை என்று உணர்ந்து கொள்.***

एवं भिन्नस्वभावोऽयं देही स्वत्वेन देहकम् ।
बुध्यते पुनरज्ञानादतो देहेन बध्यते ॥ 16

एवं - இப்படி, भिन्नस्वभावः - பின்ன ஸ்வபாவமானது, अयं देही - இந்த ஜீவகனது, देहकम् - சரீரத்தை, स्वत्वेन - தான் என்கிறத்தினாலே, पुनः - பிற்பாடு, अज्ञानात् - அக்ஞானத்தினின்றும், बुध्यते - அறியப்படாநின்றது, अतः - இது காரணத்தினின்றும், देहेन - சரீரத்தோட, बध्यते - பந்திக்கப்படாநின்றது. 16

*பொருள் :* - *ஆகவே மனைவி, மக்கள், உடல் இவை யாவும் ஆத்மாவைக் காட்டிலும், வேறுபட்டது என்று அறிவாயாக. அறிவின்மையால்தான் மீண்டும் ஆத்மா உடலோடு சம்மந்தப்பட்டு அதன் வாயிலாக மறுபிறவி ஏற்படுகிறது.*

अज्ञानात्कायहेतुः स्यात्कर्माज्ञानमिहात्मनाम् ।
प्रतीके स्यात्प्रबन्धोऽयमनादिः सैव संसृतिः ॥ 17

अज्ञानात् - அக்ஞானத்தினின்றும், कार्यहेतुः - சரீரகாரணமான கர்மமானது, स्यात् - ஆகக்கடவது, इह - இவ்விடத்திலே, आत्मानं - ஜீவன்களுக்கு, कर्मज्ञानं - கர்மஞானத்தை, प्रतीके - அறிகிறவிடத்திலே, अयं - இந்த, प्रबन्धः - ப்ரபந்தமானது, अनादिः - அனாதியானது, स्यात् - ஆகக்கடவது, सैव - அதுவே, संसृतिः - சம்சாரமானது. 17

*பொருள் :* - *அறிவின்மையே மறுபடி ஒரு உடலை அடைவதற்கு காரணமாகிறது. அறிவின்மையால் செய்யப்படும் செயல் என்றும் ஆத்மாவைக் கட்டுப்படுத்துகிறது. இப்படிப்பட்ட கட்டுப்பாடு இந்த உலகியல் வாழ்வில் தொடக்கம் அற்றது.*

स्वं स्वत्वेन ततः पश्यन्परत्वेन च तत्परम् ।
परत्यागे मतिं कुर्याः कार्यैरन्यैः किमस्थिरैः ॥ 18

स्वं - தன்னை, स्वत्वेन - தான் என்கிறதினாலேயும், परं- பரமான, तत् - அதையும், परत्वेन च - பரமென்கிறதி னாலேயும், पश्यन् - பாராநின்றவனாய்க்கொண்டு, परित्यागे - விடுகிறதிலே, मतिं - புத்தியை, कुर्यात् - பண்ணு, अस्थिरैः - அஸ்திரங்களான, अन्यैः - அன்யங்களான, कार्यैः - கார்யங்களினாலே, किं - என்ன. 18

*பொருள் : - ஆகவே ஒருவன் தன்னை ஆத்மாவாகக் கொண்டு தன்னைக் காட்டிலும், வேறானதை வேறு விதமாகக்கொண்டு அதனை அகற்றிவிட முயற்சி செய்யவேண்டும். நிலையற்ற வேறு செயல்களால் என்ன பயன்!*

परत्यागकृतो ज्ञेयाः सानगारा अगारिणः ।
गात्रमात्रधनाः पूर्वे सर्वसावद्यवर्जिताः ॥ 19

सानगारा - ரிஷிகளோடு கூடி இருக்கிற, अगारिणः - க்ரஹஸ்தர்கள், परत्यागकृतः - பரதியாகத்தைப்பண்ணப் பட்டவர்கள், ज्ञेयाः - அறியபடுமவர்கள், पूर्वे - முந்தினவர்கள், सर्वसावद्यवर्जिताः - சர்வசாவத்யத்தை விடப்பட்டவர்கள், गात्रमात्रधनाः - சரீரகாத்ரமே தனமாக உடைத்தானவர்கள். 19

*பொருள் : - ஆகவே தன்னைக் காட்டிலும், வேறானவற்றை விட்டு ஒழித்தவர்கள் வாழ்வதற்கு இருப்பிடம்கூட இல்லாத முனிவர்கள் ஆவர். அவர்கள் தனது உடலை மட்டுமே தனக்கிருக்கும் செல்வமாகக் கொண்டு மற்ற தீமைகளை விட்டொழித்தவர்கள் ஆவர்.*

मूलोत्तरादिकान्वोढुं त्वं न शक्तो हि तद्गुणान् ।
नहि वारणपर्याणं भर्तुं शक्तो वनायुजः ॥ 20

मूलोत्तरादिकान् - மூலோத்தர முதலான, तद्गुणान् - அந்த குணங்களை, त्वं - நீ, वोढुं - தரிக்கிறதற்கு, न शक्तः - இயலாதவன், वारणपर्याणं - யானையின் மீது கட்டும் அம்பாரியை, भर्तुं - தாங்குவதற்கு, वनायुजः - குதிரையானது, शक्तः - சமர்த்தமானது, नहि - இல்லையன்றோ. 20

*பொருள் : - பற்று அற்றவர்களுடைய அறங்களை மேற்கொள்ளுவது என்பது இயலாத செயல், யானையின் மீது கட்டப்படும் அம்பாரியை குதிரையால் தூக்க இயலாது.*

अतस्त्वमधुना धर्मं गृहाण गृहमोधिनाम् ।
न ह्यारोढुमधिश्रेणि यौगपद्येन पार्यते ॥ 21

अतः - இது காரணத்தினின்றும், त्वं - நீ, अधुना - இப்பொழுது, गृहमेधिनाम् - க்ரஹஸ்தர்களுடைய, धर्मं - தர்மத்தை, गृहाण - க்ருஹியாநின்று, अधिश्रेणि - ஸ்ரேணியாரோஹணத்தை, यौगपद्येन - யுகபத் பிரகாரத்தினாலே, आरोढुं - ஏறுகிறதற்கு, पार्यते - விஸ்தரிக்கப்படாநின்றது, नहि - இல்லையன்றோ. 21

*பொருள் : - ஆகவே நீ இப்போது இல்லற அறத்தை மேற்கொள்வாயாக. மாடிப்படிகளில் ஏறும்போது படிப்படியாகத்தான் ஏற வேண்டும். ஒரே நேரத்தில் தாண்டிச் செல்வது என்பது இயலாது.*

त्रिचतुः पञ्चभिर्युक्ता गुणशिक्षाणुभिर्व्रतैः ।
तत्वधीरुचिसंपन्नाः सावद्या गृहमेधिनः ॥ 22

त्रिचतुः पञ्चभिः - மூன்று, நாலு, ஐந்து பிரகாரங்களான, गुणशिक्षाणुभिर्व्रतैः - குணசிக்ஷாணுவிரதங்களோட, युक्ताः - கூடினவர்கள், तत्वरुचिसंपन्नाः - தத்வஞானசம்யக்த்வங்களினாலே நிறைந்தவர்கள், सावद्याः - சாவத்யங்களையுடைத்தான வர்கள், गृहमेधिनाः - க்ரஹஸ்தர்கள். 22

*பொருள் :- ஐந்து [1]அனுவிரதங்களோடும், மூன்று குண விரதங்களோடும், கூடிய கிரஹஸ்தர்கள் நற்காட்சியைப் பெற்றவர்கள் ஆவர்.*

अहिंसा सत्यमस्तेयं स्वस्त्रीमितवसुग्रगहौ ।
मद्यमांसमधुत्यागैस्तेषां मूलगुणाष्टकम् ॥ 23

अहिंसा - ஜீவ ஹிம்சை இல்லாததும், सत्यं - சத்யமும், अस्तेयं - திருடாதது, स्वस्त्रीमितवसुग्रहौ - ஸ்வஸ்திரியான மிதம்பனானின் ஸ்வர்ணகிரஹணங்கள், मद्यमांसमधुत्यागैः - கள்ளு, மாம்சம் மதுகளோட, तेषां - அவர்களுக்கு, मूलगुणाष्टकम् - மூலகுணாஷ்ட்டகமாம். 23

*பொருள் :- அஹிம்சை, சத்யம், கள்ளாமை, பிறன்மனை நோக்காமை, பிறருடைய சொத்துக்களைத் தனதாகக் கொள்ளாமை, கள் உண்ணாமை, புலால் மறுத்தல், மது உண்ணாமை ஆகிய எட்டும் அடிப்படைத் தன்மைகளாகும்.*

भोगोपभोगसंहारोऽनर्थदण्डप्रतान्वितः ।
गुणानुबृंहणाद्ज्ञेयो दिग्व्रतेन गुणव्रतम् ॥ 24

---

*1. அஹிம்சை, சத்யம், கள்ளாமை, பிரம்மசரியம், பரிமிதபரிக்ரமம் என அனுவிரதங்கள் ஐந்தாகும்.*

भोगोपभोगसंहारः - போகோப யோகபரிமாணமாநது. अनर्थदण्डव्रतान्वितः - அனர்த்ததண்ட விரததிதோட கூடினது. गुणानुबृंहणात् - குணங்களுடைய வர்த்தனையபினின்றும். दिग्व्रतेन - திக்விரதத்தோட குணவிரதமானது. ज्ञेयः - அறியப்படுமது. 24

பொருள் : - அனுபவிக்கக்கூடிய பொருட்களை அளவாக அனுபவிப்பதும், தண்டனையைத் தரக்கூடிய தேவை இல்லாத செயல்களைச் செய்து தீவினையைச் சேர்த்து கொள்ளுதலும், குறிப்பிட்ட திசையை எந்த விதத்திலும் பயன்படுத்தக்கூடாது என்னும் நிலைபாடும், இவை மூன்றும் திக்விரதம் என்று அழைக்கப்படுகிறது.

सप्रोषधोपवासेन व्रतं सामायिकेन च ।
देशावकाशिकेन स्याद्वैयावृत्यं तु शिक्षकम् ॥ 25

*सप्रोषधोपवासेन- ப்ரோஷதோபவாஸத்தோடேயுங் கூடின, सामायिकेन च - சாமாயிகத்தோடேயும், देशावकाशिकेन - தேசாவகாசிகத்தோடேயும், तु - பின்னை, वैयावृत्यं - வையாவிருத்யமும், शिक्षकम् - சிக்ஷகமென்று பேரையுடைய, व्रतं - விரதமானது, स्यात् - ஆகக்கடவது. 25

* நான்கு கஷாயங்களையும், ஐந்து இந்திரிய விஷயங்களையும், நால்வகை ஆகாரங்களையும் நீங்கி இருப்பதே ப்ரோஷதோபவாஸமாகும். சந்தியா காலங்களில் கிருஹஸ்தர்களால் செய்யப்படும் தருமத் தியானமே ஸாமாயிகமாகும். தானிருக்கும் தேசம் தவிர வேறு எந்த தேசத்தினுடையவும் இதர தேசவஸ்த்துக்களுடையவும் சம்மந்தத்தை வைத்துக்கொள்வதில்லை என்றும் விரதம் பண்ணிக்கொள்ளுவது தேசாவகாசிகமாகும். சத்பாத்திரங்களுக்கு ஆஹாரம், அபயம், ஔஷதம், சாஸ்திரம் என்னும் நான்குவித தானத்தைச் செய்வது வையாவிருத்தியமாகும்.

பொருள் : - குறிப்பிட்ட பொருட்களை உண்ணாமல் இருத்தல், குறிப்பிட்ட வேளைகளில் செய்யும் தியானம், தனது நாட்டைத் தவிர வேறு நாடுகளுக்கு செல்வது இல்லை என்றும், சான்றோர்களுக்கு தேவையானதை தருவது ஆகியவற்றை ஒருவன் கடைபிடிக்க வேண்டும்.

परिच्छिन्नदिशि प्राप्तिं त्यागं निष्फलदुष्कृतेः ।
मितान्नस्त्रादिकत्वं च कृत्यं विद्धि गुणव्रते ॥ 26

परिच्छिन्नदिशिप्राप्तिं - பிரமாணம் பண்ணப்பட்ட திக்கினுடைய பிராப்தியையும், निष्फलदुष्कृतेः - பலமில்லாத துஷ்கார்யத்தினுடைய, त्यागं - விடுகையும், मितान्नास्त्रादिकत्वञ्च- மிதம் பண்ணின அன்ன அஸ்த்ர முதலானதையும், गुणव्रते - குணவிரதத்திலே, कृत्यं - பண்ணப்படுமென்று, विद्धि - அறி. 26

பொருள் : - எந்த குறிப்பிட்ட திசையிலும் உள்ள பொருளை பயன்படுத்துவதில்லை, என்றும், அந்த திசைகளில் உள்ள மனிதர்களிடம் எந்த விதத்திலும் தொடர்பு வைத்துக்கொள்வதில்லை என்றும், பயனற்ற பொருட்களையும் தீச்செயல்களையும், விட்டொழிப்பது என்றும், உணவு, கருவி முதலானவற்றை அளவோடு பயன்படுத்தி நோன்பு மேற்கொள்வதே குணவிரதம் என்று அழைக்கப்படுகிறது.

सञ्चारस्यावधिर्नित्यं सचिह्ना चात्मभावना ।
दानाद्यैरुपवासश्च पर्वादिष्वन्यतः कृती ॥ 27

सञ्चारस्य - சஞ்சாரத்தினுடைய, अवधिः-முடிவு, नित्यं - அனவரதம், सचिह्ना - சின்ஹத்தோடு கூடின, आत्मभावना च -

ஆத்மபாவனையும், दानाद्यैः - தானம் முதலானது களினாலேயும், पर्वादिषु - பர்வ திதி முதலானதுகளிலே, उपवासश्च - உபவாசமும், अन्यतः - அன்யத்தினின்றும், कृती- புண்யவானானவன். 27

பொருள் : - சிறந்தவன், எப்பொழுதும் தான் செல்லும் இடங்களுக்கான வரையறையை வைத்துக்கொண்டும், அடையாளங்களுடன் கூடிய தனது பொருட்களை மட்டும் பயன்படுத்திக்கொண்டும், சான்றோர்களுக்கு கொடை முதலானவற்றை அளித்துக்கொண்டும், குறிப்பிட்ட காலங்களில் உண்ணாமையை மேற்கொண்டும், தான் கற்றவாறு, வாழ்க்கை முறையைப் பின்பற்ற வேண்டும்.

अणुव्रती व्रतैरेतैः क्वचिद्देशे क्वचित्क्षणे ।
महाव्रती भवेत्तस्माद्ग्राह्यं धर्ममगारिणाम् ॥ 28

अणुव्रती - அணுவ்ரதியானவன், एतैः व्रतैः - இந்த விரதங்களினாலே, क्वचिद्देशे - ஒரு விரதத்திலே, क्वचित्क्षणे - ஒரு க்ஷணத்திலே, மஹாவ்ரதியானவன், भवेत् - ஆகக்கடவன், तस्मात् - அது காரணத்தினின்று, अगारिणाम् - கிரஹஸ்தர்களுடைய, धर्मं - தர்மமானது, ग्राह्यं - க்ரஹிக்கப்படுமது. 28

பொருள் : - இவ்வாறு அணுவிரதத்தைப் பின்பற்றுபவன், ஒவ்வொரு இடத்திலும், ஒவ்வொரு கணமும், மஹாவ்ரதியாக ஆகிறான். ஆகவே இல்லற நோன்பை மேற்கொள்வாயாக.

इत्युक्तः प्रत्यगृह्णाच्च स धर्मं गृहमेधिनाम् ।
कः कदा कीदृशो न स्याद्भाग्ये सति पचेलिमे ॥ 29

इति - என்று, उक्तः - சொல்லப்பட்டிருக்கிற, सः - அந்த க்ருஷீவலனானவன், गृहमेधिनाम् - க்ருஹஸ்தர்களுடைய, धर्मं - தர்மத்தை, प्रत्युगृह्णाच्च - திரும்பிக்கைக்கொண்டான், भाग्ये - பாக்யமானது, पचेलिमे सति - முற்றுதலாயிருந்துள்ளளவில், कः - எவன், कीदृशः - எப்படிப்பட்டவன், कदा - எப்பொழுது, नश्यात् - நாசமாகக்கடவன். 29

*பொருள் : - இவ்வாறு ஜீவகனுடைய அறிவுரையை ஏற்றுக்கொண்ட அந்த உழவன் இல்லறத்தை மேற்கொண்டான். நல்வினை, பயனைத் தரும்போது யார்தான் அழிந்து விடுவர் ? (யாரும் அழியமாட்டார்)*

अत्यादरान्निजाहार्यममुष्मै दानविद्ददौ ।
नादाने किन्तु दाने हि सतां तुष्यति मानसम् ॥ 30

दानवित् - தானஸ்வரூபத்தை அறிந்த ஜீவந்தரனானவன், अत्यादरात् - மிகவும் தாத்பர்யத்தினின்றும், निजाहार्यम् - தன்னுடைய ஆபரணத்தை, अमुष्मै - க்ருஷிகன் பொருட்டு, ददौ - கொடுத்தான், सतां - சத்புருஷர்களுக்கு, मानसम् - மானஸமானது, आदाने - ஸ்வீகரிக்கிறத்திலே, तुष्यति - சந்தோஷமாகாநின்றது, न - இல்லை, किन्तु - விசேஷமுண்டு, दाने - கொடுக்கிறத்திலே, हि - சந்தோஷமன்றோ. 30

***பொருள் : - ஜீவந்தரன் தன்னிடம் இருந்த நகையை உழவன்மீது இருந்த மிகுந்த மரியாதை காரணமாக தானமாக அளித்தான். பிறரிடம் இருந்து பெற்றுக்கொள்ளாமல், தன்னால் பிறருக்கு வழங்கப்படும்போது சான்றோர், மனம் மகிழ்கின்றனர்.***

अनर्घ्याकल्पलाभाच्च धर्मलाभाच्च पिप्रिये ।
तादात्विक सुखप्रीतिः संसृतौ हि विशेषतः ॥ 31

अनर्घ्याकल्पलाभाच्च - பூஜ்யமான ஆபரண லாபத்தினின்றும், धर्मलाभाच्च - தர்ம லாபத்தினின்றும், पिप्रिये - மிகவும் சந்தோஷித்தான், तादात्विकसुखप्रीतिः- தத்காலத்தில் உண்டான சுக ப்ரிதியானது, संसृतौ - சம்சாரத்திலே, विशेषतो हि - விசேஷத்தினின்றும் மன்றோ.

*பொருள் :* - *விலை மதிப்பற்ற ஆபரணங்களையும், அறிவுரைகளையும் அடைந்த அவன், மிக மகிழ்ந்தான். இவ்வுலக வாழ்வில் உடனடியாகக் கிடைக்கும் மகிழ்ச்சிக்கு ஈடு ஏதும் உண்டோ?*

तं विसृज्य ततः स्वामी तस्य स्मृत्वैव निर्ययौ ।
प्रत्यक्षे च परोक्षे च सन्तो हि समवृत्तिकाः ॥ 32

तं - க்ருஷிகனை, विसृज्य - விட்டு, ततः - பிற்பாடு, स्वामी - ஜீவந்தரஸ்வாமியானவன், तस्य - அவனுடைய, स्मृत्वैव - நினைத்துக்கொண்டே, निर्ययौ - அடைந்தான், प्रत्यक्षे च - ப்ரத்யக்ஷத்திலேயும், परोक्षे च - பரோக்ஷத்திலேயும், सन्तः - சத்புருஷர்கள், समवृत्तिकाः हि - சமான வர்த்தனைகளையுடைத்தானவர்களன்றோ. 32

*பொருள் :* - *ஜீவந்தரன் அந்த உழவனை விட்டுவிட்டு, அவனையே மனதில் நினைத்துக்கொண்டு, புறப்பட்டான். எதிரிலும், மறைவிலும் சான்றோர்கள் ஒரே விதமான நடத்தையை உடையவர்கள்.*

अथारण्ये क्वचिच्छ्रान्तो निषण्णो निरुपद्रवः ।
शरण्यं सर्वजीवानां पुण्यमेव हि नापरम् ॥ 33

अथ - பிற்பாடு, अरण्ये - காட்டிலே, क्वचित् - ஓரிடத்திலே, श्रान्तः - களைத்தவனாக, निरुपद्रवः - உபத்ரவமில்லாதவனாய்க்கொண்டு, निषण्णः - இருந்தான், सर्वजीवानां - சர்வ ஜீவன்களுக்கும், पुण्यमेव - புண்யமே, शरणं हि - சரண்யமன்றோ, अपरं - அன்யமானது, न - அல்ல.

*பொருள் : - பிறகு, களைப்படைந்த ஜீவந்தரன், காட்டில், எந்தவிதமான தொந்தரவும் இல்லாத ஓரிடத்தில் களைத்தவனாக அமர்ந்தான். எல்லோரும் நல்வினை களையே அடைக்கலமாக அடைகின்றனர் அன்றோ !*

तत्र चैकाकिनीं रामां पश्यन्तासीत्पराङ्मुखः ।
अपदोषानुषङ्गा हि करुणाकृतिसंभवाः ॥ 34

तत्र च - அவ்விடத்திலேயும், एकाकिनीम् - ஒருத்தியான, रामां - ஸ்த்ரீயை, पश्यन् - பாராய் நின்றவனாய்கொண்டு, पराङ्मुखः - விமுகநானவன், आसीत् - ஆனான், अपदोषानुषङ्गा- தோஷானுஷங்கமல்லாதது, करुणाकृतिसंभवा हि - க்ருபையுடனே கூடின புண்யவான்களிடத்திலே உண்டானதன்றோ. 34

*பொருள் : - அங்கு தனியே அழகாக நின்றுகொண்டிருந்த ஒருத்தியைக் கண்டு, அவளைக் காண விருப்பமில்லாமல் திரும்பி நின்றான். கருணையினால் செய்யும் செயல்கள் ஒருவனை இடையூறில் சிக்கச்செய்யுமல்லவா ?*

सा तु जाता वृषस्यन्ती वृषकन्धरस्य वीक्षणात् ।
अप्राप्ते हि रुचिः स्त्रीणां न तु प्राप्ते कदाचन ॥ 35

तु - பின்னை, सा - அவள், वृषस्कन्धस्य - எருது போன்ற தோள் படைத்தவனுடைய, वीक्षणात् - பார்வையினின்றும், वृषस्यन्ती - விகாரத்தையுடைத்தானவர்கள், जाता - ஆனாள், स्त्रीणां - ஸ்திரியர்களுக்கு, रुचिः - ருசியானது, अप्राप्ते - ப்ராப்தி இல்லாதததத்திலே, तु - பின்னை, प्राप्ते - ப்ராப்தியிலே, कदाचन - ஒருக்காலும், नहि - இல்லை யன்றோ. 35

***பொருள் : - பிறகு அவள் எருதின் திமில் போன்ற தோள்கள் படைத்த அவனை நோக்கினாள். கிடைக்க முடியாதது கிடைத்தால், பெண்களுக்கு அதில் மிகுந்த ஈடுபாடு ஏற்படும் அன்றோ!***

अश्वस्यन्तीं विभाव्यैनामाकूतज्ञो व्यरज्यत ।
अनुरागकृदज्ञानां वशिनां हि विरक्तये ॥ 36

आकूतज्ञः - அபிப்ராயத்தை அறிந்திருக்கிற ஜீவந்தரனானவன், एनां - இவளை, अश्वस्यन्तीं - விகாரத்தை யுடைத்தானவனாக, विभाव्य - பாவித்து, व्यरज्यत - வெறுத்தான், अज्ञानां - அக்ஞானிகளுக்கு, अनुरागकृत् - வார்த்தையை பண்ணுகிறது, वशिनां - ஜிதேந்திரியர்களுக்கு, विरक्तये हि - விரக்தியின் பொருட்டன்றோ. 36

***பொருள் : - ஜீவந்தரன் அவளது மனம் இயல்பாக இல்லாமல், அறத்துக்கு ஒவ்வாத எண்ணம் கொண்டவளாக அவளை அறிந்து, அவளை வெறுத்தான். அறிவிலிகளுக்கு எதில் ஈடுபாடு ஏற்படுமோ, அதில் புலனடக்க முடையவர்கள் வெறுப்பைத்தான் கொள்வர்.***

पृथक्चेदङ्गनिर्माणं चर्ममांसमलादिकम् ।
सजुगुप्सेऽत्र तत्पुञ्जे मूढात्मा हन्त मुह्यति ॥ 37

चर्ममांसमलादिकम् - சர்மமாம்சம் முதலான, अङ्गनिर्माणं - சரீர நிர்மாணமானது, पृथक्चेत् - வேறாகில், सजुगुप्से - ஜுகுப்ஸையோடேகூடின, अत्र तत्पुञ्जे - இந்த சமூகத்திலே, मूढात्मा - மூடாத்மாவானது, मुह्यति - மோஹியாநின்றது, हन्त - கெட்ட கெட்ட. 37

*பொருள் : - முட்டாள் மட்டுமே தோல், மாமிசம், மலம் இவைகளால் ஏற்பட்ட அறுவெறுக்கத்தக்க இந்த உடலின் மீது ஈடுபாடு கொள்கிறான்.*

दुर्गन्धमलमांसादि व्यतिरिक्तं विवेचने ।
नेक्षते जातु देहेऽस्मिन्मोहे को हेतुरात्मनाम् ॥ 38

दुर्गन्धमलमांसादि - துர்கந்தமலமாம்ச முதலானது, व्यतिरिक्तं - வேறாக, विवेचने - பிரிந்துள்ளளவில், जातु - ஒருக்காலும், नेक्षते - பார்க்கப்படாநின்றதல்ல, मोहे - மோஹமயமான, अस्मिन् देहे - இந்த சரீரத்திலே, आत्मनां - ஜீவன்களுக்கு, हेतुः - காரணமானது, कः - எது. 38

*பொருள் : - ஆத்மா இவ்வுடலை விட்டு நீங்கினால், இவ்வுடலில் தோல், தசை, நரம்பு, எலும்பு, மலம் ஆகியவைகளே மிஞ்சுகின்றன. ஆகவே அறுவருக்கத்தக்க இந்த உடலில்தான் முட்டாள் ஈடுபாடு கொள்கிறான்.*

अज्ञानमशुचेर्बीजं ज्ञात्वा व्यूहं च देहकम् ।
आत्मात्र सस्पृहो वक्ति कर्माधीनत्वमात्मनः ॥ 39

अज्ञानम् - அக்ஞானமானது, अशुचेः - அசுசிக்கு, बीजं - பீஜமானது, व्यूहं - சமூகமான, देहकम् - சரீரத்தையும், ज्ञात्वा- அறிந்தும், सस्पृहः - வார்த்தையுடன் கூடின, आत्मा - ஜீவன், अत्र - இவ்விடத்திலே, आत्मनः - தனக்கு, कर्माधीनत्वं - கர்மாதீனத்வத்தை, वक्ति - சொல்லாநின்றான். 39

**பொருள் :** - ஆராய்ந்து நோக்கினால், இவ்வுடலில் துர்கந்தமுள்ள மலம், மாம்ஸம் இவைகளைத் தவிர வேறொன்றுமில்லை. இதில் ஆத்மா வேறாகத் தெரிவது ஏன்?

मदीयं मांसलं मांसममीमांसेयमङ्गना ।
पश्यन्ती पारवश्यान्धा ततो याम्यात्मनेऽथवा ॥ 40

मदीयं - என்னுடைய சம்மந்தமரன, मांसलं - மாம்ஸ மயமான, मांसं - மாம்சத்தை, अमीमांसा - பரீட்சை இல்லாத, इयमङ्गना - இந்த ஸ்திரியானவள், पश्यन्ती - பாராய் நின்றவளாய்க் கொண்டு, पारवश्यान्धा - பாவசனத்தினால் தெரியாதவள், ततः - அது காரணத்தினின்றும், अथवा - பிற்பாடு, आत्मने - என் பொருட்டு, यामि - அடைகிறேன். 40

**பொருள் :** - எனது மாமிச உடலின் மீது ஆசை கொண்ட இப்பெண், என்னைப் பார்த்துத் தன் வயமிழந்தவளாக இருக்கிறாள். ஆகவே நான் தன்னடக்கமுடையவனாக என்னை ஆக்கிக்கொள்கிறேன்.

अङ्गारसदृशी नारी नवनीतसमा नराः ।
तत्तत्सान्निध्यमात्रेण द्रवेत्पुंसां हि मानसम् ॥ 41

अङ्गारसदृशी - அக்னிக்கு சமானமானவர்கள், नारी - ஸ்திரியானவள், नवनीतसमाः - வெண்ணெய்க்கு சமமானவர்கள், नराः - மனுஷ்யர்கள், तत्तत्सांन्निध्यमात्रेण - ஒருத்தருக்கொருத்தர், சமீபிச்சமாத்திரத்தினாலே, पुंसां - புருஷர்களுக்கு, मानसम् - மனசானது, द्रवेद्धि - உருகக்கடவதன்றோ. 41

*பொருள் : - பெண் நெருப்புக்1குச் சமமானவள். ஆண் வெண்ணெய் போன்றவன். பெண் ஒருத்தி (எதிரில்) இருந்தாலே மனிதனின் மனம் உருகிவிடும்.*

सल्लापवासहासादि तद्वर्ज्यं पापभीरुणा ।
बालया वृद्धया मात्रा दुहित्रा वा व्रतस्थया ॥ 42

पापभीरुणा - பாபத்துக்கு பயந்தவனாலே, बालया - பாலையோடேதான், वृद्धया - வ்ருத்தயோடேதான், मात्रा - தாயோடேதான், दुहित्रा वा - புத்ரியோடேதான், व्रतस्थया - விரதஸ்தையோடேதான, सल्लापवास हासादि - பேசுகிறது கூடி இருக்கிறது, சிரிப்பு முதலானது तत् - அது, वर्ज्यम्- வர்ஜிக்கப்படுமது. 42

*பொருள் : - பாவத்துக்கு அஞ்சுபவன், சிறுமியுடனோ, வயது முதிர்ந்தவளுடனோ, தாயுடனோ, மகளுடனோ, நோன்பு மேற்கொண்டிருக்கும் பெண்ணுடனோ (விதவையுடனோ) அதிகமாகப் பேசுதல், உடனிருத்தல், சிரித்தல் ஆகியவற்றை செய்யக்கூடாது.*

इति वैराग्यतर्केण ततो यातुं प्रचक्रमे ।
भेतव्यं खलु भेतव्यं प्राज्ञैरज्ञोचितात्परम् ॥ 45

इति - என்று, वैराग्यतर्केण - வைராக்ய விசாரத்தினாலே, ततः - அங்கு நின்று, यातुं - அடையிறதுக்கு, प्रचक्रमे - தொடங்கினான், प्राज्ञैः - ஞானவான்களினாலே, अज्ञोचितात् - அக்ஞானிக்கான யோக்யத்தினின்றும், परं - அன்யம், खलु - ஸ்புடமாக, भेतव्यं - பயப்படப்படுமது. 43

***பொருள் :*** - இவ்வாறு மனதில் நினைத்து, ஜீவந்தரன் அங்கிருந்து புறப்பட்டான். அறிவிலிகளுக்கு ஏற்ற நிகழ்ச்சிகளினின்று அறிவாளிகள் அஞ்சுதல் இயல்பு.

विरक्तमेव रक्ता सा निश्चिकाय विपश्चितम् ।
निसर्गादिङ्गितज्ञानमङ्गनासु हि जायते ॥ 44

रक्ता - ஆசக்தியான, सा - அவள், विपश्चितम् - வித்வாம்சனான ஜீவந்தரனை, विरक्तमेव - விரக்தனாகவே, निश्चिकाय - நிச்சயம் பண்ணினாள், अङ्गनासु - ஸ்திரியரிடங்களிலே, निसर्गात् - ஸ்வபாவத்தினின்றும், इङ्गितज्ञानं - பிறருடைய குறிப்பை அறிகிற ஞானமானது, जायते हि- உண்டாகாநின்றதன்றோ. 44

***பொருள் :*** - ஜீவந்தரனிடம் ஈடுபாடு கொண்ட அந்தப் பெண், அவன் அவளிடம் ஈடுபாடு கொள்ளவில்லை என்பதை அறிந்து கொண்டாள். பெண்களுக்கு இயல்பாகவே குறிப்பறியும் தன்மை உண்டு.

तस्य स्वान्तं वशीकर्तुं स्वोदन्तमियमूचिषी ।
प्रतारणाविधौ स्त्रीणां बहुद्धारा हि दुर्मतिः ॥ 45

तस्य - ஜீவந்தரனுடைய, स्वान्तं - மனஸை, वशीकर्तुं - வசம் பண்ணுகிறதற்கு, स्वेदन्तम् - தன்னுடைய விருத்தாந்தத்தை, इयं - இவள், ऊचिषी - சொன்னாள், (तथा) स्त्रीणां - ஸ்திரியர்களுக்கு, प्रतारणविधौ - வஞ்சகம் பண்ணுகிற காரியத்திலே, *बहुद्धारा - பலவிதமான வழிகளில், दुर्मतिः हि- கெட்ட எண்ணங்கள் இருக்குமன்றோ ! 45

*பொருள் : - ஜீவந்தரனின் மனதைத் தன்வயப்படுத்த அவள் தனது வாழ்க்கையை அவனுக்குக் கூறினாள். பிறரை வயப்படுத்துவதில்பெண்கள் பலவிதமான வழிகளைப் பின்பற்றுவர் அன்றோ ?*

विद्धि दीनां महाभाग मां विद्याधरकन्यकाम् ।
स्यालेनात्र बलान्नीतां त्यक्तामात्मप्रियाभयात् ॥ 46

महाभाग - மஹா பாக்யவானே, अत्र - இவ்விடத்திலே, स्यालेन - மைத்துனனாலே, बलात् - பலோதாரத்தினின்றும், नीतां - அடைவிக்கப்பட்ட, आत्मप्रियाभयात् - தன்னுடைய ஸ்திரியினுடைய பயத்தினின்றும், त्यक्तां - விடப்பட்டிருக்கிற, दीनां - தீனையான, मां - என்னை, विद्याधरकन्यकाम् - வித்யாதர கன்யகையாக, विद्धि - அறி.

*பொருள் : - பெருமதிப்புக்குரியவரே ! நான் ஒரு வித்தியாதரப்பெண். எனது மைத்துனன் என்னை இங்கு பலாத்காரமாகத் தூக்கி வந்துவிட்டான். பிறகு தனது மனைவியின் மீதுள்ள அச்சத்தால், என்னை விட்டுவிட்டான்.*

अनङ्गतिलकां नाम्ना पुंसां तिलक रक्ष माम् ।
अशरण्यशरण्यत्वं वरेण्ये वर्ततामिति ॥ 47

---

* cm.

पुंसां - புருஷர்களுக்கு, तिलक - வாராய் முக்யனே, नाम्ना - பேரினாலே, अनङ्गतिलकां - அனங்கதிலகையான, मां- என்னை, रक्ष - ரக்ஷி, अशरण्यशरण्यत्वं - சரணமில்லாதவர் களுக்கு சரண்ய தவமானது, वरण्ये - முக்யனிடத்திலே, वर्तताम् - வந்திக்கக் கடவது, इति- என்று சொன்னாள். 47

***பொருள் :*** *- மனிதர்களுள் சிறந்தவனே! அனங்கதிலகா என்று அழைக்கப்படும் என்னைக் காப்பாற்று ! அடைக்கலம் அற்றவர்க்கு அடைக்கலம் அளிக்கும் சிறப்பு உன்னைச் சேரட்டும்.*

तावतार्तस्वरः कोऽपि शुश्रुते श्रुतशालिना ।
क्व प्रयाता प्रिये प्राणा मम यान्तीतिदुःसहाः ॥ 48

तावता - அவ்வளவிலே, आर्तस्वरः - ஆர்த்தமான த்வனியையுடைய, कोपि - ஒருத்தன், प्रिये - வாராய் ப்ரியையே, त्वं - எங்கே, प्रयाता - போனாய், मम - என்னுடைய, दुस्सहाः - சஹிக்கிறதுக்கு முடியாத, प्राणाः - ப்ராணன்கள், यान्ति - போகாநின்றதுகள், इति- என்று, श्रुतशालिना - ஸ்ருதசாலியான ஜீவந்தரனாலே, शुश्रुवे - கேட்கப்பட்டான். 48

***பொருள் :*** *- அப்போது, துயருற்ற குரலில் ஒருவன், "அன்பானவளே ! என்னால் பொறுத்துக்க முடியவில்லை. என் உயிர் போய்க்கொண்டிருக்கிறது" என்ற குரலை ஜீவந்தரன் கேட்டான்.*

योषाप्येषामिषेणास्माज्ञिमेषादिव निर्ययौ ।
मायामयी हि नारीणां मनोवृत्तिर्निसर्गतः ॥ 49

एषा - இந்த, येषापि - ஸ்திரியும், आमिषेण - வ்யாஜ்யத்தினாலே, अस्मात् - இவ்விடத்தினின்றும், निमेषादिव - இமைக்கொட்டுகிறத்திநின்றும் போல, निर्ययौ - அடைந்தாள், नारीणां - ஸ்திரியர்களுக்கு, मायामयी - மாயாமயமான, मनोवृत्तिः - மனோவர்த்தனையானது, निसर्गतो हि - ஸ்வபாவத்தினின்றுமன்றோ. 49

*பொருள் : - கண்ணிமைக்கும் நேரத்தில் அந்தப்பெண் அந்த இடத்தினின்று சென்றுவிட்டாள். பெண்களின் மனம் இயல்பாகவே மாயைகள் நிரம்பியது.*

आर्त्तस्वरकरोऽप्याह दैन्यं मान्यस्य वीक्षणात् ।
शोच्याः कथं न रागान्धा ये तु वाच्यान्न बिभ्यति ॥ 50

आर्त्तस्वरकरोपि - துக்கமான ஸ்வரத்தைப் பண்ணுகிற வித்யாதரனும், मान्यस्य - பூஜ்யனான ஜீவந்தரனுடைய, वीक्षणात् - காண்கையினின்றும், दैन्यं - தைன்யத்தை, आह - சொன்னான், रागान्धाः - ராகத்தினாலே தெரியாத, ये - யாது சிறிது பேர்கள், तु - பின்னை, वाच्यात् - பழிச்சொல்லநின்றும், न बिभ्यति - பயப்படா நின்றார்களில்லை. ते - அவர்கள், कथं - எப்படி, शोच्याः - துக்கிக்கப்படுமவர்கள், न - அல்ல. 50

*பொருள் : - மரியாதைக்குரிய ஜீவந்தரனைக் கண்டவுடன் அழுது புலம்பிக்கொண்டிருந்த அவன், தனது துயரை அவனிடம் கூறினான். காமத்தால் குருடாகிப் பிறரது நற்சொற்களைக் கேளாதோர் துயர்ப்பட வேண்டியதுதானே ?*

उदन्योपद्रुतामत्र मान्यभार्यां पतिव्रताम् ।
पानीयार्थमवस्थाप्य नाद्राक्षं प्रस्थितागतः ॥ 51

अत्र - இவ்விடத்திலே, उदन्योपद्रुताम् - தண்ணீர் தாகத்திலுபத்ரவமான, पतिव्रता - பதிவிரதையான, मान्यभार्यां - பூஜ்யமான பார்யை, अवस्थाप्य - ஸ்தாபித்து, पानीयार्थं - ஜலநிமித்தமாக, प्रस्थितागतः - போய்வந்தேன், नाद्राक्षं - கண்டேனில்லை. 51

*பொருள் : - கற்புடைய என் மனைவி வேட்கையால் வருந்தியதால், நீர் கொணர்வதற்காக அவளை இங்கே இருத்திச் சென்றேன். திரும்பி வந்தபோது அவளைக் காணவில்லை.*

विद्याप्यविद्यमानैव मम विद्याधरोचिता ।
मर्त्योत्तम भवानत्र कर्तव्यं कथयेदिति ॥ 52

मम - எனக்கு, विद्याधरोचिता - வித்யாதரருக்கு யோக்யமான, विद्याऽपि - வித்தையும், अवद्यमानैव - இல்லாததே, मर्त्योत्तम - மனுஷ்யருக்கெல்லாம் உத்தமனே, भवान् - நீ, अत्र - இவ்விடத்திலே, कर्तव्यं - பண்ணப்படுமது, इति - என்று, कथयेत् - சொல்லக்கடவது. 52

***பொருள் : - நான் கற்றவைகளும் கல்லாதவைபோல் விளங்கும் வித்யாதரனான எனக்கு, மனிதர்களுக்குள் சிறந்த நீதான், எதனைச் செய்ய வேண்டும் (எனது கடமை என்ன) என்பதை உரைக்கவேண்டும்.***

पुरन्ध्रीष्वति संधानादभैषीदभयङ्करः ।
वचनीयाद्धि भीरुत्वं महतां महनीयता ॥ 53

अभयङ्करः - பயத்தைப் பண்ணாத ஜீவந்தரன், पुरन्ध्रीषु - ஸ்திரியரிடங்களிலே, अतिसन्धानात् - அதி சந்தானத்தி னின்றும், अभैषीत्- பயந்தான், महतां - மஹா புருஷர்களுக்கு, वचनीयात् - பழிச்சொல்லினின்றும், महत् - மகத்தான, भीरुत्वं- பீருத்வமானது. 53

*பொருள் : - அச்சமற்ற ஜீவந்தரன், "மகளிர் மீது மிகுந்த ஈடுபாடு கொள்வதால் இவ்வாறு ஏற்படுகிறது. சான்றோர்கள் இத்தகைய இழிசொல்லைக் கேட்டு அஞ்சுவர்" என்று கூறினான்.*

नभश्चरं पुनश्चैनं सविपश्चिद बोधयत् ।
अपश्चिमफलं वक्तुं निश्चितं हि हितार्थिनः ॥ 54

पुनश्च - பிற்பாடும், नभश्चरं - வித்யாதரனான, एनं - இவனை, सविपश्चित् - அறிவுடையவன் (ஜீவந்தரன்), अबोधयत् - போதித்தான், हितार्थिनः - ஹிதத்தை வாஞ்சிக்கிறவனுக்கு, अपश्चिमफलं - தடையில்லாத பலத்தை, वक्तुं - சொல்லிகிறதுக்கு, निश्चितं हि - நிச்சிதமன்றோ. 54

*பொருள் : - அந்த வித்தியாதரனுக்கு, நல்லறிவு கொண்ட ஜீவந்தரன் அறிவுரை கூறத் துவங்கினான். சிறந்த, பயனுடைய, அறிவுரையை, நன்மையை விரும்புபவனுக்குக் கூறுவது பொருத்தமானது அல்லவா ?*

भवदत्त मुधार्तोऽसि विद्यावित्तो भवन्नपि ।
न विद्यते हि विद्यायामगम्यं रम्यवस्तुषु ॥ 55

भवदत्त - வாராய் பவதத்தனே, विद्यावित्तो भवन्नपि - வித்யையாகிற, த்ரவ்யத்தை உடையவனாய் இருந்தும்,

मुधा- வ்யர்த்தத்தினாலே, आर्तोसि - துக்கியாநின்றாய், विद्यायां - வித்யையயானது யுண்டாயுள்ளளவில், रम्यवस्तुषु - ரம்யமான வஸ்த்துக்களிலே, अगम्यं - அடையாதது, विद्यते - உண்டாகாநின்றது, नहि - இல்லையன்றோ. 55

பொருள்: - பவதத்தனே, கல்வியறிவைக் கொண்டிருந்தும், நீ வீணாக வருந்துகிறாய். கல்வியால் அடையமுடியாதது ஏதொன்றுமில்லை.

नभश्चर न कश्चित्स्याद्विपश्चिदविपश्चितोः ।
विनिश्चलशुचोर्भेदा यतश्चन कुतश्चन ॥ 56

नभश्चर - வாராய் வித்யாதரனே, विनिश्चलशुचोः - *சஞ்சலபுத்தியுடையவனுக்கும் தூய்மையானவனுக்கும், विपश्चिदविपश्चितोः - அறிவாளிக்கும் அறிவிலிக்கும், भेदः - பேதமானது, यतश्चन - யாதொரு காரணத்தினின்றும், कुतश्चन - எங்குநின்றும், कश्चित् - ஒன்றும், न स्यात् - ஆகக்கடவது அல்ல. 56

பொருள் : - வித்தியாதரனே ! சஞ்சலபுத்தியுடைய அறிவிலிக்கும் திடமான மனம் கொண்ட அறிவாளிக்கும் இடையே பாகுபாடு என்பது எங்கும் கிடையாது.

परं सहसधीभाजि स्त्रीवर्गे का पतिव्रता ।
पातिव्रत्यं हि नारीणां गत्यभावे तु कुत्रचित् ॥ 57

---

* em.

परं सहस्रधीभाजी - மிகவும் நாநாப்ரகாரபுத்திக்கு இருப்பிடமான, स्त्रीवर्गे - ஸ்த்ரி சமூகத்திலே, पतिव्रता - பதிவிரதாஸ்ரூபமானது, तु - விசேஷமுண்டு, नारीणां - ஸ்திரியர்களுக்கு, कुत्रचित् - ஓரிடத்திலே, पातिव्रत्यं हि - பதிவிரதா ஸ்வரூபமன்றோ. 57

*பொருள் : - சரியான வழிகாட்டுதல் இல்லாமையால் ஆயிரம் மடங்கு அறிவுகொண்ட பெண்கள் சிலர் வழி தவறுகிறார்கள்.*

मदमात्सर्यमायेर्ष्यारागरोषादिभूषिताः ।
असत्याशुद्धिकौटिल्यशाठ्यमौढ्यधनाः स्त्रियः ॥ 58

मदमात्सर्यमायेर्ष्यारागरोषादिभूषिताः - கர்வம், மாத்சர்யம், மாயை, ஈர்ஷ்யா, ராகம், கோபம் இது முதலானதுகளினாலே, பூஷிதர்களான, असत्याशुद्धिकौटिल्य-शाठ्यमौढ्यधनाः स्त्रियः - அசத்யம், அசுத்தி, குடிலத்வம், கபடம், மூடமிதுகளை தனங்களாய் உடையவர்கள், स्त्रियः - ஸ்திரியர்கள். 58

*பொருள் : - தற்பெருமை, பொறாமை, கபடம், அன்பு, சினம், பொய், தூய்மையின்மை, கோணல் புத்தி, பிடிவாதம் பேதமை போன்ற தன்மைகளைக் கொண்டவர் பெண்டிர்.*

निर्घृणे निर्द्रवे क्रूरे निर्व्यवस्थे निरङ्कुशे ।
पापे पापनिमिते च कलत्रे ते कुतः स्पृहा ॥ 59

निर्घृणे - தயை இல்லாத, निर्द्रवे - த்ரவமில்லாத, क्रूरे - கோபமான, निर्व्यवस्थे - வ்யவஸ்த்தை இல்லாத, निरङ्कुशे - தடையில்லாத, पापे - பாபபயமான, पापनिमित्ते च - பாபத்துக்குக் காரணமுமான, कलत्रे - ஸ்த்ரியினிடத்திலே, ते- உனக்கு, स्पृहा - வாஞ்சையானது, कुतः - எங்குநின்றும். 59

*பொருள் : - கருணையற்ற, அனுதாபமற்ற, சினமுடைய, நிலையற்ற, தடையில்லாத, தீமையும் தீமைக்குக் காரணமுமான பெண்ணிடம் உனக்கு எவ்வாறு ஈடுபாடு ஏற்பட்டது.*

इत्युपादिष्टमेतस्य हृदये नासजत्तराम् ।
जठरे सारमेयस्य सर्पिषो न हि सञ्जनम् ॥ 60

इति - என்று, उपादिष्टं - உபதேசம் பண்ணினது, एतस्य - வித்யாதரனுடைய, हृदये - மனஸிலே, असजत्तराम् - மிகவும் பாற்றின்று, न - இல்லை, सारमेयस्य - நாயினுடைய, जठरे - வயிற்றிலே, सर्पिषः - நெய்யானது, सञ्जनं - ஒட்டுகிறது, नहि - இல்லையன்றோ. 60

*பொருள் : - இவ்வாறு அறிவுரை கூறியது, அந்த வித்யாதரனின் மனதில் பதியவில்லை. (அதாவது ஜீவந்தரன் கூறியவைகளை அவன் கடைப்பிடிக்கவில்லை) நாயின் வயிற்றில் நெய் தங்குமா ?*

स्वामी तु तस्य मौढ्येन सुतरामन्वकम्पत ।
उत्पथस्थे प्रबुद्धानामनुकम्पा हि युज्यते ॥ 61

तु - பின்னை, स्वामी - ஜீவந்தரஸ்வாமியானவன், तस्य- வித்யாதரனுடைய, मौढ्येन - மூடத்வத்தினாலே, सुतरां - மிகவும், अन्वकम्पत - அனுகம்பையைப் பண்ணினான், उत्पथस्थे- மித்யா மார்கத்திலே விழுந்தவனிடத்திலே, प्रबुद्धानां- ஞானவான்களுக்கு, अनुकम्पा - அனுகம்பையானது, युज्यते हि - யோஜிக்கப்படாநின்றதன்றோ. 61

*பொருள் : - அந்த வித்தியாதரனின் முட்டாள்தனத்தைப் பார்த்து ஜீவந்தரன் அவனுக்காக மிக வருந்தினான். தவறான வழி செல்பவர்களைக் கண்டு, அறிவாளிகள் இரக்கப்படுவார்கள் அல்லவா ?*

ततस्तस्माद्विनिर्गत्य कमप्यारामाश्रयत् ।
अदृष्टपूर्वदृष्टौ हि प्रायेणोत्कण्ठते मनः ॥ 62

ततः - பிற்பாடு, तस्मात् - அங்குநின்றும், विनिर्गत्य - புறப்பட்டு, कमप्यारामम् - ஒரு உத்யான வனத்தை, आश्रयत् - அடைந்தான், अदृष्टपूर्वदृष्टौ - ஒருக்காலும் காணாததைக் கண்டதிலே, प्रायेण - பொதுவாக, मनः - மனசானது, उत्कण्ठते हि - பரபரக்கையாகா நின்றதன்றோ. 62

*பொருள் : - பிறகு ஜீவந்தரன் அங்கிருந்து புறப்பட்டு, ஒரு தோட்டத்திற்குச் சென்றான். புதிய பொருட்களைக் கண்டால் மனம் மகிழ்வுறும் அல்லவா ?*

तत्राम्रफलमाक्रष्टुं धनुषा कोऽपि नाशकम् ।
अशक्तैः कर्तुमारब्धं सुकरं किं न दुष्करम् ॥ 63

तत्र - அந்த வனத்திலே, आम्रफलं - மாங்காயை, आक्रष्टुं- ஸ்வீகரிக்கிறதற்கு, धनुषा - வில்லினாலே, कोऽपि - ஒருத்தனும், नाशकत् - சமர்த்தமாநாநில்லை, (तथा) अशक्तैः - அசக்தர் களினாலே, कर्तुं - பண்ணுகிறதுக்கு, आरब्धं - துடங்கினது, सुकरं - எளிசானது, किं न दुष्करम् - கடுமையானது இல்லையா ? 63

***பொருள் :*** *- அங்கு ஒருவன் தனது வில்லின் திறமையால், ஒரு மாம்பழத்தைப் பறிக்க முயற்சி செய்தும், அவனால் இயலவில்லை. திறமையற்றவர்கள் செய்யும் எளிமையான செயலும் மிகுந்த துயரத்தைத் தருவதன்றோ? (அதாவது திறமையற்றவர்கள், எளிமையான செயலைக் கூடச் செய்ய இயலாதவர்கள்).*

स्वामी तु तत्फलं विद्धमादत्त सशिलीमुखम् ।
ततन्मात्र कृतोत्साहैः साध्यते हि समीहितम् ॥ 64

तु - பின்னை, स्वामी - ஜீவந்தரசுவாமியானவன், विद्धं- எய்தப்பட்ட, सशिलीमुखं - அம்போடு கூடியிருக்கிற, तत्फलं- அந்த மாங்காயை, आदत्त - ஸ்வீகரித்தான், तथा-तत्तन्मात्र कृतोत्साहैः - அம்மாத்ரம் பண்ணப்பட்ட உத்சாஹங் களினாலே, समीहितम् - வாஞ்சிதமானது, साध्यते हि - சாதிக்கப்படா நின்றதன்றோ. 64

***பொருள் :*** *- பிறகு ஜீவந்தரன் எய்த அம்போடு கூடிய அந்த மாங்கனி அவனது (ஜீவந்தரனது) கையில் விழுந்தது தகுந்த நேரத்தில், தகுந்தவாறு செய்யப்பட்ட செயல்கள் விரும்பியதை அளிக்கின்றன. (அம்பை எவ்வாறு எய்ய வேண்டுமோ, அவ்வாறு எய்தால், அது உறுதியான பயனை அளிக்கிறது)*

अपराद्धपृषत्कोऽपि दृष्ट्वा व्यस्मेष्ट तत्कृतिम् ।
अपदानमशक्तानामद्भुताय हि जायते ॥ 65

अपराद्धपृषत्कोऽपि - நழுவப்பட்ட அம்பை உடையவனொருத்தன், तत् कृतिं - ஜீவந்தரனாலே பண்ணினதை, दृष्ट्वा - கண்டு, व्यस्मेष्ट- ஆச்சர்யப்பட்டான், अशक्तानां - அசக்தர்களுக்கு, अपदानं - முடிந்த காரியமும், अद्भुताय - ஆச்சர்யத்தின் பொருட்டு, जायते हि - உண்டாகாநின்றதன்றோ. 65

*பொருள் : - அம்புகளை நழுவவிட்டு, மாங்கனியைக் கொய்யமுடியாத அவன், ஜீவந்தரனின் செயல் கண்டு வியந்தான். திறமையற்றவர்கள், அவர்களுக்காக எந்தச் செயல் முடிக்கப்பட்டாலும் அதனால் வியப்பை மட்டுமே அடைவர்.*

स्वामिनोऽयं स्ववृतान्तं सकातर्यं समभ्यधात् ।
सन्निधाने समर्थानां वराको हि परो जनः ॥ 66

स्वामिनः - ஜீவந்தரஸ்வாமிக்கு, अयं - இவன், स्ववृत्तान्तं- தன்னுடைய விருத்தாந்தத்தை, सकातर्यं - அபிப்ராயத் தோடேகூட, समभ्यधात् - சொன்னான், समर्थानां - சமர்த்தர்களுடைய, सन्निधाने - சமீபத்திலே, वराकः - ஏழையானவன், परो जनः हि - உத்கிருஷ்ட்டமன்றோ. 66

*பொருள் : - ஜீவந்தரனிடம் அவன் தனது கதையை மிகுந்த அச்சத்துடன் கூறினான். திறமையுள்ளவர்கள் முன்னிலையில் திறமையற்றவன் நிற்கமுடியாதன்றோ ? (அவன் வேறானவன் என்பது செய்யுட் கருத்து).*

कर्तव्यं वा न वा प्रोक्तं मया कार्मुककोविद ।
कर्णकद्वपि मद्वाक्यमाकर्णयितुमर्हसि ॥ 67

मया - என்னாலே, प्रोक्तं - சொல்லப்பட்டது, कर्तव्यं वा- பண்ணப்படுமதுதான், न वा - அல்லதான, कार्मुककोविद- வாராய், வில்லுக்கு வல்லவனே, मद्वाक्यं - என்னுடைய வசனம், कर्णकद्वपि - கேட்கிறதற்கு கடுவாயிருந்தாலும், आकर्णयितुं - கேழ்க்கிறதற்கு, अर्हसि - யோக்யனாகாநின்றாய்.

*பொருள் :* - வில்லிற் சிறந்தவனே, நான் கூறுவது செய்யத்தக்கதா, அல்லதா என்று கூறு. அது கேட்பதற்கு மிகவும் கசப்பாக இருப்பினும் நீ கேட்கத்தான் வேண்டும்.

एतन्मध्यमदेशस्था हेमाभो स्यादियं पुरी ।
क्षत्रियो द्दढमित्र स्यात्तत्प्रिया नलिनाह्वया ॥ 68

मध्यमदेशस्था - மத்யம தேசமென்கிறத்திலேயிருக்கிற , एतत् - இது, हेमाभा - ஹேமாபா என்கிற பேரையுடைய, इयंपुरी - இந்தப் பட்டணமானது, स्यात् - ஆகக்கடவது, अस्यां - ஹேமாபமென்கிற பட்டணத்திலே द्दढमित्रः - த்ருடமித்ரன் என்று பேரையுடைய, क्षत्रियः - ராஜாவானவன், तत्प्रिया - அந்த ராஜாவினுடைய தேவியானவள், नलिनाह्वया - நளினையென்று பேரையுடையவளாம். 68

*பொருள் :* - இந்த நடு நாட்டில் ஹேமாபம் என்ற நகரம் இருக்கின்றது. இங்கு திருடமித்திரன் என்ற அரசன் வசிக்கிறான். அவனது மனைவி பெயர் நளினா.

सुमित्राद्यास्तयोः पुत्रास्तेष्वप्यन्यतमोऽस्म्यहम् ।
वयसैव वयं पक्वा विश्वेऽपि न तु विद्यया ॥ 69

तयोः - அந்த இரண்டு பேர்களுக்கும், सुमित्राद्याः - சுமித்ரன் முதலானவர்கள், पुत्राः - புத்ரர்கள், तेष्वपि - அவர்களுக்குள்ளேயும் நான், अन्यतमः- மற்றொருத்தன், अस्मि - ஆனேன், वयं - நாங்கள், विश्वेपि - சமஸ்தர்களும், वयसैव - வயசினாலேயே, पक्वाः - பரிபக்வமானவர்கள், तु - பின்னை, विद्या - வித்யையினாலே, न - அல்ல. 69

*பொருள் : -சுமித்திரன் முதலான அவர்களது புதல்வர்களில் நானும் ஒருவன். வயதால் மட்டுமே நாங்கள், மற்றவர்களைக் காட்டிலும் மூத்தவர்கள் கல்வியினால் அல்ல.*

तातपादोऽयमस्माकं चापविद्याविशारदम् ।
विचिनोति न चेद्दोष एषोप्यालोक्यतामिति ॥ 70

अयं - இந்த, तातपादः - பூஜ்யநான தகப்பனானவன், अस्माकं - எங்களுக்கு, चापविद्याविशारदम् - வில்லிடைவித்தையிலே வல்லவனை, विचिनोति - தேடாநின்றான், एषोऽपि - இதுவும், दोषः - தோஷமானது, न चेत् - இல்லையாகில், इति - என்று, आलोक्यताम् - பார்க்கப்படுமது. 70

*பொருள் : - மரியாதைக்குரிய எங்கள் தந்தையும் எங்களுள் வில்வித்தையிற் சிறந்தவன் யாரென்று தேர்ந்தெடுக்கவில்லை. இது ஒரு தவறு அல்லவா ?*

तद्व्यवहारे विसंवादो विदुषोऽप्यस्य नाजनि ।
विधिर्घटयतीष्टार्थैः स्वयमेव हि देहिनः ॥ 71

तद्व्यवहारे - அவனுடைய வசனத்திலே, विदुषः - வித்வாம்சனான, अस्यापि - ஜீவந்தரனுக்கு, विसंवादः - மாறுபாடானது ஆச்சுதில்லை, देहिनः - ஜீவன்களுக்கு, विधिः- கர்மமானது, इष्टार्थैः - இஷ்டார்த்தங்களினாலே, स्वयमेव - தானே, घटयति हि - கடிப்பியாநின்றதன்றோ. 71

*பொருள் : - அவன் கருத்துக்கு, அறிஞனான ஜீவந்தரன் மாறுபட்ட கருத்தைக் கொள்ளவில்லை. ஊழ்வினை, தன் விருப்பப்படி மற்றவர்களைச் சேர்த்து வைக்கிறது.*

पार्थिवं च ततः पश्यंस्तद्वश्योऽभूच्च संमतेः ।
अनुसारप्रियो न स्यात्को वा लोके सचेतनः ॥ 72

पार्थिवं च - ராஜாவையும், ततः - பிற்பாடு, पश्यन् - பாராய்நின்றவனாய்க்கொண்டு, संमतेः - சம்மதியினின்றும், तद्वश्यः - அந்த ராஜாவுக்கு வசமானவன், आभूच्च - ஆனான், लोके - லோகத்திலே, सचेतनः - ஞானத்தோடே கூடினவன், को वा - எவன்தான், अनुसारप्रियः - அனுசாரபிரியனானவன், न स्यात् - ஆகக்கடவன் அல்ல. 72

*பொருள் : - பிறகு ஜீவந்தரன் அரசனைச் சந்தித்தான். இருவரும் ஒரே மனப்பாங்கை உடையவர்களாக இருந்ததால், அரசனையும் தன் வயப்படுத்தினான்.*

महीक्षिता क्षणात्तस्य माहात्म्यमपि वीक्षितम् ।
वपुर्वक्ति हि सुव्यक्तमनुभावमनक्षरम् ॥ 73

महीक्षिता - ராஜாவினாலே, क्षणात् - க்ஷணத்தினின்றும், तस्य - ஜீவந்தரனுடைய, माहात्म्यमपि - மாஹாத்மியமும், वीक्षीतं - பார்க்கப்பட்டது, वपुः - சரீரமானது, अनुभावं - மாஹாத்மியத்தை, सुव्यक्तं - வியக்தமாக, अनक्षरं - அக்ஷரமில்லாமல், वक्ति हि - சொல்லாநின்றதன்றோ. 73

*பொருள் : - அரசன் அவனது சிறப்பையும் கண்டான். ஒருவன் உடலமைப்பே அவனது சிறப்பை, எந்தவிதமான அறிமுகங்களுமின்றி மற்றவருக்கு உணர்த்தும்.*

सुतविद्यार्थमत्यर्थं पार्थिवस्तमयाचत ।
आराधनैकसंपाद्या विद्या न ह्यन्यसाधनात् ॥ 74

सुतविद्यार्थं - புத்ரனுடைய வித்யை நிமித்தமாக, अत्यर्थं - மிகவும், पार्थिवः - ராஜாவானவன், तं - ஜீவந்தரனை, अयाचत - யாசித்தான், विद्या - வித்யையானது, आराधनैकसंपाद्या - விநயமுகத்திலுண்டாகிறது, अन्यसाधनात् - மற்றொரு சாதனத்தினின்றும், नहि - இல்லையன்றோ. 74

***பொருள் : - தனது மக்களின் கல்வியறிவிற்காக, அரசன் ஜீவந்தரனிடம் வேண்டினான். போற்றுவதால் மட்டுமே கல்வியை மற்றவரிடமிருந்து பெற முடியும். மற்ற சாதனங்களால் அதனைப் பெற இயலாது.***

अभ्यर्थनबलात्तस्य कुमारोऽप्यभ्युपागमत् ।
स्वयं देया सती विद्या प्रार्थनायां तु किं पुनः ॥ 75

तस्य - ராஜாவினுடைய, अभ्यर्थनबलात् - பிரார்த்தனையினுடைய பலத்தினின்றும், कुमारोपि -

ஜீவந்தரகுமாரனும், अभ्युपागमत् - அங்கீகரித்தான், सती - ப்ரஸஸ்த்தமான, विद्या - வித்யையானது, स्वयं - தானே, देया - கொடுக்கப்பட்டது, तु - பின்னை, प्रार्थनायां - பிரார்த்தனையிலே, किं पुनः - சொல்ல வேணுமோ. 75

*பொருள் : - அரசன் வேண்டிக்கேட்டுக் கொண்டதால், அதனை ஜீவந்தரன் அங்கீகரித்தான். கல்வி என்பது தானாகவே வழங்கப்படும்போது, பிறர் வேண்டி விரும்பிக் கேட்டுக் கொண்டால், கிடைக்காமலா போய்விடும் ? (தகுந்த மாணவர்களுக்கு ஆசிரியர் மனமுவந்து தானே பயிற்றுவிப்பார். அப்படியிருக்கும்போது, தன்னடக்கத்தினால் அந்தக் கல்வியை இறைஞ்சும்போது, யார்தான் அதனைத் தராமல் இருப்பர் ?)*

पवित्रोऽपि सुतान्विद्यां स प्रापयदवञ्चितम् ।
कृतार्थानां हि पारार्थ्यमैहिकार्थपराङ्मुखम् ॥ 76

पवित्रोऽपि - ஜீவந்தரனும், सुतां - புத்ரர்களை, स - அவன், विद्या - வித்தையை, अवञ्चितं - வஞ்சகமில்லாமல், प्रापयत् - அடைவித்தான், (तथाहि) कृतार्थानां - புண்ய ஜீவன்களுக்கு, परार्थ्यं - பிறருக்கு பண்ணிவிக்கிற ப்ரயோஜனமானது, ऐहिकार्थपराङ्मुखं हि - இகலோக ப்ரயோஜனவிமுகமன்றோ. 76

*பொருள் : - தூய ஜீவந்தரன் (அரசனின் வேண்டுகோளுக்கு இணங்க) அவர்களுக்கு எல்லாவிதமான கல்விகளையும் வஞ்சனை செய்யாமல் கற்றுக்கொடுத்தான். பிறருக்கு செய்யும் உதவிகள், நல்வினைகளாகி, அவற்றின் பயனை இம்மையில் மட்டும் அளிப்பதில்லை. (மறுமையில் நிச்சயமாகப் பயனை அளிக்கின்றன.)*

प्रश्रयेण बभूवस्ते प्रत्यक्षाचार्यरूपकाः ।
विनयः खलु विद्यानां दोग्ध्री सुरभिरञ्जसा ॥ 77

प्रश्रयेण - வணக்கத்தினாலே, ते - அவர்கள், प्रत्यक्षाचार्यरूपकाः - ப்ரத்யக்ஷமாக, ஆச்சார்யருக்கு சமானமானவர்கள், बभूवुः - ஆனார்கள், विनयः - விநயமானது, विद्यानां - வித்தைகளுக்கு, अञ्जसा - நிச்சயத்தினாலே, दोग्ध्री - கறக்கப்பட்ட, सुरभिःखलु - சுரபியன்றோ. 77

*பொருள் : - தங்கள் தன்னடக்கத்தால் அவர்கள் (ஜீவந்தரனால் கற்பிக்கப்பட்ட அம்மாணவர்கள்) தாங்களே ஆசிரியர்கள் ஆகுமளவு தகுதி பெற்றனர். உண்மையில், அடக்கம் ஒன்றே எல்லாவிதமான கல்விகளையும் கற்கவைக்கும், விரும்பியதைக் கொடுக்கும் விண்ணுலக ஆவினம் போன்றது.*

वीक्ष्य तानत्रपद्भूपो विद्यानां पारदृश्वनः ।
पुत्र मात्रं मुदे पित्रोर्विद्यापात्रं तु किं पुनः ॥ 78

भूपः - ராஜாவானவன், विद्यानां - வித்தைகளுடைய, पारदृश्यतः - கரைகண்டிருப்பார்களான, तान् - புத்ரர்களை, वीक्ष्य - பார்த்து, अत्रपत् - சந்தோஷித்தான், पित्रोः हि - தாய்தகப்பனானவர்களுக்கு, पुत्रमात्रं - புத்ரமாத்ரமானது, मुदे- சந்தோஷத்தின் பொருட்டு, तु - பின்னை, विद्यापात्रं - வித்யைக்குப்பாத்ரமான புத்ரன், किं पुनः - சொல்ல வேணுமோ. 78

*பொருள் : - தனது மக்கள் கல்வி கேள்விகளில் கரைகண்டதைக் கண்டு அரசன் மிக மகிழ்ந்தான். மகன் என்பவனே பெற்றோர்க்கு மகிழ்ச்சியளிப்பவன். அதிலும் கல்வியின் இருப்பிடமாக விளங்கும் மகனை எந்தப் பெற்றோர்தான் விரும்ப மாட்டார்.*

अतिमात्रं पवित्रं च धात्रिपः समभावयत् ।
असंभावयितुर्दोषो विदुषां चेदसंमतिः ॥ 79

धात्रिपः - ராஜாவானவன், पवित्रं च - பவித்ரனான ஜீவந்தரனையும், अतिमात्रं - மிகவும், समभावयत् - சத்காரம் பண்ணினான், विदुषां - வித்வாம்சர்களுக்கு, असंमतिः - சம்மதியல்ல, तत् चेत्- ஆகில், असंभावयितुः - சத்காரம் பண்ணாதவனுக்கு, दोषः हि - தோஷமன்றோ. 79

*பொருள் : - அரசன் தூய்மையான ஜீவந்தரனுக்கு முறைப்படி மரியாதைகள் செய்தான். மரியாதை செய்யாமல் இருப்பது சான்றோர்களுக்கு ஏற்புடையதல்ல.*

महोपकारिणः किं वा कुर्यामित्यत्यतर्कयत् ।
विद्याप्रदायिनां लोके का वा स्यात्प्रत्युपक्रिया ॥ 80

महोपकारिणः - மஹோபகாரியான, ஜீவந்தரனுக்கு, किं वा - என்னத்தைத்தான், कुर्याम् - பண்ணக்கடவோம், इत्यपि- என்றும், अतर्कयत् - சிந்தித்தான், लोके - லோகத்திலே, विद्याप्रदायिनां - வித்தையை கொடுக்கிறவர்களுக்கு, प्रत्युपक्रिया- ப்ரத்யுபகாரமானது, का वा - எதுதான், स्यात् - ஆகக்கடவது. 80

பொருள் : - மிகச்சிறந்த உதவி செய்த இவருக்கு தான் எந்த விதத்தில் நன்றியறிதலைத் தெரிவிக்கலாம் என்று அரசன் சிந்தித்தான். கல்விக்கு ஈடாக இவ்வுலகில் எதைத்தான் கொள்ள இயலும் ?

कन्याविश्राणनं तस्मै करणीयमजीगणत् ।
शक्यमेव हि दातव्यं सादरैरपि दातृभिः ॥ 81

तस्मै - ஜீவந்தரன் பொருட்டு, कन्याविश्राणनं - கன்யகையை கொடுக்கிறதான, करणीयम् - பண்ணப்படுகிறத்தை, अजीगणत् - எண்ணினான், सादरैरपि - தாத்பர்யங்களோட கூடின, दातृभिः - கொடுக்கிற பேர்களாலே, दातव्यं - கொடுக்கப்படுகிறது, शक्यमेव हि - சக்யமேயன்றோ. 81

பொருள் : - தனது மகளையே அவன் செய் த உதவிக்கு ஈடாக வழங்குவது என்று முடிவெடுத்தான். மரியாதையோடு கொடுக்கப்படும் எந்த ஒரு பொருளும் கொடுப்பதற்கு ஏற்றதே !

अभ्युपाजीगमत्पुत्रीं परिणेतुममुं पुनः ।
उदाराः खलु मन्यन्ते तृणायेदं जगत्त्रयम् ॥ 82

पुत्रीं - புத்ரியை, परिणेतुं - விவாஹம் பண்ணுகிறதற்கு, अमुं - இவனை, पुनः - பிற்பாடு, अभ्युपाजीगमत् - அங்கீகரிக்கப் பண்ணினான், उदाराः - உதார புருஷர்கள், इदं जगत्त्रयम् - இந்த மூன்று லோகத்தை, तृणाय - த்ருணத்தின் பொருட்டு, मन्यन्ते खलु - எண்ணி நின்றார்களன்றோ. 82

*பொருள் : - அப்பெண்ணைத் திருமணம் முடிக்க ஜீவந்தரனைச் சம்மதிக்க வைத்தான். கொடையாளிகள் இம்மூன்று உலகங்களையும் புல்லாக மதிக்கிறார்கள் அன்றோ!*

ततः कनकमालाख्यां कन्यां राज्ञा समर्पिताम् ।
पर्यणैषीत्पवित्रोऽयं पवित्रामग्नि साक्षिकम् ॥ 83

ततः - பிற்பாடு, कनकमालाख्यां - கனகமாலையென்று பேரையுடைய, राज्ञा - ராஜாவினாலே, समर्पितां - கொடுக்கப்பட்டிருக்கிற, पवित्रा- பவித்ரையான, कन्यां - கன்னிகையை, पवित्रः- பவித்ரனான, अयं - ஜீவந்தரனானவன், अग्निसाक्षिकम् - ஹோம சாக்ஷியாக, पर्यणैषीत् - விவாஹம் பண்ணினான். 83

इति श्रीमद्वादीभसिंहसूरिविरचिते क्षत्रचूडामणौ
कनकमालालम्भो नाम सप्तमो लम्भः ॥

*பொருள் : - பிறகு, அரசனால் சமர்ப்பிக்கப்பட்ட கனகமாலா என்ற பெண்ணை அத்தூய ஜீவந்தரன், தூய நெருப்பின் முன்னிலையில் மணமுடித்தான்.*

*கனகமாலா லம்பம் முற்றிற்று*



# अष्टमोलम्भः

## विमलालम्भः

## விமலாலம்பம்

अथ तत्करपीडान्तेऽसक्तस्वान्तोऽभवत्सुधीः ।
तीरस्थाः खलु जीवन्ति न हि रागाब्धिगाहिनः ॥ 1

ततः - பிற்பாடு, सुधीः - புத்திமானான ஜீவந்தரனானவன், तत्करपीडान्ते - கனகமாலையை கல்யாணம் பண்ணின கடைசியிலே, असक्तस्वान्तः - ஆசக்தியில்லாத மனசை உடையவன், अभवत् - ஆனான், खलु - ஸ்புடமாக, तीरस्थाः - கரையிலே இருக்கிறவர்கள், जीवन्ति - ஜீவியாநின்றார்கள், रागाब्धिगाहिनः - ராக சமுத்திரத்திலே மூழ்கினவர்கள், नहि - இல்லையன்றோ. 1

*பொருள் : - அறிவார்ந்த ஜீவந்தரன் அந்தக் கனகமாலையை மணம் முடித்த பின்னர், அவளிடம் பற்றற்றவனாக ஆனான். ஆசையென்னும் கடலில் மூழ்கியவர்கள் உண்மையிலேயே இறந்தவர்கள். ஆனால் அதன் மறுகரையை அடைந்தவர்களே உண்மையில் வாழ்பவர்கள்.*

स्यालानां तत्र वात्सल्यादवात्सीत्सुचिरं सुधीः ।
वत्सलेषु च मोहः स्याद्वात्सल्यं हि मनोहरम् ॥ 2

तत्र - அவ்விடத்திலே, सुधीः - புத்திமானான ஜீவந்தரன், स्यालानां - மைத்துனர்மார்களிடையே,

वात्सल्यात् - வாத்ஸல்யத்தினின்றும், सुचिरं - நெடுங்காலம், अवात्सीत् - இருந்தாலும், वत्सलेषु च - வாத்ஸல்யமான வர்களிடங்களிலேயும், मोहः - வாஞ்சையானது, वात्सल्यं - வாத்ஸல்யமான, मनोहरं - மனோஹரமான வாத்ஸல்ய மானது, स्यात् - ஆகக்கடவதன்றோ. 2

பொருள் : - தனது மைத்துனர்களிடமிருந்த அன்பின் காரணமாக, ஜீவந்தரன் அங்கேயே நீண்டகாலம் வசித்தான். அன்புடையவர்களிடம் ஏற்படும் ஈடுபாடு, மனதைக் கவருவதாக இருக்கும்.

यापितोऽपि महाकालस्तस्य नोद्वेगमातनोत् ।
वत्सलैः सह संवासे वत्सरो हि क्षणायते ॥ 3

तस्य - ஜீவந்தரனுக்கு, यापितोपि- அடைந்திருக்கிற, महान् - மஹத்தான, कालः - காலமும், उद्वेगम् - துக்கத்தை, आतनोत् - விஸ்த்தரித்தான், न - இல்லை, वत्सलैः - வாத்ஸல்யமானவர்களோட, सह - கூட, संवासे - வசித்துள்ளளவில், वत्सरः - வர்ஷமும், क्षणायते हि - க்ஷணமாக ஆச்சரியா நின்றதன்றோ. 3

பொருள் : - வெகு காலத்தை அங்கு கழித்தாலும், அவனுக்கு அதில் வருத்தம் ஏற்படவில்லை. அன்பு நிறைந்தவர்களுடன் வசித்தால் ஆண்டொன்று போனாலும் ஒரு கண நேரம் கழிந்தது போலத்தான் இருக்கும்.

कदाचित्कापि तत्प्रान्तं समन्दस्मित मासदत् ।
नैसर्गिकं हि नारीणां चेतः संमोहि चेष्टितम् ॥ 4

कदाचित् - ஒருகால், कापि - ஒருத்தி, तत्प्रान्तम् - ஜீவந்தரனுடைய சமீபத்தை, समन्दस्मितं - புன்சிரிப்போடே, आसदत् - அடைந்தாள், नारीणाम् - ஸ்திரியர்களுடைய, चेतसः - மனஸானது, संमोहिचेष्टितम् - மயக்கத்தைப் பண்ணுகிற நடக்கையானது, नैसर्गिकं हि - ஸ்வபாவ மன்றோ. 4

*பொருள் : - ஒரு சமயம் அவ்விடத்திற்கு புன்சிரிப்புடன் ஒரு பெண் வந்தாள். மனதை மயக்கும் பண்புகள் பெண்களுடன் உடன் பிறந்தவை.*

अप्राक्षीत्तां च साकूतां किमायातेति सादरः ।
विवक्षालिङ्गिते स स्याद्द्रष्टुः प्रश्नकुतूहलम् ॥ 5

साकूताम् - அபிப்ராயத்துடன் கூடின, तां च - அவளையும், सादरः - தாத்பர்யத்துடன் கூடின, सः - ஜீவந்தரன், आयाता - வந்தது, किं - என்ன, इति - என்று, अप्राक्षीत् - கேட்டான், द्रष्टुः - பார்க்கவந்தவனுக்கு, विवक्षालिङ्गिते - சொல்லுகிற அடையாளத்திலே விவக்ஷைப் பண்ணியுள்ளளவில், प्रश्नकुतूहलम् - கேட்கிறதற்கு சந்தோஷமானது, स्यात् द्रष्टुः - பார்ப்பவனுக்கு ஆகக்கடவதன்றோ..

*பொருள் : - கருத்துடன் கூடிய அவளை, ஜீவந்தரன் மரியாதையுடன் எதற்காக வந்திருக்கிறீர்கள் எனக் கேட்டான். கேட்பதற்கான ஆவல் சொல்லும் செய்தியை ஒட்டியே அமையும்.*

अत्र चायुधशालायां चैकदैवाविशेषतः ।
स्वामिन्स्वामिनमद्राक्षमित्यसौ प्रत्यभाषत ॥ 6

अत्र च - இவ்விடத்திலேயும், आयुधशालायां - ஆயுத சாலையிலேயும், एकदैव - ஒரு காலத்திலேயே, आविशेषतः - விசேஷமில்லாதத்தினின்றும், स्वामिन् - வாராய் ஸ்வாமியே, स्वामिनां - ஸ்வாமியை, अद्राक्षम् - கண்டேன், इति - என்று, असौ - இவன், प्रत्य भाषत - திரும்பி உத்தரஞ் சொன்னான். 6

பொருள் : - இங்கு படைக்கலங்கள் வைக்கும் அறையில் தங்களைப் போலவே இருக்கக்கூடிய ஒருவரைக் கண்டேன் என்று அவள் கூறினாள். அதற்கு ஜீவந்தரன் பதில் உரைத்தான்.

अतिमात्रं पवित्रोऽयमचित्रीयत तच्छ्रुतेः ।
अयुक्तं खलु दृष्टं वा श्रुतं वा विस्मयावहम् ॥ 7

पवित्रः - பவித்ரனான, अयं - ஜீவந்தரன், तच्छ्रुतेः - அவனுடைய வசனத்தை கேட்டத்தினின்றும், अतिमात्रं - மிகவும், अचित्रीयत - ஆச்சரியப்பட்டான், तथाहि अयुक्तं - யுத்தமல்லாதது, खलु - ஸ்புடமாக, दृष्ट्वा - கண்டாலுந்தான், श्रुतं वा - கேட்டாலுந்தான், विस्मयावहम् - ஆச்சரியத்தை வஹிக்கிறதன்றோ. 7

பொருள் : - தூய்மையான ஜீவந்தரன் அச்சொல்லைக் கேட்டு மிக்க வியப்படைந்தான். பொருந்தாத ஒன்றை பொருந்துமாறு கண்ணால் கண்டாலோ அல்லது காதால் கேட்டாலோ மட்டும்தான் ஆச்சரியம் ஏற்படுமன்றோ.

नन्दाढ्यः किमिहायत इत्ययं पुनरौहत ।
संसारविषये सद्यः स्वतो हि मनसो गतिः ॥ 8

इह - இவ்விடத்திலே, नन्दाढ्यः - நந்தாட்யனானவன், आयातः किं - வந்தானோ, इति - என்று, अयं - ஜீவந்தரன், पुनः - பிற்பாடு, औहत - ஊகித்தான், संसारविषये - சம்சார விஷயத்திலே, स्वतः - தன்னின்றும், मनसः - மனதினுடைய, गतिः - கமனமானது, सद्यो हि - சீக்கிரமன்றோ.

*பொருள் : - நிச்சயமாக நந்தாட்யன் தான் இங்கு வந்திருக்கவேண்டும் என்று ஜீவந்தரன் ஊஹம் செய்தான். உலகியல் பொருட்களில் மனம் ஒன்று மட்டுமே உடனடியாக முடிவெடுக்கக் கூடியது. (நந்தாட்யன் என்பவன் கந்தோத்கடனின் மைந்தன். அவன் ஜீவந்தரனுக்கு உடன்பிறப்பு முறையாக வேண்டும். இப்படிப்பட்ட உறவு முறைகளில் பட்டறிவு மட்டுமே பயன்படும். கற்றறிந்த அறிவு பயன்படாது.*

प्रागेव तन्मनोवृत्तेः प्रययौ तत्र तद्वपुः ।
आस्थायां हि विना यत्नमस्ति वाक्कायचेष्टितम् ॥ 9

तन्मनोवृत्तेः - ஜீவந்தரனுடைய மனோவர்த்தனையினின்றும், प्रागेव - முந்தியே, तत्र - அவ்விடத்திலே, तद्वपुः - ஜீவந்தரனுடைய சரீரமானது, प्रययौ - அடைந்தது, (तथाहि) आस्थायां - வாஞ்சையுண்டாயுள்ளளவில், यत्नं - யத்னத்தை, विना - அன்றியிலே, वाक्कायचेष्टितम् - வாக்காய நடக்கையானது, अस्ति हि - உண்டாகாநின்றதன்றோ. 9

*பொருள் : - ஜீவந்தரன் இவ்வாறு தீர்மானம் செய்வதற்கு முன்னமேயே அவனுடைய உடல் ஆயுதக் கிடங்கை சென்றடைந்துவிட்டது. ஒரு பொருளின் மீது விருப்பம் உண்டாகிவிட்டால் முயற்சி இல்லாமலேயே சொல்லும், செயலும் தானாகவே நடைபெற்று விடுகின்றன.*

गत्वा तत्र च नन्दाढ्यं पश्यन्संमदसादभूत् ।
भ्रातुर्विलोकनं प्रीत्यै विप्रयुक्तस्य किं पुनः ॥ 10

तत्र च - அவ்விடத்திலேயும், गत्वा - போய், नन्दाढ्यं - நந்தாட்யனையும், पश्यन् - பாராநின்றவனாய்க்கொண்டு, संमदसात् - சந்தோஷத்தையுடையவன், अभूत् - ஆனான், भ्रातुः - ப்ராதாவினுடைய, विलोकनम् - காண்கையானது, प्रीत्यै- ப்ரீதியின் பொருட்டு, विप्रयुक्तस्य - பிரிந்து வந்த ப்ராதாவினுடைய காண்கையானது, किं पुनः - சொல்லவேணுமோ. 10

*பொருள் : - நந்தாட்யன் அங்கு இருப்பதைக் கண்டு ஜீவன்தரன் மிக்க மகிழ்ச்சி அடைந்தான். ஒருவன் தனது உடன் பிறந்தவனை காண்பது அன்பின் வெளிப்பாடாகும். அதிலும் பிரிந்தவர் ஒருவரை ஒருவர் கண்டால் ஏற்படக்கூடிய மகிழ்ச்சியை விவரிக்க இயலாது.*

अनुजोऽपि तमालोक्य मुमुचे दुःखसागरात् ।
विस्मृतं हि चिरं भुक्तं दुःखं स्यात्सुखलाभतः ॥ 11

अनुजोपि - நந்தாட்யனான தம்பியும், तं - ஜீவந்தரனை, आलोक्य - பார்த்து, दुःखसागरात् - துக்கமாகிற சமுத்திரத்தினின்றும், मुमुचे - விடான், चिरं - நெடுங்காலம், भुक्तं - அனுபவிக்கப்பட்டிருக்கிற, दुःखं - துக்கமானது, सुखलाभतः - சுகலாபத்தினின்றும், विस्मृतं - மறக்கப்பட்டது, स्यात् - ஆகக்கடவதன்றோ. 11

பொருள் : - ஜீவந்தரனின் தமயனும் (நந்தாட்யன்) அவனைக் கண்டு துயரமென்னும் பெருங்கடலினின்றும், விடுபட்டான். நீண்டகாலம் நுகரப்பட்டிருக்கும் துயரம் இன்பத்தை அடைந்தவுடன் மறக்கப் பட்டிருக்கிறது.

कथमाया इति ज्यायानन्वयुङ्क्त मिथोऽनुजम् ।
वञ्चनं चावमानं च न हि प्राज्ञैः प्रकाश्यते ॥ 12

अयं - எப்படி, आयाः - வந்தாய், इति - என்று, ज्यायान् - தமையானான ஜீவந்தரனானவன், मिथः - ரஹஸ்யமாக, अनुजम्- தம்பியான நந்தாட்யனை, अन्वयुङ्क्त - கேட்டான், वञ्चनम् च - கபடத்தையும், अवमानं च - அவமானத்தையும், प्राज्ञैः - ஞானவான்களினாலே, प्रकाश्यते - பிரகாசிக்கப் படாநின்றது, नहि - இல்லையன்றோ. 12

பொருள் : - பிறகு ஜீவந்தரன், இங்கு எவ்வாறு வந்தாய், என்று பிறறறியாவண்ணம், நந்தாட்யனைப் பார்த்துக் கேட்டான். பிறரால் வஞ்சிக்கப்பட்டதையும், அவமானப்படுத்தப்பட்டதையும், சான்றோர்கள் வெளிப்படுத்தமாட்டார்கள்.

सखेदं ध्यातदुःखोऽयमाचख्यौ वृत्तिमात्मनः ।
ध्यातेऽपि हि पुरा दुःखे भृशं दुःखायते जनः ॥ 13

ध्यातदुःखः - த்யானிக்கப்பட்ட துக்கத்தையுடைய, अयं - நந்தாட்யனானவன், सखेदं - துக்கத்தோடேகூட, आत्मनः - தன்னுடைய, वृत्तिं - வர்த்தனையை, आचख्यौ - சொன்னான்,

पुरा दुःखे - பூர்வதுக்கமானது, ध्यातेऽपि-த்யானத்துள்ளளவிலும், जनः - ஜனமானது, भृशं - மிகவும், दुःखायते हि - துக்கத்தை அனுபவியாநின்றதன்றோ. 13

பொருள் : - தனக்கு ஏற்பட்ட துயரத்தை சிறிது நினைவுபடுத்திக்கொண்டு, நந்தாட்யன் துயரத்துடன் தன்னுடைய நிலையை அவனிடம் கூறினான். துயருற்றபோது இருந்த துன்பத்தைக் காட்டிலும் அதை மறுபடி நினைவு கூறும்போது ஏற்படும் துயரம் அளவிட முடியாதது.

पूज्यपाद तदास्माकं पापाद्भवति निर्गते ।
मृतकल्पोऽप्यहं मर्तुं सर्वथा समकल्पयम् ॥ 14

पूज्यपाद - வாராய் பூஜ்யபாதனே, तदा - அப்பொழுது, अस्माकं - எங்களுடைய, पापात् - பாபத்தினின்றும், भवति - நீ, निर्गते - புறப்பட்டுள்ளவில், मृत कल्पोऽपि - செத்தவனுக்கு சமானமாக கல்பிக்கப்பட்ட, अहं- நானும், मर्तुं - மரிக்கிறதற்கு, सर्वथा - சர்வபிரகாரத்தினாலே, समकल्पयम् - கல்பித்தேன். 14

பொருள் : - மரியாதைக்கு உரியவரே எங்களது தீச்செயல்களின் காரணமாக, நீ புறப்பட்டு சென்றதும், கிட்டதட்ட இறந்துவிட்ட நிலையை அடைந்த நானும், உயிரை மாய்த்துக்கொள்ள முடிவு செய்தேன்.

विद्याविदितवृत्तान्ता कथं वृत्ता प्रजावती ।
इत्यालोच्यैव संस्थाने बोधो मे समजायत ॥ 15

विद्याविदितवृत्तान्ता - வித்யையினாலே அறியப்பட்ட விருத்தாந்தத்தையுடைய, प्रजावती - கந்தர்வதத்தை யானவள், कथं - எப்படி, वृत्ता - வர்த்தியாநின்றாள், इति - என்று, आलोच्यैव - ஆலோசித்தே, संस्थाने - நல்ல ஸ்தானத்திலே, मे - எனக்கு, बोधः - ஞானமானது, समजायत- உண்டாயிற்று. 15

*பொருள் : - அப்போது, தன் திறமையால் நடப்பதை அறியக்கூடிய தங்கள் மனைவி கந்தர்வதத்தை எவ்வாறு இருக்கிறாள் என்பதை அறிய எனக்கு ஆவல் ஏற்பட்டது.*

एवं भाविभवद्दृष्टिशंभरत्वादहं पुनः ।
प्रजावतीगृहं प्राप्य सविषादमवास्थिषम् ॥ 16

भाविभवद्दृष्टिशंभरत्वात् - வருகிறதான உன்னுடைய தர்சசுகபாரத்தினின்றும், अहं- நான், पुनः - பிற்பாடு, प्रजावतीगृहं - கந்தர்வதத்தையினுடைய க்ரஹத்தை, प्राप्य - அடைந்து, सविषादम् - துக்கத்தோடுகூட, अवास्थिषम् - இருந்தேன். 16

*பொருள் : - இவ்வாறு தங்களுடைய தரிசனமாகிய இன்பம் ஏற்படப் போகிறது என்ற காரணத்தினால் நல்வினைப்பயனால் உடனே தங்கள் மனைவி கந்தர்வதத்தை இருக்கும் இடத்தைச் சென்றடைந்து அங்கு துயருடன் நின்றேன்.*

स्वामिनी स्वामिहीनानां कुतः स्त्रीणां सुखाशिका ।
इति वक्तुमुपक्रान्ते हृदयज्ञा तु साऽभ्यधात् ॥ 17

स्वामिनी - வாராய் பூஜ்யயே, स्वामिहीनानाम् - ஸ்வாமி ஹீனர்களான, स्त्रीणां - ஸ்திரியர்களுக்கு, सुखासिका - சுகமாக இருக்கிறது, कुतः - எங்குநின்றும், इति - என்று, वक्तुं - சொல்லுகிறதற்கு, उपक्रान्ते - துடங்கியுள்ளளவில், तु - பின்னை, हृदयज्ञा- ஹ்ருதயத்தை அறிந்த, सा - அவள், अभ्यधात् - சொன்னாள். 17

***பொருள் :*** *- "கணவனைப் பிரிந்த பெண்களுக்கு இன்பமான நிலையில் இருக்கும்போது அணியும் அணிகலன்கள் எதற்காக" என்று அவளைப் பார்த்து கேட்பதற்கு முன்னமேயே எனது உள்ளக் கிடக்கையை அறிந்த அவள் இவ்வாறு கூறினாள்.*

अङ्ग किं खिद्यसे ज्यायाननुपद्रव एव ते ।
वयमेव महापापा मध्येदुःखाब्धिपातिताः ॥ 18

अङ्ग - வாராய் புத்ரனே, किं खिद्यसे - ஏன் துக்கியாநின்றான், ते - உன்னுடைய, ज्यायान् - தமையன், अनुपद्रव एव - உபத்ரவமில்லாதவனே, वयमेव - நாங்களே, महापापाः - மஹாபாபிகள், मध्ये - இடையிலே, दुःखाब्धिपातिताः- துக்கமாகிற சமுத்திரத்திலே விழுந்தவர்கள். 18

***பொருள் :*** *- உனது மூத்தவன் எந்தவிதமான துயரும் இல்லாமல் இருக்கின்றான். நீ ஏன் வருந்துகின்றாய் ? நாமே மிகப் பெரிய பாபிகள். துயர் என்னும் பெருங்கடலின் நடுவில் மூழ்கியவர்கள்.*

प्रतिदेशं प्रतिग्रामं प्रतिगृहैव मह्यते ।
विपच्च संपदे हि स्याद्भाग्यं यदि पचेलिमम् ॥ 19

प्रतिदेशं - தேசம் தோறும், प्रतिग्रामं - கிராமந்தோறும், प्रतिगृह्यैव - எதிர்கொண்டே, मह्यते - பூஜிக்கப்படாநின்றான், भाग्यम् - பாக்யமானது, पचेलिमम् - பரிபக்வமானது, यदि - ஆகில், विपच्च - ஆபத்தும், संपदे- சம்பத்தின் பொருட்டு, स्यात् - ஆகக்கடவதன்றோ. 19

*பொருள் : - ஒவ்வொரு நாட்டிலும், ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு வீட்டிலும் அவர் மதிக்கப் படுகிறார். நற்பேறு பெரும் நிலையில் இருந்தால் விபத்துக்களும் செல்வத்தை தரக்கூடியவை.*

द्रष्टुमिच्छसि चेत्वत्स तं जनं तव पूर्वजम् ।
किं नु ताम्यसि गम्येत क्वनु पापा हि भामिनी ॥ 20

वत्स - வாராய் புத்ரனே, तव - உனக்கு, पूर्वजं - முந்தி பிறந்திருக்கிற, तं जनं - அந்த ஜனத்தை, द्रष्टुं - பார்க்கிறதற்கு, इच्छसि चेत् - வாஞ்சியாநின்றாயாகில், किं नु ताम्यसि - ஏன் துக்கப்படாநின்றாய், गम्येत - அடையக்கடவது, पापा - பாபியான, भामिनी - ஸ்திரியானவள், क्वनु - எங்கே. 20

*பொருள் : - உனது மூத்தவனை நீ பார்க்க விரும்பினால் அங்கு செல்ல வேண்டியதுதானே. ஏன் துயர் படுகிறாய் ? பெண் என்பவள் பாவத்தின் உருவம். அவள் எங்கு செல்வாள் ?*

इत्युक्त्वा शाययित्वा च शय्यायां साभिमन्त्रितम् ।
मामत्र भवती चात्र सपत्रं प्राहिणोदिति ॥ 21

इति - என்று, उक्त्वा - சொல்லி, शय्यायां - மெத்தையிலே, शाययित्वा च - படுக்கைப்பண்ணுவித்து, अत्र- இவ்விடத்திலே, भवती - நீ இருந்துள்ளளவில், सा - அவள், अभिमन्त्रितम् - மந்திரிக்கப்பட்டிருக்கிற, मां - என்னை, अत्र च- இவ்விடத்திலேயும், सपत्रं - ஓலையோடெகூட, इति - என்று, प्राहिणोत् - அனுப்பினாள். 21

*பொருள் : - என்று கூறி அவள் என்னை மந்திரிக்கப் பட்ட ஒரு படுக்கையில் படுக்க வைத்து என்னை இங்கு ஒரு கடிதத்தோடு அனுப்பி வைத்து இருக்கிறாள் என்று கூறினான்.*

*अखिद्यत ततः स्वामी सदयैरनुजोदितैः ।
स्नेहपाशो हि जीवानामासंसारं न मुञ्चति ॥ 22

स्वामी - ஜீவந்தரஸ்வாமியானவன், सदयैः - தயைகளோட கூடியிருக்கிற, अनुजोदितैः - தம்பி சொன்ன வசனங்களினாலே, ततः -பிற்பாடு, अखिद्यत- துக்கித்தான், जीवानां - ஜீவன்களுக்கு, स्नेहपाशः - ஆசாபாசமானது, आसंसारं - சம்ஸாரமுள்ளளவும், न मुञ्चति हि - விடாநின்றதில்லையன்றோ. 22

*பொருள் : - கருணையுடன் தனது தமயன் கூறியவற்றைக் கேட்ட ஜீவந்தரன் மிகவும் துயர் அடைந்தான். இவ்வுலகம் இருக்கும் வரை உயிர்கள் அன்பெனும் கயிறால் கட்டப்பட்டவர்களாக இருக்கின்றனர்.*

गुणमालाव्यथाशंसि पत्रं चायमवाचयत् ।
चतुराणां स्वकार्योक्तिः स्वमुखान्न हि वर्तते ॥ 23

---

** உயிருள்ள வரையில் ஆசை விடாது. (பழமொழி)*

गुणमालान्यथाशंसि पत्रं च - குணமாலையினுடைய துக்கத்தை ஸந்தேஹப்படுத்தும் ஒலையையும், अयं - ஜீவந்தரன், अवाचयत् - வாசித்தான், चतुराणां - சதுரர்களுக்கு, स्वकार्योक्तिः - தங்களுடைய கார்யவசனமானது, स्वमुखात् - தங்களுடைய முகத்தினின்றும், वर्तते नहि - வர்த்தியா நின்றதில்லையன்றோ. 23

*பொருள் : - குணமாலையின் பெயராலே எழுதப்பட்ட, அவளது துயரை வெளிப்படுத்துகிற கடிதத்தை ஜீவகன் படித்தான். தங்கள் சம்பந்தப்பட்டுள்ள செயல் களைப் பற்றிய செய்திகள் தங்கள் வாயிலாகவே அறிவாளிகள் வெளிப்படுத்தமாட்டார்கள். (கந்தர்வதத்தை அனுப்பிய கடிதம் கந்தர்வதத்தையின் பெயரில் இல்லாமல் குணமாலையின் பெயரைக் கொண்டு ஜீவந்தரனிடம் அளிக்கப்பட்டது. கந்தர்வதத்தை அறிவாளி என்பதால் தான்படும் துயரை தானே படுவதாக தெரிவிக்காமல் அத்துயரை குணமாலை அனுபவிப்பதாக கடிதம் எழுதப்பட்டிருந்தது. இதற்கான விளக்கம் அடுத்த செய்யுளில் காண்க)*

अन्यापदेशसंदेशात्खेचर्यां खेदवानभूत् ।
विद्वेषः पक्षपातश्च प्रतिपात्रं च भिद्यते ॥ 24

अन्यापदेशसंदेशात् - அன்யாபதேசமான ஓலை வக்கணையினின்றும், खेचर्यां - காந்தர்வதத்தையினிடத்திலே, खेदवान् - துக்கத்தையுடைத்தானவன், अभूत्- ஆனான், विद्वेषया - த்வேஷமும், पक्षपातश्च - பக்ஷபாதமும், प्रतिपात्रं च - பாத்ரம் தோறும், भिद्यते हि - பேதிக்கப்படாநின்றதன்றோ. 24

பொருள் : - வேற்றுப்பொருளாகக் கூறி தான் கூறவந்த கருத்தை உணர்த்தும், கந்தர்வதத்தையின் பிறிவாற்றாமையை விளக்கும் கடிதத்தை ஜீவகன் படித்து மிகத் துயரை அடைந்தான். வெறுப்பும், விருப்பும் அவரவர்க்கு ஏற்றபடி மாறுகின்றது அல்லவா. (கந்தர்வதத்தை குணமாலையின் பெயரால் எழுதிய கடிதத்தை ஜீவகன் புரிந்துகொண்டு கந்தர்வதத்தையின் பொருட்டு துயர் உடையவனாக ஆனான்)

प्रियाशोकश्रुतेर्जातः शोकोऽप्येतस्य नास्फुरत् ।
नहि प्रसादखेदाभ्यां विक्रियन्ते विवेकिनः ॥ 25

प्रियाशोकश्रुतेः - ப்ரியையினுடைய துக்க ச்ருதியினின்றும், जातः - உண்டாகாயிருக்கிற, शोकोपि - துக்கமும், एतस्य - ஜீவந்தரனுக்கு, नास्फुरत् - ப்ரகாசித்தது இல்லை, प्रसादखेदाभ्यां - சந்தோஷ துக்கங்களினாலே, विवेकिनः - விவேகிகள், विक्रियन्ते - விகாரப்பட்டார்கள், नहि - இல்லையன்றோ. 25

பொருள் : - அன்புக்குரியவளின் துயரத்தை கேள்விப்பட்ட பின்னரும் ஜீவந்தரனின் துயரம் வெளிப்படையாகத் தெரியவில்லை. (அவன் மனதிற்குள்ளேயே துயரப்பட்டுக்கொண்டான்) பகுத்தறிவுள்ளவர்கள் மகிழ்ச்சி துயரம் போன்ற உணர்வுகளால் மாற்றமடையமாட்டார்கள்.

वैवाहिकगृहस्थाश्चह्यातस्थुरनुजं भृशम् ।
बन्धोर्बन्धौ च बन्धो हि बन्धुता चेदवञ्चिता ॥ 26

वैवाहिकगृहस्थाश्च - விவாஹ சம்பந்தமான மைத்துனமார்களும், अनुजं - தம்பியை, हि - ஸ்புடமாக, भृशम् - மிகவும், आतस्थुः - இருந்தார்கள், बन्धुता -

பந்துஸ்வரூபமானது, अवञ्चिताचेत् - வஞ்சகமில்லாததாகில், बन्धोः - பந்துவுக்கு, बन्धौ च - பந்துவினிடத்திலேயும், बन्धो हि - பந்துவன்றோ. 26

*பொருள் : - திருமணவீட்டினரும், ஜீவந்தரனுடைய தம்பியான நந்தாட்யனை சூழ்ந்துகொண்டார்கள். ஏமாற்றமில்லாமல் இருக்கும் உறவு ஒரு உறவினனுக்கு அவ்வுறவில் ஈடுபாட்டை ஏற்படுத்தும். (அதாவது ஒரு பொய்யைக் கூறி உறவினன் என்ற ஒரு நிலையை ஏற்படுத்திக் கொள்ளாமல் உண்மையாகவே இருக்கக்கூடிய உறவு இருக்குமானால், அந்த உறவில் ஈடுபாடும் மற்ற உறவினருக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தும். (சொந்தத்தைக் கூறி ஏமாற்றக்கூடாது என்பது பொருள்)*

अवस्कन्दाद्गवां गोपा अथाक्रोशन्नृपाङ्गणे ।
पीडायां तु भृशं जीवा अपेक्षन्ते हि रक्षकान् ॥ 27

अथ - பிற்பாடு, गवां - பசுக்களுடைய, अवस्कन्दात् - ஓட்டிப்போனத்தினின்றும், गोपाः - இடையர்கள், नृपाङ्गणे - ந்ருபாங்கணத்திலே, आक्रोशन् - கூப்பிட்டார்கள், तु - பின்னை, पीडायां - பீடையானது உண்டாயுள்ளளவில், जीवाः - ஜீவன்கள், भृशं - மிகவும், रक्षकान् - ரக்ஷகர்களை, अपेक्षन्ते हि - அபேக்ஷியாநின்றார்களன்றோ. 27

*பொருள் : - அப்போது இடையர்கள் அரசனுடைய அவைக்கு வந்து தங்களது ஆவினங்களை யாரோ ஓட்டிச் சென்றுவிட்டார்கள் என்று கதறி அழுதார்கள். மிக்க துயருற்றபோதுதான் உயிரினங்கள் அவர்களைக் காப்பவர்களை வேண்டுகிறார்கள். (துயருற்றபோதுதான் மக்கள் அரசனை அண்டி, துயர் தீர்க்குமாறு வேண்டுவர்)*

सानुक्रोशं तदाक्रोशं क्षमाधीशो न चक्षमे ।
पातापायान्न चेत्पायात्कुतो लोक व्यवस्थितिः ॥ 28

सानुक्रोशं - தயையோட கூடின, तदाक्रोशं - அவர்கள் கூப்பிடுகிறதை, क्षमाधीशः - ராஜாவானவன், क्षमे - க்ஷமித்தானில்லை, पातापायात् - கேடு வருகிற அபாயத்தினின்றும், पायात् - ரக்ஷிக்கக்கடவது, न चेत् - இல்லையாகில், लोकव्यवस्थितिः - லோகவ்யவஸ்தியானது, कुतः - எங்குநின்றும். 28

*பொருள் : - அந்தக்குரலைக் கேட்ட அரசன் அதற்கான காரணத்தை அறிந்து சினம் கொண்டான். அரசர்கள் குடிமக்களை ஆபத்தில் இருந்து காக்காவிட்டால், உலகில் மனிதர்கள் எவ்வாறு வாழ முடியும்.*

स्वामी श्वशुररुद्धोऽपि गोमोचनकृते ययौ ।
पराभवो न सोढव्योऽशक्तैः शक्तैस्तु किं पुनः ॥ 29

स्वामी - ஜீவந்தரன், श्वशुररुद्धोऽपि - மாமனாலே தடையிடப்பட்டாலும், गोमोचनकृते - பசுக்களை விடுவிக்கப் பண்ணுகிறத்திலே, ययौ- அடைந்தான், पराभवः - திரஸ்கார மானது, अशक्तेः:- சாமர்த்தியமில்லாதவர்களினாலேயும், न सोढव्यः - சஹிக்கப்படுமதல்ல, तु - பின்னை, शक्तैः - சாமர்த்தியவான்களினாலே, किं पुनः - சொல்லவேணுமோ.

*பொருள் : - தனது மாமன் தடை செய்த போதும் ஜீவந்தரன் பசுக்களை மீட்பதற்காக புறப்பட்டுச் சென்றான். திண்மை(சக்தி)யற்றவர்கள்கூட தோல்வியை பொறுத்துக் கொள்ளமாட்டார்கள். திண்மை உள்ளவர்கள் பொறுத்துக்கொள்வார்களா ?*

*दस्यवोऽपि गवां तत्र मित्राण्येवाभवन्विभोः ।
एधोगवेषिभिर्भाग्ये रत्नं चापि हि लभ्यते ॥ 30

तत्र - அவ்விடத்திலே, गवां - பசுக்களுடைய, दस्यवोऽपि- திருடர்களும், विभोः - ப்ரபுவான ஜீவந்தரனுடைய, मित्राण्येव- மித்ரர், अभवन् - ஆனார்கள், एधोगवेषिभिः - விறகு தேடுகிற ஜனங்களினாலே, भाग्ये - பாக்யமுண்டா யுள்ளளவில், रत्नं चापि - ரத்னமும், लभ्यते हि - லபிக்கப்படாநின்றதன்றோ. 30

*பொருள் : - அங்கு பசுக்களைக் களவாடியவர்கள் ஜீவந்தரனுடைய நண்பர்களாகவே இருந்தார்கள். விறகைத் தேடப்போனவர்களுக்கு அவர்களுடைய பாக்யத்தால் விலையுயர்ந்த ரத்னக் கற்களும் கிடைக்குமன்றோ.*

समोऽभूत्स्वामिमित्रेषु स्नेहश्चान्योन्यवीक्षणात् ।
एककोटिगतस्नेहो जडानां खलु चेष्टितम् ॥ 31

अन्योन्वीक्षणात् - அன்யோன்யமாகப் பார்த்துக் கொண்டதால், मित्रेषु - மித்ரர்களிடத்தில், स्नेहः च - ஸ்நேஹமும், समः अभूत्- ஸமமாக ஆனது , एककोटिगतः - ஒரு தலைபக்ஷமான, स्नेहः - ஸ்னேஹம், जडानां - ஜடர்களுக்கு, चेष्टितं - சேஷ்டை, खलु - அன்றோ ! 31

*பொருள் : - பசுக்களை விரட்டிச் சென்றவர்களும், அவர்களை வெல்லவந்த ஜீவந்தரனும் ஒருவரை ஒருவர் அன்புடன் பார்த்துக் கொண்டதால் அந்த நட்பு சமமாக ஆயிற்று. ஒரு தலைபட்சமான நட்பு அறிவற்றவர்களிடம் தான் காணப்படும் அன்றோ!*

---

* விறகு வெட்ட போனவனுக்கு நிதி கிடைத்தாற் போல (பழமொழி)

जामातरि चमत्कारो राज्ञोऽभून्मित्रवीक्षणात् ।
कृतिनोऽपि न गण्या हि वीतस्फीतपरिच्छदाः ॥ 32

राज्ञः - ராஜாவுக்கு, मित्रवीक्षणात् - மித்ரர்களைக் கண்டதினின்றும், जामातरि - மருமகனிடத்திலே, चमत्कारः - மிகவும் சமத்காரமானது, आसीत्-ஆச்சுது, वीतस्फीतपरिच्छदाः - விடப்பட்ட ப்ரகாசமான பரிவாரங்களையுடைய, कृतिनोपि - புண்யவான்களும், न गण्या हि - எண்ணிக்கைப்பட்டார்களில்லையன்றோ. 32

பொருள் : - ஜீவந்தரனின் நண்பர்களை சந்தித்ததால் அரசன் த்ருடமித்ரனுக்கு தனது மருமகன் ஜீவந்தரனிடத்தில் மிகுந்த மதிப்பு ஏற்பட்டது. பெரும்படையை அழித்துவிடும் திறமைபடைத்த விரர்கள்கூட, இதுபோன்ற நிகழ்வுகளைப் பொருட்படுத்தமாட்டார்கள். (எதையும் சாதிக்கவல்ல படைவீரர்களால் சாதிக்கமுடியாத நட்பு என்ற ஒன்றை ஜீவந்தரன் சாதித்துவிட்டதால் உயிரிழப்பே இல்லாமல் செயல்முடித்த ஜீவந்தரனைக் காட்டிலும் சிறந்த போர்வீரர்கள் வேறு எவரும் இருக்கமுடியாது. போரால் சாதிக்க முடியாததை நட்பால் சாதித்துவிட்டதால் ஜீவந்தரனை சிறந்தவனாக அரசன் எண்ணினான்)

स्वमित्रावर्जोऽहृष्यदतिमात्रमसौ कृती ।
एकेच्छानामतुच्छानां न ह्यन्यत्सङ्गमात् सुखम् ॥ 33

स्वमित्रावर्जः - மித்ரதம்பிமார்களுடன் கூடின, कृती - புண்யவானான, असौ - ஜீவந்தரன், अतिमात्रं - மிகவும், अहृष्यत्- ஸந்தோஷித்தான், एकेच्छानां - ஸமான வாஞ்சையையுடைய, अतुच्छानां - கம்பீர புருஷர்களுக்கு, अन्यत्सङ्गमात् - அன்யருடைய உறவினின்றும், सुखम् - சுகமானது, नहि - இல்லையன்றோ. 33

*பொருள் : - தனது நண்பர்களுடன் கூடிய ஜீவந்தரன் தன் செயல் முடித்தவனாக மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். ஒரே விதமான அன்புடைய சான்றோர்களுக்கு பிறருடைய உறவில் இருந்து இன்பம் மட்டுமே கிடைக்கிறது.*

अयथापुरसम्मानात्समशेत सखीनसौ ।
विशेते हि विशेषज्ञो विशेषाकारवीक्षणात् ॥ 34

असौ - ஜீவந்தரன், अयथापुरसंमानात् - விசேஷமாக பண்ணுகிற சத்காரத்தினின்றும், सखीन् - மித்ரர்களை, समशेत- சந்தேஹித்தான், विशेषाकारवीक्षणात् - விசேஷமான ஆகாரத்தைக் கண்டதினின்றும் விசேஷக்ஞனானவன், विशेते हि - சந்தேஹியா நின்றானதன்றோ. 34

*பொருள் : - ஜீவந்தரனுடைய நண்பர்கள் முன்போலன்றி அவனை மிகுதியாக உபசரித்தமையால் ஜீவந்தரன் அவர்கள்மீது ஐயம் கொண்டான். நல்லறிவு படைத்தவன் புதுமையான ஒரு அமைப்பை ஒரு பழைய பொருளில் கண்டான் என்றால் அதனைக் கண்டு ஐயப்படுவது அவனது இயல்பே.*

रहस्येव वयस्येषु तन्निदानमचोदयत् ।
एककण्ठेषु जाता हि बन्धुता ह्यवतिष्ठते ॥ 35

रहस्येव - ரஹஸ்யத்தினாலேயே, वयस्येषु - மித்ரர் இடங்களிலே, तन्निदानम् - அந்த காரணத்தை, अचोदयत् - கேட்டான், तथाहि एक कण्ठेषु - சமான ஹ்ருதயங்களிலே, जाता - உண்டான, बन्धुता - பந்துத்வமானது, हि - ஸ்புடமாக, अवतिष्टते हि - இராநின்றதன்றோ. 35

பொருள் : - ஜீவந்தரன் நண்பர்களைத் தனியே அழைத்து விசாரித்தான். ஒரே மாதிரியான எண்ணங்களைக் கொண்டவர்களிடதில் ஏற்படும் உறவானது நிலையாக நிற்கிறது.

मुख्यं सख्यं गतस्तेषामाचख्यौ पङ्कजाननः ।
सज्जनानां हि शैलीयं सक्रमारभ्य शालिता ॥ 36

तेषां - அவர்களுக்குள்ளே, मुख्यं - முக்யமான, सख्यं - மித்ரத்வத்தை, गतः - அடைந்திருக்கிற, पङ्कजाननः - பதுமமுகனானவன், आचख्यौ - சொன்னான், (तथाहि) सज्जनानां - சஜ்ஜனர்களுக்கு, सक्रमारम्भशालिता - க்ரமாரம்பத்தோடகூடி நிறையறது, शैली इयम् हि - சீலஸ்வபாவமன்றோ. 36

பொருள் : - அவர்களுள் சிறந்த நண்பனாக விளங்கிய பங்கஜானனன் என்பவன், அவனுக்கு விடை பகர்ந்தான். முறையான விடை கூறுவது சான்றோர்களின் வழிமுறை யன்றோ (சிறப்பன்றோ).

स्वामिन्स्वामिवियोगेऽपि युक्ता दग्धासुभिर्वयम् ।
अस्तोकभावि भाग्येन हस्तग्राहं ग्रहादिव ॥ 37

स्वामिन् - வாராய் ஸ்வாமியே, स्वामीवियोगेऽपि - ஸ்வாமிவியோகத்திலேயும், दग्धासुभिः - சுடப்பட்ட பிராணன்களோட, युक्ताः - கூடினவர்கள், वयं - நாங்கள், अस्तोकभावि भाग्येन - பகுவாக வருகிற பாக்யத்தினாலே, हस्तग्राहं - (பிராணனைக்) கையிலே பிடிக்கிறதை, ग्रहादिव - கிரஹறங்களால் பிடிக்கிறத்தினின்றும் போல. 37

பொருள் : - தலைவரே தங்களது பிரிவால் மிகத் துயருற்ற உயிரைக் கொண்ட நாங்கள், ராஹு கிரஹத்தால் பீடிக்கப்பட்ட சந்திரனைப்போல உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறோம்.

साश्वासाश्च ततो देव्या दत्तहस्तावलम्बनाः ।
प्रास्थिष्महि धुरं प्राप्ता वयमश्वीयपाणिनाम् ॥ 38

ततः - பிற்பாடு, साश्वासाश्च - விஸ்வாசங்களுடனே யுங்கூடி, देव्या - கந்தர்வதத்தையினாலே, दत्तहस्तावलम्बनाः - கொடுக்கப்பட்ட ஹஸ்தாவலம்பனங்களையுமுடைய, वयं - நாங்கள், अश्वीयपाणिनाम् - குதிரை ஆயுதத்துடன் கூடின கைகளுடைய, धुरं - பாரத்தை, प्राप्ता: - அடைந்தவர் களாய்க்கொண்டு , प्रास्थिष्महि - புறப்பட்டோம். 38

பொருள் : - பிறகு தேவி கந்தர்வதத்தையினால் அளிக்கப்பட்ட உதவிகளை ஏற்றுக்கொண்டு எங்கள் மனங்களை ஒருவாறு தேற்றிக்கொண்டு, தங்களைத் தேடும் பொறுப்புடன் குதிரையில் ஏறி புறப்பட்டோம்.

अतिलङ्घ्य ततोऽध्वानमध्वश्रमविहानये ।
दण्डकारण्यविख्यातं तापसाश्रममाश्रिताः ॥ 39

ततः - அங்குநின்றும், अद्धानम् - மார்கத்தை, अतिलङ्घ्य- வெகுதூரங்கடந்து, अध्वश्रमविहानये - வழிவந்த வழக்கை தீருகிறத்தின் பொருட்டு, दण्डकारण्यविरुयातम् - தண்டகாரண்யவனத்திலே ப்ரக்யாதமான, तापसाश्रमं - தாபசாச்ரமத்தை, आश्रिताः - அடைந்தோம். 39

பொருள் : - அங்கிருந்து புறப்பட்டு வெகுதூரம் கடந்து எங்களுடைய வழிநடந்த களைப்பு தீருவதற்காக தண்டகாரண்யம் என்ற காட்டில் மிக பிரபலமான முனிவர்களின் தவச்சாலையை அடைந்தோம்.

दर्शं दर्शं ततो दृश्यं विहरन्तोऽत्र विश्वतः ।
अपश्याम क्वचित्कांचित्पुण्यतः पुण्यमातरम् ॥ 40

ततः - பிற்பாடு, दृश्यं - பார்க்கிறதுக்கு யோக்யமானத்தை, दर्शं दर्शं - பார்த்துப்பார்த்து, अत्र - இவ்விடத்திலே, विश्वतः - சமஸ்த பிரதேசத்தினின்றும். विहरन्तः - விஹரிக்கிற நாங்கள், क्वचित् - ஓரிடத்திலே. पुण्यतः- புண்ணியத்தினின்று, कंचित् पुण्यमातरम् - ஒரு புண்ணிய மாதாவை, अपश्यामः - கண்டோம். 40

பொருள் : - இந்த உலகம் முழுதும் அலைந்துகொண்டு அங்கெங்கு தேடிக்கொண்டு, ஒரு சமயம் எங்களுடைய நல்வினைப் பயனால், தவம் செய்யும் ஒரு பெண்ணைக் கண்டோம்.

तन्मात्रा दृष्टमात्रेण कुत्रत्या इति चोदिताः ।
वयमप्युत्तरं वक्तुमुपक्रम्य यथाक्रमम् ॥ 41

दृष्टमात्रेण - காணப்பட்டிருக்கிற, तन्मात्रा - அந்த புண்ணிய மாதாவினாலே, कुत्रत्याः - எங்கே இருந்து வந்தீர்கள், इति - என்றும், चोदिताः - கேட்கப்பட்டிருக்கிற, वयमपि - நாங்களும், उत्तरम् - உத்தரத்தை, वक्तुं - சொல்லுகிறத்துக்கு, यथाक्रमम् - யதாக்ரமமாக, उपक्रम्य - துடங்கி. 41

*பொருள் : - அந்தத் தாய் எங்களைப் பார்த்தவுடன் நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் என்று கேட்டாள். நாங்களும் முறைப்படி பதில் கூற துவங்கினோம்.*

अस्ति राजपुरे कश्चिद्विबुधानामपश्चिमः ।
विशां च जीवकाख्योऽयमेतं जीवातुकाः वयम् ॥ 42

राजपुरे - ராஜபுரத்திலே, विबुधानां - வித்வாம்சர் களுக்கும், विशाश्च - வைஸ்யர்களுக்கும், अपश्चिमः - முக்யனான, जीवकाख्यः - ஜீவந்தரனென்னும் பேரையுடைய, अयं - இவன், कश्चित् - ஒருத்தன், अस्ति - உண்டாகா நின்றான், एतं जीवातुकाः - இவனையே ஜீவனமாக வுடைத்தானவர்கள், वयं - நாங்கள். 42

*பொருள் : - "ராஜபுரம் என்ற இடத்தில் அறிஞர்களிலும் வணிகர்களிலும் முக்கியமாக கருதப்படும் ஜீவகன் என்ற பெயரையுடைய ஒருவன் இருக்கிறான். அவனையே உயிராகக் கொண்டவர்கள் நாங்கள்.*

काष्टाङ्गारह्वयः कोऽपि कोपादेनमनेनसम् ।
हन्तुं किलेत्यवोचाम मूर्च्छिता सा च पेतुषी ॥ 43

काष्टाङ्गाराह्वयः - காஷ்ட்டாங்காரனென்றுபேரை யுடைய, कोऽपि - ஒருத்தன், कोपात् - கோபத்தினின்றும், अनेनसम् - பாபமில்லாத, एनं - இவனை, हन्तुं किल - கொல்லுகிறதற்கன்றோ, इति - என்று, अवोचाम - சொன்னோம், सा च - அவளும் மூர்ச்சிதையானவளாய்க் கொண்டு, पेतुषी - விழுந்தாள். 43

பொருள் : - காஷ்டாங்காரன் என்ற பெயரைக் கொண்ட ஒருவன் சினம் கொண்டு தீச்செயல் புரியாத அந்த ஜீவந்தரனை கொல்வதற்காக ..." என்று கூறிக்கொண்டு இருக்கும்போதே அந்த தவம் செய்யும் பெண் மூர்ச்சை அடைந்து வீழ்ந்தாள்.

हन्त हन्त हतो नायमम्बेत्यभिहिता मया ।
पिहितासु प्रयाणा सा प्रालपल्लब्ध चेतना ॥ 44

हन्त हन्त - கெட்ட கெட்ட, अयं - இவன், हतः - கொல்லப்பட்டவன், न - அல்ல, अम्ब - வாராய் தாயே, इति- என்று, मया - என்னாலே, अभिहिता - சொல்லப்பட்ட, पिहितासु प्रयाणा - மறைக்கப்பட்ட, பிராணப்பிரயாணத்தை உடைய, सा- அவள், लब्धचेतना - பெறப்பட்ட ஞானத்தை உடைத்தானவனாய்க்கொண்டு, प्रालपत् - அழுதாள். 44

பொருள் : - ஐயஹோ! அவன் கொல்லப்படவில்லை தாயே! என்று என்னால் கூறப்பட அவள் உயிர் துறந்து செல்லும் பயணம் தடைப்பட்டவளாக மீண்டும் நினைவு திரும்பி கண்ணீர் சிந்தினாள்.

अम्भोदालीव दम्भोलीममृतं च मुमो च सा ।
देवी समं प्रलापेन देवोदन्तमिदन्तया ॥ 45

अम्भोदाली - மேகமானது, दम्भोलीम् - இடியையும், अमृतञ्च - ஜலத்தையும், इव - போல, सा देवी - அந்த விஜயமஹாதேவியானவள், प्रलापेन - அழுகையோடே, समं- கூட, देवोदन्तम् - தேவனுடைய விருத்தாந்தத்தை, इदन्तया - இவ்வளவினாலே, मुमो च - விட்டாள். 45

பொருள் : - கார்முகில் எவ்வாறு இடியையும், மழையையும் ஏற்படுத்துமோ அதைப் போல அந்தப் பெண்மணி தனது அழுகையின் ஊடே தங்களுடைய கதையையும் கூறினாள்.

तन्मुखात् खादिवोत्पन्नं रत्नवृष्टिं तवोन्नतिम् ।
उपलभ्य वयं लब्धाममन्यामहि तन्महीम् ॥ 46

खात् - ஆகாசத்தினின்றும், उत्पन्नाम् - உண்டான, रत्नवृष्टिं - ரத்னவிருஷ்டியை, इव - போல, तन्मुखात्- அவளுடைய முகத்தினின்றும், तव - உன்னுடைய, उन्नतीम् - உன்னதியை, उपलभ्य - பெற்று, वयं - நாங்கள், तन्महीं - அந்த ராஜ்யத்தை, लब्धां - பெற்றதாக, अमन्यामहि - எண்ணினோம்.

பொருள் : - வானத்தில் இருந்து பொழியும் விலைமதிப்பற்ற இரத்தினக் கற்களின் மழைபோல விளங்கும் உன்னுடைய உயர்ந்த தன்மைகளைப் பற்றி அவள் வாயிலாக அறிந்து இவ்வுலகையே வென்றவர்கள் போல எண்ணினோம்.

देव ते भव संकीर्त्या ततो देवीं पुनः पुनः ।
आश्वास्यापृच्छय तद्देशादिमं देशं गताः इति ॥ 47

देव - வாராய் தேவனே, ते - உன்னுடைய, भव संकीर्त्या- பவசம்கீர்த்தனையினாலே, ततः - பிற்பாடு, देवीं - தேவியை, पुनः पुनः - திரும்ப திரும்ப, आश्वास्य - தேற்றி, आपृच्छय - கேட்டு, तद्देशात् - அந்த தேசத்தினின்றும், इमं देशम् - இந்த தேசத்தை, गताः - அடைந்தோம், इति - என்று. 47

பொருள் : - மரியாதைக்கு உரியவரே தங்களுடைய உயர்குணங்களை பற்றி கேட்டறிந்த பின்னர் அந்தப் பெண்ணை மீண்டும் மீண்டும் சமாதானம் செய்துவிட்டு அவளிடம் விடைப்பெற்று அங்கிருந்து இந்த நாட்டை வந்தடைந்தோம்.

मातुः जीवन्मृतिज्ञाना तत्वज्ञः सोऽप्यखिद्यतः ।
जीवानां जननीस्नेहो न ह्यन्यैः प्रतिहन्यते ॥ 48

मातुः - தாயினுடைய, जीवन्मृतिज्ञानात् - ஜீவிச்சுக்கொண்டிருக்கிறச்சே செத்தாள் என்கிற ஞானத்தினின்றும், तत्वज्ञः - தத்வத்தையறிந்து இருக்கிற. सोऽपि - ஜீவந்தரனும், अखिद्यत - துக்கித்தான், तथाहि - जीवानाम् - ஜீவன்களுக்கு, जननीस्नेहः - தாயினுடைய ஸ்நேகமானது, अन्यैः - அன்யங்களினாலே, प्रतिहन्यते - தடுக்கப்படாநின்றது, नहि - இல்லையன்றோ. 48

பொருள் : - தனது தாய் மூர்ச்சை அடைந்ததைக் கேட்டு ஜீவந்தரன் மிக வருந்தினான். உயிர்களுக்கு தாயிடம் ஏற்படும் ஈடுபாடு பிறரால் தடுக்கப்படமுடியாதது அன்றோ.

अत्वरिष्ट च तां द्रष्टुं कौरवो गुरुगौरवः ।
अम्बामदृष्टपूर्वां च द्रष्टुं को नाम नेच्छति ॥ 49

तां - அவளை, द्रष्टुं - பார்க்கிறதற்கு, गुरुगौरवः - பெரிதான வாத்சல்யமுடைய, कौरवः - ஜீவந்தரனானவன், अत्वरिष्ट च - த்வரிதம் பண்ணினான், अदृष्टपूर्वा - ஒருக்காலும் காணாமலிருக்கிற, अम्बाञ्च - தாயையும், द्रष्टुं - பார்க்கிறதுக்கு, को नाम - எவன்தான், नेच्छति - வாஞ்சியாநின்றானில்லை. 49

பொருள் : - மிகுந்த மரியாதை உடைய குரு வம்சத்தில் தோன்றிய ஜீவந்தரன், அவளை உடனே சென்று சந்திப்பதற்குத் துடித்தான். இதுநாள் வரை காணாமல் இருக்கும் தாயைக் காண யார்தான் விரும்பமாட்டார் ?

व्यस्मारि मातरि स्नेहान्यान्येनान्यदशेषतः ।
रागद्वेषादि तेनैव बलिष्टेन हि वाध्यते ॥ 50

मातरि - தாயினிடத்திலே, स्नेहात् - ஸ்னேகத்தினின்றும், मान्येन - பூஜ்யனான ஜீவந்தரனாலே, अन्यत् - மற்றொன்று, अशेषतः - சமஸ்தத்தினின்றும், व्यस्मारि - மறக்கப்பட்டுது, (तथाहि) रागद्वेषादि - ராகத்வேஷமுதலானது, बलिष्टेन - பலவானான, तेनैव - அந்த ராகத்வேஷாதியினாலேயே, बाध्यते हि - பாதிக்கப்படாநின்றதன்றோ. 50

பொருள் : - தன் தாயிடம் இருந்த ஈடுபாட்டின் காரணமாக ஜீவந்தரன் வேறு எல்லாவற்றையும் மறந்தான். விருப்புவெறுப்புகள் அவற்றைக் காட்டிலும், பலம் பொருந்திய வேறு விருப்புவெறுப்புக்களால் நிச்சயமாகப் பாதிக்கப்படுகின்றன.

अन्वजिज्ञपदात्मीयां गतिं भार्यां परानपि ।
आवश्यकेऽपि बन्धूनां प्रातिकूल्यं हि शल्यकृत् ॥ 51

आत्मीयां - தன்னுடைய சம்பந்தமான, गतिं - கமனத்தை, भार्यां - பார்யையும், परानपि - அன்யர்களையும், अन्वजिज्ञपत् - அறிவித்தான், (तथा) बन्धूनां - பந்துக்களுடைய, आवश्यके पि - ஆவச்யத்திலேயும், प्रातिकूल्यं - பிரதிகூலமானது, शल्यकृत् - சல்யத்தைப்பண்ணுகிறதன்றோ. 51

பொருள் : - தனது பயணத்தைப் பற்றி தன் மனைவியிடமும் மற்றவர்களிடமும் ஜீவந்தரன் கூறினான். உறவினர்கள் தேவையானவர்கள் என்ற நிலையில்கூட அவர்கள் ஏற்படுத்தும் தடை, துயரைத் தரக்கூடியது.

अनुनीयानुगान्बन्धून्प्रसभं प्रययौ ततः ।
अनुनयो हि माहात्म्यं महतामुपबृंहयेत् ॥ 52

अनुगान् - கூடபின்சென்று வருகிற, बन्धून् - பந்துக்களை, अनुनीय - சம்மதிக்கப்பண்ணி, प्रसभं - சீக்கிரமாக, ततः - அங்குநின்றும், प्रययौ - அடைந்தான், (तथाहि) अनुनयः - சம்மதிக்கப்பண்ணுகிறது, महतां - மஹாபுருஷர்களுக்கு, माहात्म्यं - மாஹாத்மியத்தை, उपबृंहयेत् हि - வர்த்திக்கக்கடவதன்றோ. 52

பொருள் : -அவன் பின்னே தொடர்ந்து வரக்கூடிய உறவினர்களை சமாதானம் செய்துவிட்டு அங்கிருந்து ஜீவந்தரன் புறப்பட்டான். பிறரை சம்மதிக்க வைப்பது என்ற கலையை நன்கு உணர்ந்தவர்கள் சான்றோர்கள் அல்லவா.

प्रसवित्री ततः प्रेक्ष्य प्रेमान्धोऽभूदवन्ध्यधीः ।
तत्वज्ञानतिरोभावे रागादि हि निरङ्कुशम् ॥ ॥ 53

ततः - பிற்பாடு, प्रसवित्रीं - தாயை, प्रेक्ष्य - பார்த்து, अवन्ध्यधीः - பழுதில்லாத புத்தியையுடையவன், प्रेमान्धम् - ஸ்நேகாந்தனானவன், अभूत् - ஆனான், (तथाहि) तत्वज्ञान-तिरोभवे - தத்வஞானமில்லாததினாலே, रागादि - ராகமுதலானது, निरङ्कुशम् - தடையில்லாததன்றோ. 53

பொருள் : - அப்பழுக்கற்ற அறிவைக்கொண்ட ஜீவந்தரன் தனது தாயைக் கண்டவுடன் அன்பினால் குருடனாகிப்போனான். (தாயின் மீது மட்டற்ற அன்பு வைத்திருந்தான்) தத்துவ அறிவு மறையும் போது அன்பு முதலான உணர்வுகள் அடக்க முடியாதவைகளாக ஆகிவிடுகின்றன.

जातजातक्षणत्यागाज्जातं दुर्जातमक्षिणोत् ।
सुतवीक्षणतो याता सुतप्राणा हि मातरः ॥ 54

जातजातक्षणत्यागात् - பிறந்த புத்ரனுடைய க்ஷணத் தியாகத்தினின்றும், माता - தாயானவள், सुतवीक्षणतः - புத்ரனை கண்டதினின்றும், जातं - புத்ரனை, दुर्जातं - துர்லபமாக, अक्षिणोत् - எண்ணினாள், (तथाहि) मातरः - தாய்மார்கள், सुतप्राणा हि - புத்ரர்களையே பிராணன்களாக உடைத்தானவர்களன்றோ. 54

பொருள் : - தனது மகன் பிறந்தவுடன் அவனை பிரிந்ததால் இனி மகனைக் காண்பதரிது என்று இதுவரை எண்ணிக்கொண்டிருந்த அந்தப் பெண், மகனைக் கண்டதனால் மீண்டும் உயிர்பெற்றவளாக ஆனாள். மகனையே உயிராகக் கொண்டிருப்பவர்கள் தாய்மார்கள் அன்றோ.

सूनोर्वीक्षणस्तप्ता क्षोणीशं तमियेष सा ।
लाभं लाभमभीप्स्या* स्यात् न हि तृप्तिः कदाचन ॥ 55

---

* लाभममीच्छा, Ptd, Ed., p. 94.

सूनोः - புத்ரனுடைய, वीक्षणतः - கான்கையினின்றும், तृप्ता- த்ருப்தியுடைய, सा - விஜயமஹாதேவி, तं - அவளை, क्षोणीशं - பூமிக்கு ராஜாவாக, इयेष - எண்ணினாள், (तथाहि) अभीप्स्या - மேலும் விரும்புவது, लाभंलाभम् - பெற்று, பெற்று कदाचन - ஒருக்காலும், तृप्तिः - திருப்தியானது, नहि - இல்லையன்றோ. 55

**பொருள் :** - தனது மகனைக் கண்டவுடன் அவன் அரசனாக வேண்டும் என்று விரும்பினாள். ஒரு பொருளை அடைந்தவுடன் அது தொடர்பான மற்றொரு பொருளை அடையவேண்டும் என்ற ஆவல் எல்லோருக்கும் ஏற்படும். இது போதும் என்ற எண்ணம் எவருக்கும் ஏற்படாது.

कच्चित् पदं ते स्यादङ्ग पुत्रेत्यचोदयत् ।
सामग्रीविकलं कार्यं न हि लोके विलोकितम् ॥ 56

अङ्ग पुत्र - வாராய் புத்ரனே, ते - உன்னுடைய, पितुः - தகப்பனுடைய, पदम् - ராஜ்யமானது, स्यात्कच्चित् - ஆகக் கடவதன்றோ, इति - என்று, अचोदयत् - சொன்னாள், (तथाहि) सामग्रीविकलम् - சாமக்ரீயில்லாத, कार्यं - கார்யமானது, लोके- லோகத்திலே, विलोक्तिम् - காணப்பட்டது, नहि - இல்லையன்றோ. 56

**பொருள் :** - "மகனே நீ நிச்சயமாக ஒரு காலத்தில் உன் தந்தையின் பதவியை அடைவாய்" என்று அவள் தன் மகனை ஊக்கப்படுத்தினாள். ஒரு செயலை செய்வதற்கான கருவிகள் இல்லாதபோது அச்செயல் செய்து முடிக்கக் கூடியதாக எவரும் எண்ணமாட்டார்.

अम्ब किं बत खेदेन बादं स्यादिति सोऽभ्यधात् ।
मुग्धेष्वतिविदग्धानां युक्तं हि बलकीर्तनम् ॥ 57

अम्ब - வாராய்த்தாயே, बत - கெட்ட கெட்ட, खेदेन - துக்கத்தினாலே, बाढं - த்ருடமானது, स्यात् - ஆகக்கடவது, किं - என்ன, इति - என்று, सः - அவன், अम्यधात् - சொன்னான், (तथा) अतिविदग्धानां - மிகவும் சாமர்த்தியவான் களுடைய, बलकीर्तनम् - பலத்தைச் சொல்லுகிறது, मुग्धेषु - மூடரிடங்களிலே, युक्तं हि - யோக்யமன்றோ. 57

*பொருள் : - "தாயே துயர்படுவதால் என்ன பயன் ? நீ கூறியபடியே ஆகட்டும்" என்று ஜீவந்தரன் அவளைப் பார்த்துக் கூறினான். அறியாமையில் மூழ்கிக்கிடப்பவர் களிடத்தில் நம்பிக்கை ஊட்டுவது அறிவாளிகளின் செயலன்றோ ?*

पुत्रवाक्येन हस्तस्थां मेने माता च मेदिनीम् ।
मुग्धाः श्रुतविनिश्चेया न हि युक्तिवितर्किणः ॥ 58

माता च - தாயும், पुत्रवाक्येन - புத்ரனுடைய வசனத்தினாலே, मेदिनीम् - பூமியை, हस्तस्थां - கையிலே வந்ததாக, मेने - எண்ணினாள், (तथाहि) मुग्धाः - மூடர்கள், श्रुतविनिश्चेयाः - வசனத்தைக் கேட்டவுடனே நிச்சயம் பண்ணுவார்கள், युक्तिवितर्किणः - யோக்யத்தை விசாரிக்கிறவர்கள், नहि - இல்லையன்றோ. 58

*பொருள் : - அவனது சொல்லைக் கேட்ட அந்த தாயும் புவி முழுவதையும் தன் வயப்பட்டதாக எண்ணினாள். அறிவாளிகள் நம்பிக்கையான சொற்களைக் கேட்ட வுடனேயே அவர்கள் விரும்பிய பொருளை அடைந்து விட்டதாக எண்ணுவர். அவர்கள் எண்ணிய செயல் முடிக்கும் வழியை யோசிப்பதில்லை.*

अपायस्थानमस्तोकं दूरक्षं व्याहरद्विभोः ।
अमित्रो हि कलत्रं च क्षत्रियाणां किमन्यतः ॥ 59

अस्तोकं - பகுவான, अपायस्थानम् - அபாயஸ்தானத்தை, विभोः - ப்ரபுவான ஜீவந்தரனுக்கு, दूरक्षं - ரக்ஷிக்கிறதற்கு அரிதென்று, व्याहरत् - சொன்னான், (तथाहि) क्षत्रियाणां - ராஜாக்களுக்கு, कलत्र च ஸ்திரியும், अमित्रो हि - சத்ருவன்றோ, अन्यतः - மற்றொரு பிறகாரத்தினின்றும், किं - என்ன. 59

**பொருள் : - காப்பாற்றுவதற்கு கடினமான, விபத்து நேரக்கூடிய இடங்களைப் பற்றியும், அதற்கான சந்தர்ப்பங் களைப் பற்றியும் அவள் அவனுக்கு எடுத்துரைத்தாள். அரசர்களுக்கு மனைவிகூட ஒரு சில நேரங்களில் எதிரியாகி விடுகிறாள்.**

कर्तव्यं च ततो मात्रा मन्त्रितं तेन मन्त्रिणाम् ।
विचार्यैवेतरैः कार्यं कार्यं *स्याकार्यवेदिभिः ॥ 60

ततः - பிற்பாடு, मात्रा - தாயினாலே, कर्तव्यं च - விசாரிக்கிறதும், तेन मन्त्रिणा - அந்த ஜீவந்தரனோட, मन्त्रितं - ரஹஸ்யமாகச் சொல்லப்படுது, (तथाहि) कार्यवेदिभिः - கார்யத்தை அறிந்தவர்களான, इतरैः - அன்யர்களோடே, कार्यं - கார்யத்தை, विचार्यैव - விசாரித்தே, कार्यं - பண்ணப்படுமது, स्यात् - ஆகக்கடவதன்றோ. 60

**பொருள் : - அறிவு மிகுந்த அந்த ஜீவந்தரன் அதற்குப் பிறகு செய்யவேண்டிய செயல்களை தனது தாயிடம் எடுத்துரைத்தான். இந்தச் செயலை இவ்வாறு தான் செய்ய**

வேண்டும் என்று அறிந்தவர்கள் ஆராய்ந்து செய்யும் செயல், மற்றவர்களால் இது தான் சரியான செயல் என்று ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

प्राहिणोत्प्रसवित्रीं तां मातुलोपान्तिके कृती ।
न हि मातुः सजीवेन सोढव्या स्यादुरासिका ॥ 61

प्रसवीत्रीं - பெற்றதாயான, तां - விஜயமஹாதேவியை, कृती- புண்யவானான ஜீவந்தரன், मातुलोपान्तिके- மாமனுடைய சமீபத்திலே, प्राहिणोत् - அனுப்பினான், (तथाहि) सजीवेन - ஜீவனோடு கூடியிருக்கிறவனால், मातुः - தாயினுடைய, दुरासिका - துக்கமானது, सोढव्या - சஹிக்கப்படுமது, स्यात् - ஆகக்கடவது, नहि - இல்லையன்றோ. 61

பொருள் : - செயல் முடிக்கும் திறமைப் படைத்த ஜீவந்தரன் தனது தாயை தாய்மாமன் வீட்டிற்கு அனுப்பி வைத்தான். உயிரோடு இருப்பவன் தாய்படும் துயரைக் கண்டு சகித்துக்கொள்ள மாட்டான்.

ततः सपरितोषोऽयं परिव्राजकपार्श्वतः ।
निकषा स्वपुरं प्राप्य तदारामे निषण्णवान् ॥ 62

ततः - பிற்பாடு, सपरितोषः - சந்தோஷத்தோடு கூடி இருக்கிற, अयं - ஜீவந்தரன், परिव्राजाकपार्श्वतः - தாபஸருடைய சமீபத்தினின்றும், निकषा स्वपुरं - தன்னுடைய பட்டணத்தினுடைய சமீபத்தை, प्राप्य - அடைந்து, तदा - அப்பொழுது, आरामे - உத்யானவனத்திலே, निषण्णवान् - இருந்தான்.62

பொருள் : - பிறகு ஜீவந்தரன் மிகமகிழ்ச்சி அடைந்து தன் தாயை விட்டுப் பிரிந்து தன் நகரை அடைந்து அங்கு ஓய்வெடுத்துக்கொண்டான்.

तत्र मित्रण्यवस्थाप्य व्यहरत्परितः पुरीम् ।
विशृङ्गला न हि क्वापि तिष्टन्तीन्द्रियदन्तिनः ॥ 63

तत्र - அவ்விடத்திலே, मित्राणि - மித்ரர்களை, अवस्थाप्य- ஸ்தாபித்து, पुरीं - பட்டணத்தை, परितः - சூழ, व्यहरत् - விஹரித்தான், (तथाहि) विशृङ्गला - தடையில்லாமலிருக்கிற, इन्द्रियदन्तिनः - இந்திரயங்கள் ஆகிய யானைகள், क्वापि - எங்கேயும், तिष्टन्ति - இராநின்றார்கள், नहि - இல்லையன்றோ. 63

பொருள் : - பிறகு அங்கு நண்பர்களை இருத்திவிட்டு நகரைசுற்றி வந்தான். அவனது ஐம்புலன்களும் கட்டடப்படாத யானைகள் போல அலைந்து திரிந்தன.

ततो राजपुरीं वीक्ष्य सुतरामतृपत्सुधीः ।
ममत्वधीकृतो योगः सविशेषो हि देहिनाम् ॥ 64

ततः - பிற்பாடு, राजपुरीं - ராஜபுரியை, वीक्ष्य - பார்த்து, सुधीः - புத்திமானான ஜீவந்தரன், सुतराम् - மிகவும், अतृपत् - சந்தோஷித்தான், (तथाहि) ममत्वधीकृतः - மமத்வ புத்தியினால் பண்ணப்பட்ட, मोहः - மோஹமானது, देहिनां- ஜீவன்களுக்கு, सविशेषो हि - சவிஷேஷத்தோடேகூடினதன்றோ. 64

பொருள் : - பிறகு தலைநகரைக் கண்டு அறிவாளி ஜீவந்தரன் மிக மகிழ்ச்சி அடைந்தான். ஒரு பொருள் தன்னுடையது என்ற எண்ணத்தினால் ஏற்படும் மயக்கம் எல்லாவுயிர்களுக்கும் ஏற்படும் அன்றோ.

क्रीडन्ती कापि हर्म्याग्रात्पातयामास कन्दुकम् ।
संपदायापदां चाप्तिर्व्याजेनैव हि केनचित् ॥ 65

क्रीडन्ती - பந்தடித்து விளையாடுகிற, कापि - ஒருத்தி, हर्म्याग्रात् - உப்பரிகையினுடைய மேல் நின்றும், कन्दुकम् - பந்தை, पातयामास - விழப்படுத்தினாள், (तथाहि) संपदां - சம்பத்துக்களுடையவும், आपदाश्च - ஆபத்துக்களுடையவும், आप्तिः - பிராப்தியானது, केनचित् व्याजेनैव हि- ஒரு வ்யாஜத்தினாலேயே அன்றோ. 65

பொருள் : - அப்போது மாளிகையின் மீது பந்தை வைத்துக்கொண்டு விளையாடும் ஒரு பெண் அந்தப் பந்தை கீழே வீசினாள். நன்மைக்கும், தீமைக்கும் காரணமாக விளங்குவது தற்செயலாக நடக்கும் ஒரு நிகழ்ச்சியாகும்.

उद्वक्त्रस्तद्धर्तीं सूत्यां दृष्ट्वामुह्यदबाह्यधीः ।
वशीनां हि मनोवृत्तिः स्थान एव हि जायते ॥ 66

अबाह्यधीः - பாஹ்யபுத்தியில்லாத, उद्वक्त्रः - மேல்முகனான ஜீவந்தரன், सूत्यां - பாக்யவதியானவள், तद्धर्तीं - பந்தாடிவிடப்பட்ட புத்ரியைக் கண்டு, अमुह्यत् - மோஹித்தான், (तथाहि) वशीनां - ஜீதேந்திரியர்களுக்கு, मनोवृत्तिः - மனோவர்த்தனையானது, स्थान एव - ஸ்தானத்திலேயே, जायते हि - உண்டாகாநின்றதன்றோ.

பொருள் : - தன்னை நன்கு அறிந்த நேர்மையான ஜீவந்தரன் அந்த பந்து விளையாடிய பெண்ணைக் கண்டு மனம் பறிகொடுத்தான். மனதைக் கட்டுப்படுத்தியவர்களுடைய மனம் சரியான இடத்தில்தான் சென்று ஈடுபடுகிறது.

तन्मोहादयमध्यास्त तत्सौधाग्रवितर्दिकाम् ।
अञ्जसा कृतपुण्यानां न हि वाञ्छापि वञ्जिता ॥ 67

तन्मोहात् - அவளுடைய மோஹத்தினின்றும், अयं - இவள், तत्सौधाग्रवितर्दिकाम् - உப்பரிகைக்கு முன் இருக்கிற திண்ணையில், अध्यास्त - இருந்தான், (तथा) अञ्जसा - நிச்சயத்தினாலே, कृतपुण्यानां - பண்ணப்பட்ட புண்ணியத்தை உடைத்தானவர்களுக்கு, वाञ्छापि - வாஞ்சிக்கப்பட்டதும், वञ्चिता - வஞ்சிக்கப்பட்டது, नहि - இல்லையன்றோ. 67

பொருள் : - அவள்மீது கொண்ட ஈடுபாட்டின் காரணமாக ஜீவந்தரன் அந்த மாளிகையின் முன்பக்கமிருக்கும் திண்ணையில் சென்று அமர்ந்தான். நற்செயல் புரிந்தோர்க்கு அவர்கள் விரும்பிய பொருட்கள் கிடைக்காமல் இருந்தது இல்லை.

वैश्येशः कोऽपि तं पश्यन्व्याजह्रे विकसन्मुखः ।
चिरकाङ्क्षितसंप्राप्त्या प्रसीदन्ति हि देहिनः ॥ 68

वैश्येशः - வைச்யமுக்யனான, कोऽपि - ஒருத்தன், तं - ஜீவந்தரனை, पश्यन् - பாராநின்றவனாய்க்கொண்டு, विकसन्मुखः - விகசிதமான முகத்தையுடையவன், व्याजह्रे - சொன்னான், (तथा) चिरकाङ्क्षितसंप्राप्त्या - பகுகாலம் வாஞ்சிக்கப்பட்ட வஸ்துவை அடைந்ததினாலே, देहिनः - ஜீவன்கள், प्रसीदन्ति हि - சந்தோஷமாகாநின்றார்களன்றோ.

*பொருள் : - வணிகரில் சிறந்த ஒருவன் அவனைக் கண்டதும் மிக மகிழ்ச்சியடைந்தான். முகமலர்ச்சியுடன் அவனை அழைத்தான். கிடைத்தற்கரிய பொருள் கிட்டினால் உயிரினங்கள் மகிழ்கின்றன.*

भद्र सागरदत्तोऽहं भवत्येष ममालयः ।
विमलाकमलोद्भूता सुता सूत्या च साऽभवत् ॥ 69

भद्रः - வாராய் பூஜ்யனே, अहं- நான், सागरतदत्तः - சாகரதத்தனானவன், एषः - இது, मम - என்னுடைய, आलय - மனையானது, भवति - ஆகாநின்றது, कमलोद्भूता - கமலைக்குப் பிறந்தவளான, विमला - விமலை என்று பேரையுடைய, सुता - புத்ரியானவள், सा - அவள், सूत्या - யௌவன வயதையுடையவளும், अभवत् - ஆனாள். 69

*பொருள் : - மங்களகரமானவனே ! நான் சாகரதத்தன். இது எனது இல்லம். கமலா என்ற என் மனைவிக்கு பிறந்த இந்த யுவதி என் மகள். இவள் பெயர் விமலா.*

रत्नजालमविक्रीतं विक्रीयेत यदागमे ।
भाविज्ञास्तं पतिं तस्याः समुत्पत्तावजीगणन् ॥ 70

यदागमे - யாதொருத்தனுடைய வரவிலே, अविक्रितं - விற்கப்படாமல் இருக்கிற, रत्नजालमपि - ரத்னசமூகமும், विक्रीयेत - விலையாகக்கடவது, तं - அவனை, तस्याः - அவளுக்கு, पतिम् - புருஷனாக, भाविज्ञाः - நிமித்தக்ஞர்கள், समुत्पत्तौ - உத்பத்தியான காலத்திலே, अजीगणन् - கணித்தார்கள்.

பொருள் : - யாருடைய வரவால் விற்கப்படாமல் இருக்கும் எல்லாவிதமான விலை உயர்ந்த ரத்தினக் கற்களும் விற்பனையாகி விடுகின்றனவோ, அவனே உன் மகளுக்கு கணவனாக ஆவான் என்று அவள் பிறக்கும்போதே நிமித்தகர்கள் கூறியுள்ளார்கள்.

भवत्यत्र प्रविष्टे च दृष्टमेतदलं परैः ।
भाग्याधिक भवानेव योग्यः परिणयेदिति ॥ 71

अत्र - இவ்விடத்திலே, भवति - நீ, प्रविष्टे च - ப்ரவேசித்துள்ளளவிலும், एतत् - த்ரவ்யவிலையானது, दृष्टम्- காணப்பட்டது, परैः - அன்யங்களினாலே, अलं - அமையும், भाग्यधिक भवानेव - பாக்யத்திலே அதிகனான நீயே, योग्यः - யோக்யனானவன், परिणयेत् - விவாஹம் பண்ணக் கடவது, इति -என்று.

பொருள் : - தாங்கள் இங்கு நுழைந்தவுடன் இந்த நிகழ்ச்சி (விலை போகாமல் இருந்த கற்கள் விலை போனது) பிறரால் பார்க்கப்பட்டது. நற்பேறு பெற்ற தாங்களே அவளை திருமணம் செய்து கொள்வதற்கு ஏற்றவர்.

तन्निर्बन्धादयं चाभूदनुमन्ता तथा विधौ ।
वाञ्छितार्थेऽपि कातर्यं वशिनां न हि दृश्यते ॥ 72

तन्निबन्धनात् - சாகரதத்த செட்டியினுடைய நிபந்தத்தினின்றும், अयञ्च - ஜீவந்தரன், तथाविधौ - கல்யாணம் பண்ணுகிற விதியிலே, अनुमन्ता - சம்மதியானவன், अभूत् - ஆனான், (तथाहि) वशिनां- ஜிதேந்தியர்களுக்கு, वाञ्छितार्थेऽपि - வாஞ்சிதார்த் தத்திலேயும், कातर्यं - அச்சம், दृश्यते - காணப்படாநின்றது, नहि - இல்லையன்றோ. 72

பொருள் : - அவனுடைய கட்டாயத்தின் பேரில் ஜீவந்தரனும் அந்த திருமணத்திற்கு ஒப்புதல் அளித்தான். விரும்பிய பொருட்களை அடைவதில் ஒரு விதமான அச்சம் புலன்களை அடக்கியவர்கள் இடத்தில் காணப்படுவ தில்லை.

अथ सागरदत्तेन दत्तां सत्यंधरात्मजः ।
व्यवहद्विमलां कन्यां हव्यवाहसमक्षकम् ॥ 73

अथ - பிற்பாடு, सागरदत्तेन - சாகரதத்தனாலே, दत्ता - கொடுக்கப்பட்டிருப்பாளாய், विमला - விமலை என்று பேரையுடைய, कन्यां - கன்யகையை, सत्यंधरात्मजः - ஜீவந்தரன், हव्यवाहसमक्षकम् - ஹோமசாக்ஷியாக, व्यवहरत् - விவாஹம் பண்ணினான். 73

इति श्रीमद्वादीभसिंहसूरिविरचितेक्षत्रचूडामणौ
विमलालम्भो नामाष्टमो लम्भः ॥

பொருள் : - பிறகு சாகரதத்தனால் வழங்கப்பட்ட விமலா என்ற கன்னிகையை சத்யந்தரனின் மகன் ஜீவந்தரன் அக்னியின் முன்னிலையில் திருமணம் செய்து கொண்டான்.

விமலா லம்பம் முற்றிற்று



# नवमो लम्भः

## सुरमञ्जरीलम्भः

## ஸுரமஞ்ஜரீலம்பம்

अथ व्यूढामतिस्निग्धां गाढस्नेहोऽन्वभूदिमाम् ।
वाञ्छिता यदि वाञ्छेयुः ससारैव हि संसृतिः ॥ 1

अथ - பிற்பாடு, व्यूढाः - விவாஹம் பண்ணப்பட்ட, अतिस्निग्धां - பகுஸ்னேஹிதையான, इमां - இவளை, गाढस्नेहः- பகுஸ்னேகத்தை உடையவன், अन्वभूत् - அனுபவித்தான், (तथाहि) वाञ्चिताः - வாஞ்சிக்கிறவர்கள், वाञ्छेयुः - அன்யராலே பாதிக்கப்பட்டார்கள், यदि - ஆகில், संस्सृतिः - சம்சாரமானது, ससारैव हि - சாரத்தோடு கூடினதன்றோ. 1

***பொருள் :*** - பிறகு தன்னிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்த விமலாவைத் திருமணம் செய்துகொண்ட ஜீவந்தரன் அவளிடம் மிகுந்த அன்பு பாராட்டினான். தன்னால் விரும்பப்படுபவர்கள் தன்னை விரும்பினால் வாழ்க்கை மிகுந்த இன்பத்தைத் தரக்கூடியதன்றோ.

ततोऽनुनीय तां हित्वा स मित्रैः समगच्छत ।
अन्यरोधि न हि क्वापि वर्तते वशिनां मनः ॥ 2

ततः - பிற்பாடு, तां - அவளை, अनुनीय - சம்மதிபண்ணி, हित्वा - விட்டு, सः - ஜீவந்தரன், मित्रैः - மித்ரர்களோட, समगच्छत - வந்தான், (तथाहि) वशिनां - ஜிதேந்திரியர்களுடைய, मनः - மனஸானது, क्वापि - எங்கேயும், अन्यरोधि - அன்யராலே தடையாக வந்த வர்த்தியாநின்றது, नहि - இல்லையன்றோ. 2

பொருள் : - அவளிடம் விடைபெற்று ஜீவந்தரன் தனது நண்பர்களுடன் அங்கிருந்து புறப்பட்டான். புலன்களைக் கட்டுப்படுத்தியவர்களின் மணங்கள் எங்கும் எப்போதும் பிறரால் மாற்றப்பட முடியாதது.

वरचिह्नं तमालोक्य बहुमन्यन्त बान्धवाः ।
ऐहिकातिशयप्रीतिरतिमात्रा हि देहिनाम् ॥ 3

वरचिन्हं - மாப்பிள்ளைக்குள்ள அடையாளமான, तं - ஜீவந்தரனை, आलोक्य - பார்த்து, बान्धवाः - பந்துக்கள், बहुमन्यत - பகுவாயெண்ணினார்கள், (तथाहि) देहिनां - ஜீவன்களுக்கு, ऐहिकातिशयप्रीतिः - இஹலோக சம்மந்தமான அதிசய ப்ரீதியானது, अतिमात्रा हि - மிகுதியுமன்றோ. 3

பொருள் : - மருமகனுக்கு இருக்கக்கூடிய அடையாளங்கள் யாவும் ஜீவந்தரனிடம் இருப்பதைக் கண்டு உறவினர்கள் அவனிடம் மிகுந்த மதிப்பு வைத்தார்கள். மனிதர்களுக்கு இந்த உலகத்தில் உள்ள பொருட்கள் மீதுள்ள பற்று மிக அதிகமாக இருக்குமன்றோ.

अब्रवीदस्य सोत्प्रासं बुद्धिषेणो विदूषकः ।
बहुद्वारा हि जीवानां पराराधनदीनता ॥ 4

अस्य - ஜீவந்தரனுக்கு, विदूषकः - விதூஷகனான, बुद्धिषेणः - புத்திஷேணனானவன், सोत्प्रासं - பரிஹாஸத்தோடு கூடின வசனத்தை, अब्रवीत् - சொன்னான், (तथाहि) जीवानां - ஜீவன்களுக்கு, पराराधनदीनता - பராராதையினாலே உண்டான தீனத்வமானது, बहुद्वारा हि - நாநாபிரகார வழியன்றோ. 4

பொருள் : - அப்போது புத்திஸேனன் என்ற அவனது உயிர் நண்பன் அவனிடம் விளையாட்டாக ஒரு செய்தியைக் கூறினான். பிறரை மகிழ்விப்பதற்கு மனிதர்களுக்கு பல வழிகள் இருக்கின்றன.

सुलभाः खलु दौर्भाग्यादन्योपेक्षितकन्यकाः ।
व्यूढायां सुरमञ्जर्यां पौरोभाग्यं भवेदिति ॥ 5

दौर्भाग्यात् - பாக்யமில்லாதத்தினின்றும், अन्योपेक्षित-कन्यकाः - அன்யராலே உபேக்ஷிக்கப்பட்ட கன்யகைகள், सुलभाः खलु - சுலபர்கள் அன்றோ, सुरमञ्जर्यां - சுரமஞ்சரியானவள், व्यूढायां - விவாஹம் பண்ணப் பட்டுள்ளளவில், पौरोभाग्यं - பூர்வபவத்திலே பண்ணின பாக்யமானது, भवेत् - ஆகக்கடவது, इति - என்று. 5

பொருள் : - பிறரால் வேண்டப்படாத பெண்கள் தீவினையின் பயனாக மிக எளிதாகக் கிட்டுவார்கள். உனது முற்பிறவியில் செய்த நல்வினைப்பயன் சுரமஞ்சரியை திருமணம் செய்வதில் இருக்கிறது.

तद्वाक्यादयमुद्वोढुमवाञ्छीत्तां च मानिनीम् ।
हेतुच्छलोपलम्भेन जृम्भते हि दुराग्रहः ॥ 6

तद्वाक्यात् - புத்திஷேனனுடைய வசனத்தினின்றும், अयं - ஜீவந்தரன், मानिनीम् - பூஜ்யனான, तां च - சுரமஞ்ஜரியையும், उद्वोढुम् - விவாஹம் பண்ணுகிறதற்கும், अवाञ्छीत् - வாஞ்சித்தான், (तथाहि) हेतुच्छलोपलम्भेन - காரணமான வ்யாஜோபலம்பத்தினாலே, दुराग्रहः - ஆக்ரஹமானது, जृम्भते हि - வர்த்தியாநின்றதன்றோ. 6

பொருள் : - புத்திஸேனனுடைய சொல்லைக் கேட்டு ஜீவந்தரன் திருமணம் செய்ய விரும்பினான். ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டே பிறரை தன் வயப்படுத்துவது நிகழ்கின்றது.

तत्राप्यौपयिकं भूयो यक्षमन्त्रं व्यचीचरत् ।
अनपायादुपायाद्धि वाञ्छितास्तिर्मनीषिणः ॥ 7

तत्रापि - அதிலேயும், औपयिकम् - உபாயபூதமான, यक्षमन्त्रं - யக்ஷனுடைய மந்திரத்தை, भूयः - மிகவும், व्यचीचरत्- சிந்தித்தான், (तथाहि) मनीषिणाम् - புத்திமான்களுக்கு, वाञ्छितास्तिः - வாஞ்சித்ததை அடைகிறது, अनपायात् - அபாயமில்லாத, उपायाद्धि - உபாயத்தினின்றுமன்றோ. 7

பொருள் : - அப்போது ஜீவந்தரன் தனக்கு யட்சனால் அளிக்கப்பட்ட எந்திரத்தை மனதால் நினைத்தான். அறிவாளிகள் விரும்பிய பொருளை அடைய ஆபத்து இல்லாத வழிகளை மேற்கொள்கிறார்கள்.

वार्धकं तत्र चोपायमुपायज्ञोऽयमौहत ।
करुणामात्रपात्रं हि बाला वृद्धाश्च देहिनाम् ॥ 8

उपायज्ञः - உபாயத்தையறிந்த, अयं - ஜீவந்தரன், तत्र च- அதிலேயும், उपायम् - உபாயமான, वार्धकम् - வ்ருத்தாப்யத்தை, ऊहत - ஊஹித்தான், (तथाहि) देहिनाम् - ஜீவன்களுக்கு, बालाः - பாலர்களும், वृद्धाश्च - விருத்தர்களும், करुणामात्रपात्रं हि - கருணாமாத்ர பாத்ரமன்றோ. 8

***பொருள் :*** *- சரியான வழியை தெரிந்துகொண்ட அவன் தனக்கு கிழத்தனத்தை அந்த மந்திரத்தால் வேண்டினான். குழந்தைத்தன்மையும் கிழத்தன்மையும் மனிதர்களால் கருணையுடன் பார்க்கப்படுவது அல்லவா.*

वार्धकं तत्क्षणे चास्य मनुमाहात्म्यतोऽभवत् ।
अनवद्या सती विद्या फलमूकापि किं भवेत् ॥ 9

तत् क्षणे च - அந்த க்ஷணத்திலேயும், अस्य - ஜீவந்தரன், वार्धकं - விருத்தாப்யமானது, मनुमाहात्म्यतः - மந்தர மாஹாத்மியத்திநின்றும், अभवत् - ஆச்சுது, अनवद्या - தோஷமல்லாத, सती - ப்ரஸஸ்தமான, विद्या - வித்தையானது, फलमूकापि - பலமில்லாததும், किं भवेत् - ஏன் ஆகக்கடவது. 9

***பொருள்:*** *- அந்த மந்திரத்தின் மகிமையால் அக்கணமே அவனுக்கு மூப்பு ஏற்பட்டது. கல்வி என்பது அப்பழுக்கற்றது. அது பயனைத் தராமல் இருக்குமா!*

विजहार पुनश्चायं वर्षीयान्परितः पुरीम् ।
अन्यैरशङ्कनीया हि वृत्तिर्नीतिज्ञगोचरा ॥ 10

पुनश्च - பிற்பாடும், वर्षीयान् - விருத்யவேஷமான, अयं- ஜீவந்தரன், पुरीं - பட்டணத்தை, परितः - சூழ, विजहार - விஹரித்தான், (तथाहि) नीतिज्ञगोचरा - நீதியை அறிந்தபேர்களுக்கு விஷயமான, वृत्तिः - வர்த்தனையானது, अन्यैः - அன்யர் களினாலே, अशङ्कनीया हि - சங்கையில்லாததன்றோ.

***பொருள் :*** *- முதுமை கொண்டவனாக அவன் நகரைச் சுற்றி வந்தான். முதுமைப் பருவம் என்பது மற்றவர்கள் ஐயப்படாத ஒரு பருவம் என்று நீதி அறிந்தவர்கள் கூறுகிறார்கள்.*

प्रवयो विप्रवेषं तं वीक्षमाणा विवेकिनः ।
विषयेषु व्यरज्यन्त बार्धकं हि विरक्तये ॥ 11

प्रवयः - விருத்த வயதையுடைய, विप्रवेषम् - பிராம்மண வேஷமானது, तं - ஜீவந்தரனை, वीक्षमाणाः - பாரா நின்றிருக்கிற, विवेकिनः - விவேகிகள், विषयेषु - விஷயங்களிலே, व्यरज्यन्त - வெறுத்தார்கள், (तथाहि) बार्धकं - வ்ருத்தாப்யம், विरक्तये हि - விரக்தியின் பொருட்டன்றோ. 11

*பொருள் : - மூப்படைந்த அந்தண வேடத்தில் இருந்த ஜீவந்தரனைக் கண்ட அறிவாளிகள், உலகப் பொருட்களின் மீதுள்ள ஈடுபாட்டை விடுத்தார்கள். ஏனெனில் முதுமை என்பது வெறுத்தலை அடையாளமாகக் கொண்டது.*

मक्षिकापक्षतोऽप्यच्छे मांसाच्छांदनचर्मणि ।
लावण्यं भ्रान्तिरित्येतन्मूढेभ्यो वक्ति वार्धकम् ॥ 12

मक्षिकापक्षतोऽपि - ஈயின் இரக்கையினின்றும், अच्छे - கொஞ்சமான, मांसाछादनचर्मणि - மாம்சத்தினாலே மறைக்கப்பட்ட சர்மத்திலே, लावण्यभ्रान्तिः - அழகென்றும் மயங்கிற ப்ரமையானது, इति - என்று, एतत् - இதை, मूढेभ्यः - மூடர்கள் பொருட்டு, वार्धकम् - விருத்தாப்யமானது, वक्ति - சொல்லாநின்றது. 12

*பொருள் : - அழகு என்பது ஒரு மயக்கம். அது மாம்சத்தை மூடி இருக்கிற தோலில் காணப்படுகிறது. அது ஈயின் (ஈசல்) இறகைக் காட்டிலும் நிலையற்றது, என்று முதுமைப்பருவம் மூடர்களுக்கு கூறுகிறது.*

प्रतिक्षणाविनाशीदमायुः कायमहो जडाः ।
नैव बुध्यामहे किन्तु कालमेव क्षयात्मकम् ॥ 13

प्रतिक्षणविनाशी - சமயந்தோறும் விநாசமான, इदं - இந்த, आयुः - ஆயுஷ்யத்தையும், कायं - சரீரத்தையும், जडाः- அறிவில்லாத, बुध्यामहे - அறிந்தோம், नैव - இல்லையே, अहो- ஆச்சரியம், किन्तु - விசேஷமுண்டு, कालमेव - காலமானதுமே, क्षयात्मकम् - க்ஷயஸ்வரூபமானது. 13

*பொருள் : - ஓ ! அறிவிலிகளே ! இந்த ஆயுளும் உடலும் ஒவ்வொரு கணத்திலும் அழியக் கூடியது. இதை நாம் உணரவே இல்லை. காலம் குறைந்து கொண்டே போகிறது.*

हन्त लोको वयस्यन्ते किमन्यैरपि मातरम् ।
मन्यते न तृणायापि मृतिः श्लाघ्य हि वार्धकात् ॥ 14

लोकः - ஜனமானது, अन्ते वयसि - அன்த்யவயதிலே, मातरं - தாயை, तृणायापि - புல்லின் பொருட்டும், न मन्यते - எண்ணாநின்றாதில்லை, अन्यै पि - அன்யங்களினாலேயும், किं - என்ன, (तथा) वार्धकात् - விருத்தாப்யத்தினின்றும், मृतिः- மரணமானது, श्लाघ्या हि - பூஜ்யமன்றோ. 14

*பொருள் : - தள்ளாத வயதில் தனது தாயை புல்லுக்குச் சமமாகக்கூட இவ்வுலகம் மதிப்பதில்லை. மற்றவைகளைப் பற்றி என்ன சொல்ல. மூப்பைக் காட்டிலும் மரணம் போற்றத்தக்கது.*

इत्याद्यूहं च हास्यं च जनयन्प्राज्ञबालयोः ।
अगारं सुरमञ्जर्या वर्षीयान्पुनरासदत् ॥ 15

इत्याद्यूहं च - இது முதலான ஊஹத்தையும், हासञ्च - பரிஹாஸத்தையும், प्राज्ञबालयोः - ஞானவான்களுக்கும், பாலகர்களுக்கும், जनयन् - ஜனிப்பியா நின்றவனாய்க் கொண்டு, सुरमञ्जर्याः - சுரமஞ்சரியினுடைய, अगारम् - மனையை, वर्षीयान् - விருத்தனானவன், पुनः - பிற்பாடு, आसदत् - அடைந்தான். 15

பொருள் : - இவ்வாறு ஊஹித்து அறியக்கூடிய செய்திகளையும் நகைச்சுவையை ஏற்படுத்தக் கூடிய சொற்களையும், அறிஞர்களிடத்திலும், சிறுவர்களிடத்திலும் கூறிக்கொண்டு, ஸுரமஞ்ஜரியினுடைய வீட்டை மூப்படைந்த ஜீவந்தரன் சென்றடைந்தான்.

*पृष्टो दौवारिकस्त्रीभिराचष्ट फलमागतेः ।
[1]कुमारी तीर्थमात्मार्थं न ह्यसत्यं सतां वचः ॥ 16

दौवारिकस्त्रीभिः - துவாரபாலக ஸ்திரியர்களினாலே, पृष्टः - கேட்கப்பட்டிருக்கிற ஜீவந்தரன், आगतेः - தான் வந்ததற்கு, फलं - பலமான, आत्मार्थम् - தனக்கு ப்ரயோஜமான, कुमारीतीर्थं - கன்யா தீர்த்தத்தை, आचष्ट - சொன்னான், (तथा)

---

* வந்தவர வென்னையென வாட்கண்மட வாய்கேள்
சிந்தைநலி கின்றதிரு நீர்க்குமரி யாட
வந்திலத னாயபய னென்னைமொழி யென்றாள்
முந்திநலி கின்றமுது மூப்பொழியு மென்றான். (சீவகசிந்தாமணி)

1. குமாரிதீர்த்தம் என்ற சொல் இரட்டுற மொழிதலின் வாயிலாக இரண்டுவிதமாக பொருள் கூறப்படுகிறது.
1) மேற்கூறிய விதத்தில் - இதுவே ஜீவந்தரன் உணர்த்திய கருத்தாகும்.
2) கன்னிப்பெண்ணிடம் இருந்து தீர்த்தம் - விருந்தோம்பலை ஏற்றுக்கொள்ள விரும்புகிறேன்-இது வாயிற்காக்கும் பெண்டிர் உணர்ந்த கருத்து. ஆதலால்தான் அவர்கள் முதியவன் உருவத்தில் இருக்கும் ஜீவந்தரனை மாளிகையின் உள்ளே அனுமதிக்கின்றனர்.

सतां - சத்புருஷர்களுடைய, वचः - வசனமானது, असत्यं - பொய்யானது, नहि - இல்லையன்றோ. 16

பொருள் : - அங்கு வாயில் காக்கும் பெண்களால் விசாரிக்கப்பட்ட ஜீவந்தரன் தான் கன்யாதானத்தை விரும்புவதாக கூறினான். சான்றோர்களுடைய சொற்கள் எப்போதும் பொய்யானது இல்லை.

अहसन्नथ तद्वाक्यादङ्गना अप्यसंगतात् ।
अविवेकिजनानां हि सतां वाक्यमसंगतम् ॥ 17

असंगतात् - அசங்கதமல்லாத, तद्वाक्यात् - ஜீவந்தரனுடைய வசனத்தினின்றும், अङ्गनाः अपि - ஸ்திரியர்களும், अहसन् - சிரித்தார்கள், (तथा) अविवेकिजनानां- விவேகமில்லாத ஜனங்களுக்கு, सतां - சத்புருஷர்களுடைய, वाक्यं - வசனமானது, असंगतम् हि - சங்கதமல்லாததன்றோ.17

பொருள் : - அவன் கூறிய சொற்களைக் கேட்டு அங்கிருந்த பெண்கள் (அச்சொற்கள்) அவை பொருத்த மற்றதாக இருப்பதைக் கண்டு அவனைக் கண்டு சிரித்தார்கள். பகுத்தறிவற்ற மக்களுக்கு சான்றோர்களின் சொற்கள் பொருத்தமற்றவையே.

अरुद्धः कृपया ताभिरगाहिष्ट च तद्गृहम् ।
सर्वथा दग्धबीजाभाः कुतो जीवन्ति निर्घृणाः ॥ 18

ताभिः - அந்த ஸ்திரியர்களினாலே, कृपया - க்ருபையினாலே, अरुद्धः - தடையில்லாமல் இருக்கிற ஜீவந்தரன், तत् गृहं - சுரமஞ்ஜரி க்ருஹத்தை, अगाहिष्ट च -

அடைந்தான், (तथा) सर्वथा - சர்வபிரகாரத்தினாலே, दग्धबीजाभाः - சுடப்பட்ட பீஜங்களுக்கு சமானங்களான, निर्घृणाः - தயை இல்லாதவர்கள், कुतः - எங்குநின்றும், जीवन्ति - ஜீவியாநின்றார்கள். 18

*பொருள் : - அவர்களால் தடை செய்யப்படாமல் அந்த மாளிகைக்குள் நுழைந்தான். கருணை அற்றவர்கள் வறுத்த விதைக்கு சமமானவர்கள். அவர்களால் எங்கு வசிக்க முடியும். (வாயிற் காக்கும் பெண்கள் கருணை உள்ளவர்களாக விளங்கியதால் அவர்கள் கிழவேடத்தில் இருந்த ஜீவந்தரனை மாளிகையின் உள்ளே அனுப்பினார்கள். கருணை உள்ளவர்கள் உயிர் உள்ள விதைகளுக்கு சமமானவர்கள். அவர்கள் எங்கிருந்தாலும் வாழ்வார்கள், வாழவைப்பார்கள். கருணை அற்றவர்கள் வறுத்த விதைக்கு ஒப்பானவர்கள். அவர்கள் தாங்களும் வாழாமல் பிறரையும் வாழவிட மாட்டார்கள்)*

अभ्यधुः सुरमञ्जर्याः सुन्दर्यः सभया इदम् ।
सभयस्नेहसामर्थ्याः स्वाम्यधीना हि किंकराः ॥ 19

सुरमञ्जर्याः - சுரமஞ்ஜரிக்கு, सभया - பயத்தோடு கூடின, सुन्दर्यः - ஸ்திரிகள், इदं - இதை, अभ्यधुः- சொன்னார்கள், (तथा) सभयस्नेहसामर्थ्याः - பயஸ்னேக சாமர்தியங்களோட கூடின, किंकराः -ஊழியக்காரிகள், स्वाम्यधीना हि - ஸ்வாம்ய தீனர்களன்றோ.

*பொருள் : - ஜீவந்தரன் வந்திருக்கும் செய்தியை அங்குள்ள அழகிய பெண்கள் சுரமஞ்ஜரியிடம் அச்சத்தோடு கூறினர். அச்சம், நட்பு போன்ற திறமைகளை கொண்டவர்கள் காப்பிய தலைவியின் ஊழியர்கள்.*

पुरुषद्वेषिणी सापि वर्षीयांसं न्यशामयत् ।
भवितव्यानुकूलं हि सकलं कर्म देहिनाम् ॥ 20

पुरुषद्वेषिणी - புருஷத்வேஷியான, सापि - சுரமஞ்ஜரியும், वर्षीयांसं - விருத்தனான, ஜீவந்தரனை, न्यशामयत् - கண்டாள், (तथा) देहिनाम् - ஜீவன்களுக்கு, सकलं कर्म - சமஸ்த கர்மமும், भवितव्यानुकूलं हि - வருகிறதற்கு அனுகூலமன்றோ. 20

*பொருள் : - ஆண்களை வெறுக்கும், அச்சுரமஞ்சரியும் வயது முதிர்ந்த ஜீவந்தரனைக் கண்டாள். எதிர்வரும் நன்மைகளை நிகழ்காலத்தில் நடக்கும் செயல்கள் வெளிப்படுத்துகின்றன.*

बुभुक्षितं तमालक्ष्य भोजयामास सा सती ।
अन्तस्तत्वस्य याथात्म्ये न हि वेषो नियामकः ॥ 21

बुभुक्षितं - போஜிக்கவேணுமென்று வாஞ்சையுடைய, तं -ஜீவந்தரனை, आलक्ष्य - பார்த்து, सती - ப்ரசஸ்தையான, सा - சுரமஞ்ஜரியானவள், भोजयामास - போஜிப்பித்தாள், (तथा) अन्तस्तत्वस्य - அந்த ஸ்வரூபத்தினுடைய, याथात्म्ये - யதாத்ம்யத்திலே, वेषः - வேஷமானது, नियामकः - நிச்சயமானது, नहि - இல்லையன்றோ. 21

*பொருள் : - பசியோடு இருக்கும் அவனுக்கு சுரமஞ்ஜரி உணவளித்தாள். உள்ளிருக்கும் ஆன்மாவின் தன்மையை வெளிவேஷம், கட்டுப்படுத்தாது. (அதாவது அவள் உயிருக்கு உணவளிக்கவில்லை. உடலுக்குத்தான் உணவளித்தாள் என்பது பொருள்)*

भुक्त्वाथ वार्धकेनैव सुष्वाप तलिमे कृती ।
योग्यकालप्रतीक्षा हि प्रेक्षापूर्वविधायिनः ॥ 22

अथ - பிற்பாடு, वार्धकेनैव - விருத்தாப்யத்தினாலேயே, भुक्त्वा - போஜித்து, कृती - புண்யவானான ஜீவந்தரன், तलिमे - மெத்தையிலே, सुष्वाप - நித்திரைப்பண்ணினான், (तथाहि) प्रेक्षापूर्वविधायिनः - புத்திபூர்வகமாகப் பண்ணுகிறவர்கள், योग्यकालप्रतीक्षा हि - யோக்யகாலத்தைப் பாரா நின்றார்களன்றோ.

*பொருள் : - உணவு உண்ட பிறகு எடுத்த செயல் முடித்த ஜீவந்தரன் அங்கிருந்த படுக்கையில் படுத்துத் தூங்கினான். ஆராய்ந்து செயலைச் செய்பவர்கள் அச்செயலுக்கான சரியான காலத்தை எதிர்பார்த்து காத்திருக்கின்றனர்.*

भुवनमोहनं गानमगासीदथ गानवित् ।
परस्परातिशायी हि मोहः पञ्चेन्द्रियोद्भवः ॥ 23

अथ - பிற்பாடு, गानवित् - கானத்தை இந்த ஜீவந்தரன், भुवनमोहनं - லோகத்தை மயக்குகிறதான, गानं - கீதத்தை, अगासीत् - வாஞ்சித்தான், पञ्चेन्द्रियोद्भवः - பஞ்சேந்திரியங்களினாலுண்டான, मोहः - மோஹமானது, परस्परातिशायी हि- ஒன்றுக்கொன்று அதிசயமானதன்றோ. 23

*பொருள் : - பிறகு இசையில் நுண்ணறிவுப் படைத்த ஜீவந்தரன் இவ்வுலகை மயக்கும் பாடலை அவளிடம் பாடினான். ஐம்புலன்களில் ஏற்படும் மயக்கம் ஒருவரை ஒருவர் வியக்க வைக்கக் கூடியது.*

गानकौशलतः सैनं शक्तिमन्तममन्यत ।
विशेषज्ञा हि बुध्यन्ते सदसन्तौ कुतश्चन ॥ 24

गानकौशलतः - கானகுசலத்திநின்றும், सा - சுரமஞ்ஜரி, एनं - ஜீவந்தரனை, शक्तिमन्तं - சாமர்த்தியவானாக, अमन्यत- எண்ணினாள், (तथा) विशेषज्ञाः - விசேஷக்ஞரானவர்கள், सदसन्तौ - சஜ்ஜன துர்ஜனர்களை, कुतश्चन - எங்குநின்றும், बुध्यन्ते हि - அறியாநின்றார்களன்றோ. 24

*பொருள் : - இசையில் அவனுக்கு இருந்த திறமையைக் கண்டு அவனை வலிமைப் படைத்தவனாக சுரமஞ்ஜரி எண்ணினாள். அறிவிற்சிறந்தவர்கள் நல்லவர்களையும் தீயவர்களையும் எங்கிருந்தாலும் அறிந்துகொள்வர்.*

ततः स्वकार्यमप्यस्मात्सादराभूत्परीक्षितुम् ।
स्वकार्येषु हि तात्पर्यं स्वभावादेव देहिनाम् ॥ 25

ततः - பிற்பாடு, स्वकार्यमपि - தன்னுடைய கார்யத்தையும், अस्मात् - ஜீவந்தரனிடத்திநின்றும், परीक्षितुं - பரீக்ஷிக்கிறதற்கு, सादरा - தாத்பர்யத்தோடே கூடினவளாக, अभूत् - ஆனாள், (तथा) देहिनां - ஜீவன்களுக்கு, स्वकार्येषु - தங்கள் கார்யங்களிலே, तात्पर्यम् - தாத்பர்யமானது, स्वभावादेव हि- ஸ்வபாவத்திநின்றுமன்றோ. 25

*பொருள் : - பிறகு அவள் தான் அறிந்த செயலையும் ஜீவந்தரனிடம் தேர்வு செய்து பார்ப்பதற்கு முடிவு செய்தாள். தனக்குத் தெரிந்த செயல்கள் பிறருக்கு தெரிகின்றனவா என்று அறிந்து கொள்வது மனிதர்களிடம் இயல்பாகவே இருக்கிறது.*

गानवच्चक्तिरन्यत्र किमस्तीत्यन्वयुङ्क्त सा ।
याच्ञायां फलमूकायां न हि जीवन्ति मानिनः ॥ 26

गानवत् - பாடுகிறது போல, अन्यत्र - மற்றொன்றிலே, शक्तिः - சாமான்யமானது, अस्ति किं - உண்டாகா நின்றதோ, इति - என்று, सा - சுரமஞ்ஜரியானவள், अन्वयुङ्क्त - கேட்டாள், (तथा)याच्ञायां - கேட்கிறது, फलमूकायां - பலமில்லாமல் இருந்துள்ளளவில், मानिनः - பூஜ்யனானவர்கள், जीवन्ति - ஜீவியாநின்றார்கள், नहि - இல்லையன்றோ. 26

*பொருள் : - இசையைப் போல வேறு ஏதாவது கலைகளில் அவனுக்குத் தேர்ச்சி உண்டா என்று அவள் அறிய விரும்பினாள். பிச்சை எடுப்பது போன்ற பயன் தராத செயல்களைச் செய்து சான்றோர்கள் உயிர் வாழ்வது இல்லை.*

बाढमस्ति समस्तेपीत्यब्रवीत्प्रौढनैपुणः ।
उक्तिचातुर्यतो दार्ढ्यमुक्तार्थे हि विशेषतः ॥ 27

प्रौढनैपुणः - ப்ரௌடியிலே நிபுணனான ஜீவந்தரன், समस्तेऽपि - சமஸ்தத்திலேயும், बाढम् - த்ருடமானது, अस्ति - உண்டாகாநின்றது, इति - என்று, अब्रवीत् - சொன்னான், (तथा) उक्तार्थे - சொல்லப்பட்ட அர்த்தத்திலே, उक्तिचातुर्यतः - வசன சாதுர்யத்தினின்றும், दार्ढ्यं - த்ருடமானது, विशेषतः हि விசேஷத்துனின்றுமன்றோ. 27

*பொருள் : - அறிஞனான ஜீவந்தரன் எல்லா கலைகளிலும் தனக்கு அறிவு உண்டு என்று திடமான திறமைமிக்க வாக்கியத்தால் உறைத்தான்.*

अभीप्सितवरप्राप्तावुपायं साऽप्ययाचत ।
रागान्धे हि न जागर्ति याञ्चादैन्यवितर्कणम् ॥ 28

अभीप्सितवरप्राप्तौ-வாஞ்சிக்கப்பட்ட புருஷ ப்ராப்தியிலே, उपायं - உபாயத்தை, साऽपि - சுரமஞ்ஜரியும், अयाचत - கேட்டாள், याञ्चादैन्य - கேட்கிறத்தினாலே தைன்யத்தை உடைய, रागान्धे - ராகந்தரிடத்திலே, वितर्कणम् - விசாரமாச்சுது, जागर्ति - விழித்திராநின்றது, न हि - இல்லையன்றோ. 28

**பொருள் : - வேண்டுவதை விரும்பிப்பெறும் வரத்தை அடைவதற்கான வழியை சுரமஞ்ஜரி ஜீவந்தரனிடம் யாசித்தாள். ஆசையால் குருடானவர், எதைச் செய்வது, எதைச் செய்யாமல் இருப்பது என்பதை ஆராய்வதில்லை.**

कामं कामप्रदं सोऽयं कामदेवमुपादिशत् ।
मनीषितानुकूलं हि प्रीणयेत्प्राणिनां मनः ॥ 29

सोऽयं - அப்படிப்பட்ட ஜீவந்தரன், कामम् - யதேஷ்ட்டமாக, कामप्रदं - வாஞ்சித்ததைக் கொடுக்கிற, कामदेवं - காமதேவனை, उपादिशत् - சொன்னான், प्राणिनां - ஜீவன்களுடைய, मनः - மனஸானது, मनीषितानुकूलम् - வாஞ்சித்த அனுகூலத்தை, प्रीणयेत् हि - ப்ரீதிப்பண்ணக் கடவதன்றோ. 29

**பொருள் : - அந்த ஜீவந்தரனும் நிச்சயமாக விரும்பியதைத் தரக்கூடிய காதற்கடவுளைக் குறித்த மந்திரத்தை அவளுக்கு உபதேசம் செய்தான். உயிரினங்களின் மனதை நிறைவு செய்யும், விரும்பியதைக் கொடுக்கும், உபதேசமன்றோ அது.**

मनीषितं च हस्तस्थं मेने सा सुरमञ्जरी ।
मनोरथेन तृप्तानां मूललब्धौ तु किं पुनः ॥ 30

सा सुरमञ्जरी - அந்த சுரமஞ்ஜரியானவள், मनीषितं च - வாஞ்சித்ததையும், हस्तस्थं - கையிலே இருக்கிறதாக, मेने - எண்ணினாள், (तथा) मनोरथेन - மனசினுடைய சந்தோஷத்தினாலே, तृप्तानां - த்ருப்தியானவர்களுக்கு, तु - பின்னை, मूललब्धौ - மூலமே வந்து ப்ராப்தியான விடத்திலே, किं पुनः - சொல்ல வேணுமோ.

*பொருள் : - அந்த சுரமஞ்ஜரி தான் விரும்பியது கைவரப்பெற்றதாக நினைத்தாள். விருப்பத்தால் மட்டுமே மனநிறைவு அடைந்தவர்களுக்கு அந்த விரும்பிய பொருளை அடையும் முறையும் கைவரப் பெற்றால் அதனால் ஏற்படும் நிறைவை கூறவும் இயலுமோ.*

अनैषीत्तामसौ पश्चात्कामकोष्टं यथेप्सितम् ।
विचाररूढकृत्यानां व्यभिचारः कुतो भवेत् ॥ 31

असौ - ஜீவந்தரன், पश्चात् - பிற்பாடு, तां - சுரமஞ்ஜரியை, यथेप्सितम् - யதேப்ஸிதமான, कामकोष्टं - காமகோஷ்ட்டத்தை, अनैषीत् - அடைவித்தான், (तथा) विचाररूढकृत्यानां - விசாரரூடமாய் பண்ணப்பட்டவர்களுக்கு, व्यभिचारः - வியாபிசாரமானது, कुतः - எங்கு நின்றும், भवेत् - ஆகக்கடவது. 31

*பொருள் : - பிறகு ஜீவந்தரன் அவள் விரும்பியவாறு அவளை காமகோட்டத்திற்கு அழைத்துச் சென்றான். ஆராய்ந்து செயலாற்றுபவர்கள் அச்செயலில் தவறிழைக்க மாட்டார்கள்.*

कामं सा प्रार्थयामास जीवकस्वामिकाम्यया ।
जन्मान्तरानुबन्धौ हि रागद्वेषौ न नश्यतः ॥ 32

सा - சுரமஞ்ஜரியானவள், कामं - காமதேவனை, जीवकस्वामिकाम्यया - ஜீவக ஸ்வாமி வாஞ்சையினாலே, प्रार्थयामास - பிரார்த்தித்தாள், (तथा) जन्मान्तरानुबन्धौ - ஜன்மாந்தரானுபந்தங்களான, रागद्वेषौ - ராகத்வேஷங்கள், नश्यतः - கெடாநின்றது, नहि - இல்லையன்றோ. 32

*பொருள் : - பிறகு சுரமஞ்ஜரியானவள் ஜீவந்தரனை விரும்புபவளாக அவ்விருப்பத்தையே காமதேவனிடம் விண்ணப்பித்தாள். பிறவிகள் மாறினாலும், விருப்பு வெறுப்புக்கள் மாறுவதில்லை.*

लब्धो वर इति प्रोक्तं वुद्धिषेणेन सा सती ।
मनोभुवो वचो मेने स्त्रीणां मौढ्यं हि भूषणम्* ॥ 33

बुद्धिषेणेन - புத்திஷேணனாலே, वरः - வரனானவன், लब्धः - லபிக்கப்படுமவன், इति - என்று, प्रोक्तः - சொல்லப்பட்டது, सती - ப்ரஸத்தையான, सा - சுரமஞ்ஜரி, मनोभुवः - மன்மதனுடைய, वचः - வசனமென்று, मेने - எண்ணினாள், (तथा) स्त्रीणां - ஸ்திரியர்களுக்கு, मौढ्यं - மூடமானது, भूषणं हि - பூஷணமன்றோ. 33

*பொருள் : - 'உன் விருப்பத்தை நீ அடைந்துவிட்டாய்' என்று புத்திஷேனனால் அவள் அறிவிக்கப்பட்டாள். அவளும் அதனை மன்மதனின் வார்த்தையாக எண்ணினாள். பெண்களுக்கு முட்டாள்தனம் சிறந்த அணிகலன் ஆகும்.*

---

* *பேதமை என்பது மாதர்அ ணிகலம் (ஔவை)*

कुमारं दर्शिताकारं दृष्ट्वा जिह्राय तत्क्षणे ।
मृतकल्पा हि कल्पन्ते निर्लज्जा निष्कृपा इव ॥ 34

दर्शिताकारं - காட்டப்பட்ட ஆகாரத்தை உடைய, कुमारः- ஜீவந்தரனை, दृष्ट्वा -கண்டு, तत्क्षणे - அந்த க்ஷணத்திலே, जिह्राय - லஜ்ஜித்தான், (तथा) निर्लज्जा - லஜ்ஜையில்லாதவர்கள், निष्कृपा इव - க்ருபை இல்லாதவர்கள் போல, मृतकल्पाः - செத்தவர்களுக்கு சமானமாக கல்ப்பிக்கப்பட்டவர்களாக, कल्पन्ते हि - கல்ப்பியாநின்றார்கள். 34

பொருள் : - அந்த நேரத்தில் இளவரசன் ஜீவந்தரனை இளமையாகக் கண்டு அவள் வெட்கினாள். வெட்கமற்ற தன்மை, அருளற்ற தன்மை போல ஒருவரை உயிரற்றவராக ஆக்கி விடுகிறது. (வெட்கப்படுதல் என்பது அவர்களுடைய எண்ணத்தை வெளிப்படுத்துவதாகும். ஒரு ஆணைக் கண்ட பெண் வெட்கப்படாமல் நின்றால் அவள் உயிரற்றவள் என்பது பொருள்.

पतिकृत्येन पत्नीं तां सुतरां सोऽप्यतोषयत् ।
संसारोऽपि हि सारः स्याद्दम्पत्योरेक कण्ठयोः ॥ 35

पतिकृत्येन - பதிக்ருத்யத்தினாலே, तां पत्नीं - அந்த சுரமஞ்ஜரியை, सुतरां - மிகவும், सोऽपि - ஜீவந்தரனும், अतोषयत्- சந்தோஷிப்பித்தான், (तथा) एककण्ठयोः - சமான ஹ்ருதயங்களையுடைய, दम्पत्योः - ஸ்திரி புருஷர்களுக்கு, संसारोऽपि - சம்சாரமும், सारः - சாரமானது, स्यात् हि - ஆகக்கடவதன்றோ. 35

பொருள் : - அந்த ஜீவந்தரனும் கணவன் என்னும் தனது கடமையால் அவளை மிகவும் மகிழ்ச்சியுறச் செய்தான். ஒரே கருத்தைக் கொண்ட கணவன், மனைவியரிடையே வாழ்க்கை என்பது இனிக்கிறது.

ततः कुबेरदत्तेन दत्तां तां सुरमञ्जरीम् ।
सुमतेरात्मजां सोऽयमुपयेमे यथाविधि ॥ 36

ततः - பிற்பாடு, कुबेरदत्तेन - குபேரமித்ரனாலே, दत्तां - கொடுக்கப்பட்ட, सुमते - சுமதியினுடைய, आत्मजां - புத்திரியான, तां - சுரமஞ்ஜரி அந்த சுரமஞ்ஜரியை, सोऽयं - அப்படிப்பட்ட ஜீவந்தரன், यथाविधि - விதிக்கிரமாக, उपयेमे- விவாஹம் பண்ணினான். 36

इति श्रीमद्वादीभसिंहसूरिविरचिते क्षत्रचूडामणौ
सुरमञ्जरीलम्भो नाम नवमो लम्भः ॥

பொருள் : - பிறகு குபேரதத்தனால் கொடுக்கப்பட்ட சுமதியினுடைய பெண்ணான சுரமஞ்ஜரியை இந்த ஜீவந்தரன் திருமணம் செய்துகொண்டான்.

*ஸுரமஞ்ஜரி லம்பம் முற்றிற்று*



# दशमोलम्भः

## लक्ष्मणालम्भः

## லக்ஷ்மணாலம்பம்

अथ पाणिगृहीतां तां बहुमेने बहुप्रियः ।
बहुयत्नोपलब्धे हि प्रेमबन्धो विशेष्यते ॥ 1

अथ - பிற்பாடு, पाणिगृहीतां - விவாஹம் பண்ணி இருக்கிற, तां - சுரமஞ்ஜரியை, बहुप्रियः - பகுப்ரியனான ஜீவந்தரன், बहु मेने - பகுவாய் எண்ணினான், तथा बहुयत्नोपलब्धे - பகு ப்ரயத்தனத்தினாலே பெறப்பட்டதிலே, प्रेमबन्धः - ஸ்நேஹபந்தமானது, विशेष्यते हि - விசேஷிக்கப்படா நின்றதன்றோ. 1

பொருள் :- திருமணம் முடிந்த பிறகு சுரமஞ்ஜரியிடம் ஜீவந்தரன் மிகவும் பிரியமுடன் இருந்தான். மிகவும் பிரயத்தனப்பட்டு பெறப்பட்ட பந்தமானது விசேஷமானதன்றோ.

कृच्छ्रेणाराध्य तां भूयो मित्राणां पार्श्वमाश्रितः ।
स्वामीच्छाप्रतिकूलत्वं कुलजानां कुतो भवेत् ॥ 2

भूयः - மிகவும், तां - சுரமஞ்ஜரியை, कृच्छ्रेण - ப்ரயாசத்தினாலே, आराध्य - ஆராதிச்சு, मित्राणां - மித்ரர்களுடைய, पार्श्वम् - சமீபத்தை, आश्रितः - அடைந்தான், स्वामीच्छाप्रतिकूलत्वं - ஸ்வாமிக்கு மாறுபாடானது, कुलजानां - குலத்திலே பிறந்தவர்களுக்கு, कुतः - எங்குநின்றும், भवेत् - ஆகக்கடவது. 2

பொருள் : - ஜீவந்தரன் சுரமஞ்ஜரியை நன்கு போற்றிய பின்னர், நண்பர்களை வந்தடைந்தான். கணவன் விருப்பத்துக்கு மாறாகக் குலப்பெண்கள் நடந்துகொள்வது இல்லை.

सचित्रीयस्तदा मित्रैः पित्रोरन्तिकमाययौ ।
आत्मदुर्लभमन्येन सुलभं हिं विलोचनम् ॥ 3

तदा - அப்பொழுது, सचित्रीयैः - ஆச்சரியங்களோடகூடி இருக்கிற, मित्रैः - மித்ரர்களோடே, पित्रोः - தாய் தகப்பனானவர்களுடைய, अन्तिकं - சமீபத்தை, आययौ - அடைந்தான், तथा आत्मदुर्लभम् - தனக்கு துர்லபமானது, अन्येन - அன்யனாலே, सुलभम् - சுலபமானது, विलोचनं हि - ஆச்சரியமன்றோ. 3

பொருள் : - ஆச்சரியமடைந்த நண்பர்களால் சூழப்பட்ட ஜீவந்தரன், தனது பெற்றோருக்குச் சொந்தமான வீட்டையடைந்தான். தன்னால் செய்து முடிக்கப்படாத செயல் பிறரால் செய்து முடிக்கப்பட்டால் அதனால் ஆச்சரியம்தானே ஏற்படும்!

पित्रोरप्यतिमात्रोऽभूत्पुत्रस्नेहोऽस्य वीक्षणात् ।
कस्यानन्दकरो न स्यात्कृतान्तास्यादुपागतः* ॥ 4

पित्रोरपि - உறவினர்களுக்கும், अस्य वीक्षणात् - ஜீவந்தரனுடைய காண்கையினின்றும், पुत्रस्नेहः - புத்ர ஸ்நேகமானது, अतिमात्रः - மிகுதியானது, अभूत् - ஆச்சுது, (तदा) कृतान्तास्यात् - யமராஜனுடைய வாயில்நின்றும், उपागतः - வந்தவன், कस्य - எவனுக்கு, आनन्दकरः - சந்தோஷத்தைப்பண்ணுகிறவன், न स्यात् - ஆகக்கடவனல்ல.

* अपागतः (पाठभेदः)

பொருள் : - ஜீவந்தரனைகக் கண்ட அவனது உறவினர்களுக்கு, அவன்மீது இருந்த அன்பு பெருகியது. எமன் வாயிலிருந்து மீண்டு வந்த ஒருவனைக் கண்டு எவன்தான் மகிழமாட்டான்?

ततो गन्धर्वदत्ता च गुणमाला च वल्लभे ।
उल्लाघतां क्रमाल्नीते नीतिरेषा हि संसृतौ ॥ 5

ततः - பிற்பாடு, गन्धर्वदत्ता च - கந்தர்வதத்தையும், गुणमाला च - குணமாலையுமான, वल्लभे - வல்லபைகள், क्रमात् - க்ரமத்திநின்றும், उल्लाघतां - சந்தோஷத்தை, नीते - அடைந்தார்கள், संसृतौ - சம்சாரத்திலே, एषा - இந்தநீதி, हि - நீதியன்றோ. 5

பொருள்: - பிறகு அவனது மனைவிகள் கந்தர்வதத்தையும் குணமாலையும் அவனைக் கண்டு மகிழ்ந்தார்கள். இது உலகின் இயல்பன்றோ?

अथ गन्धोत्कटेनायं मन्त्रयित्वा ततो ययौ ।
विधित्सिते ह्यनुत्पन्ने विरमन्ति न पण्डिताः ॥ 6

अथ - பிற்பாடு, गन्धोत्कटेन - கந்தோத்கடனோடே, अयं - ஜீவந்தரன், मन्त्रयित्वा - ஆலோசனைப்பண்ணி, ततः - அங்குநின்றும், ययौ - அடைந்தான், विधित्सिते - பண்ண வேணுமென்று, வாஞ்சிக்கப்பட்ட, अनुत्पन्ने - உண்டாகாமல் இருந்துள்ளளவில், पण्डिताः - பண்டிதர்கள், विरमन्ति - விடாநின்றார்கள், न हि - இல்லையன்றோ. 6

பொருள் : - பிறகு அவன் கந்தோத்கடனிடம் ஆலோசனை செய்தான். விரும்பிய செயலைச் செய்தும், அதனால் பயன் ஏற்படாமல் இருந்தால், சான்றோர்கள் அச்செயலை விட்டு மற்றொரு செயலில் ஈடுபட மாட்டார்கள். (பயன் தரும் வரை அச்செயலையே செய்துகொண்டிருப்பர்)

विदेहाख्यो ततो देशे धरण्यास्तिलकोपमाम् ।
तिलकान्तधरण्याख्यां राजधानीमशिश्रयत् ॥ 7

ततः - பிற்பாடு, विदेहाख्ये - விதேஹமென்று பேரையுடைய, देशे - தேசத்திலே, धरण्याः - பூமிக்கு, तिलकोपमां - முக்ய உபமையான, तिलकान्तधरण्याख्यां - தரணிதிலகமென்று பேரையுடைய, राजधानी - ராஜதானியை, अशिश्रयत् - அடைந்தான். 7

பொருள் : - பிறகு ஜீவந்தரன் விதேஹ நாட்டின் தலைநகரான தரணீதிலகம் என்ற ஊரை அடைந்தான்.

महितो मातुलेनात्र विदेहाधिपभूभुजाम् ।
भागिनेयो महाभागो मह्यां केन न मह्यते ॥ 8

अत्र - இவ்விடத்திலே, विधेहाधिपभूभुजाम् - விதேஹ தேசத்துக்கு முக்ய ராஜாவான, मातुलेन - மாமனாலே, महितः- பூஜிக்கப்பட்டான், तथा महा भागः - மஹா பாக்யவானான, भागिनेयः - மருமகனானவன், मह्यां - பூமியிலே, केन - எவனாலே, नमह्यते - பூஜிக்கப்படாநின்றானில்லை. 8

பொருள் : - அங்கு விதேஹ நாட்டின் அரசருக்கெல்லாம் அரசானான, அவனது தாய்மாமனால் அவன் முறைப்படி வரவேற்கப்பட்டான். இவ்வுலகில் உடன்பிறந்தாள் மைந்தர்கள் தாய்மாமனால் போற்றப் படுகின்றனர்.

आसीद्गोविन्दराजोऽपि तद्राज्यस्थापनोद्यतः ।
स्वयं परिणतो दन्ती प्रेरितोऽन्येन किं पुनः ॥ 9

गोविन्दराजोऽपि - கோவிந்தராஜனும், तद्राज्यस्थापनोद्यतः- அவனுடைய ராஜ்யஸ்தாபனத்திலே உத்யுக்தனானவன், आसीत् - ஆனான், तथाहि स्वयं - தான், परिणतः - மதத்தினால் பரிணமிக்கப்பட்ட, दन्ती - யானையானது, अन्येन - அன்யனாலே, प्रेरितः - ஏவப்பட்டது, किं पुनः - சொல்ல வேணுமோ. 9

பொருள் : - கோவிந்தராஜன் என்ற அவனது தாய்மாமன் அவனை அரியணையில் அமரவைக்க முயற்சிகளை மேற்கொண்டான். மதம் கொண்ட யானை, தானாகவே நாசங்களை ஏற்படுத்தும்போது அது பிறரால் ஏவப்பட்டால், அது ஏற்படுத்தும் அழிவுகளால் எப்படிப்பட்ட விளைவுகள் ஏற்படும்?

मन्त्रिभिर्मन्त्रशालायां मन्त्रयामास मन्त्रवित् ।
न ह्यमन्त्रं विनिश्चेयं निश्चिते च न मन्त्रणम् ॥ 10

मन्त्रशालायां - மந்த்ரசாலையிலே, मन्त्रिभिः - மந்திரிகளோடே, मन्त्रवित् - ஆலோசனையை அறிந்து கோவிந்தமஹாராஜன், मन्त्रयामास - ஆலோசனையைப் பண்ணினான், तथा निश्चिते - நிச்சிதமானத்திலேயும், मन्त्रणम्- ஆலோசனை, न - இல்லை, मन्त्रणम् - ஆலோசனை இல்லாதது, विनिश्चेयम् - நிச்சயமானது, न हि - இல்லையன்றோ. 10

பொருள் :- ஜீவந்தரனை ஆட்சியில் அமர்த்துவதற்கான வழிகளையறிந்த கோவிந்தராஜன், தனது ஆலோசனைக் கூடத்தில் அமைச்சர்களுடன் ஆலோசனையில் ஈடுபட்டான். ஆலோசிக்காமல் ஒன்றைத் தீர்மானம் செய்யக்கூடாது. தீர்மானித்த பின் ஆலோசனை கூடாது.

काष्टाङ्गारस्य संदेशं सचिवैः शुश्रुवानयम् ।
ज्ञात्वा हि हृदयं शत्रोः प्रारब्धव्या प्रतिक्रिया ॥ 11

काष्टाङ्गारस्य - காஷ்ட்டாங்காரன், संदेशं - ஓலையை, सचिवैः - மந்திரிகளினாலே, अयं - கோவிந்தராஜன், शुश्रुवान्- கேட்டான், तथा शत्रोः - சத்ருவினுடைய, हृदयः - ஹ்ருதயத்தை, ज्ञात्वा - அறிந்து, प्रतिक्रिया - ப்ரதிக்ரியை யானது, प्रारब्धव्या हि - துடங்கப்படுவதன்றோ. 11

பொருள் :- அமைச்சர்களின் வாயிலாக, கோவிந்தராஜன் காஷ்ட்டாங்காரன் அனுப்பிய செய்தியை, ஜீவந்தரனுக்குத் தெரியப்படுத்தினான். எதிரியின் மனம் அறிந்துதான் அதற்கு எதிரான செயலில் ஒருவன் ஈடுபடவேண்டும்.

अघेनाहमपख्यातिं राजघे मदहस्तिनि ।
लब्धवानवबुध्येत मिथ्येयं तत्ववेदिभिः* ॥ 12

मदहस्तिनि - மதஹஸ்தியானது, राजघे - ராஜாவைக் கொன்றுள்ளளவில், अहं - நான், अघेन - பாபத்தினாலே, अपख्यातिं - அபக்யாதியை, लब्धवान् - பெற்றேன், इयं - இது, तत्ववेदिभिः - சத்யத்தை அறிந்த உங்களாலே, मिथ्या - பொய்யென்று, अवबुध्येत - அறியக்கடவது. 12

---

* तत्ववेदिनां (पाठभेदः)

பொருள் : - மதம்கொண்ட யானையொன்று அரசனைக் கொன்றது. ஆனால் அந்தத் தீச்செயலைச் செய்தவன் நான் என்ற பழியை நான் சுமந்து கொண்டிருக்கிறேன். இது உண்மையறிந்த உங்களால், தீச்செயலைச் செய்தது நான் என்பது பொய் என்பது அறியப்படட்டும்.

निः शल्योऽहं भवान्येष भवत्यत्र समागते ।
दुर्जनेऽपि हि सौजन्यं सुजनैर्यदि संगमः ॥ 13

भवति - நீ, अत्र - இவ்விடத்திலே, समागते - வந்துள்ளளவில், एषः - இந்த அபக்யாதியையுடைய, अहं - நான், निःशल्यः - சல்யமில்லாதவன், भवानि - ஆவேன், सुजनैः - சஜ்ஜனங்ளோட, संगमः - கூட்டுறவு, यदि - யாகில், दुर्जनेऽपि - துர்ஜனனிடத்திலேயும், सौजन्यं हि - சஜ்ஜனத்வமன்றோ. 13

பொருள் : - தாங்கள் இங்கு வந்தவுடன் நான் துயர் களைந்தவனாக ஆகிவிட்டேன். சான்றோர்களுடன் கூடுவது தீயவர்களுக்கும் நன்மை பயக்கும் அன்றோ ?

इत्युक्त्या निश्चितोऽरातिरतिसंधित्सुरञ्जसा ।
असतां हि विनम्रत्वं धनुषामिव भीषणम् ॥ 14

इति - என்று சொல்லி, अञ्जसा - நிச்சயத்தினாலே, अतिसन्धित्सुः - ஜயிக்கவேணுமென்று வாஞ்சையையுடைய, अरातिः - சத்ருவான காஷ்டாங்காரகன், निश्चितः - நிச்சயிக்கப்பட்டான், (तथा) धनुषामिव - வில்லுக்குப்போல, असतां - துர்ஜனர்களுக்கு, विनम्रत्वं - வணக்கத்வமானது, भीषणं हि - பயமன்றோ. 14

பொருள் : - இப்படிப்பட்ட (சூழ்ச்சி மிகுந்த) சொற்களால் எதிரி காஷ்டாங்காரன் தங்களை வெற்றி கொள்ள நினைக்கிறான் என்று அவர்கள் தீர்மானித்தனர். தீயோர்களின் அடக்கம், வில்லின் வளைதல் போன்று அச்சத்தை அளிக்கக் கூடியது.

विप्रलम्भोत्सुके शत्रौ कार्यान्धोऽयमतप्यत ।
दुर्जनाग्रे हि सौजन्यं कर्दमे पतितं पयः ॥ 15

विप्रलम्भोत्सुके - வஞ்சனைப் பண்ணுகிறத்திலே வாஞ்சிதனான, शत्रौ - காஷ்ட்டாங்காரனிடத்திலே, कार्यान्धः- கார்யத்தை அறியாத, अयं - கோவிந்தராஜன், अतप्यतः - தபித்தான், तदा दुर्जनाग्र - துர்ஜனனுடைய முன்னே, सौजन्यं- சஜ்ஜனத்துவமானது, कर्दमे - சேற்றிலே, पतितं - விழுந்த, पयः- பாலன்றோ. 15

பொருள் : - வஞ்சிப்பதில் திறமையுள்ள எதிரியின் இடத்தில் எவ்வாறு நடந்துகொள்வது என்பதை அறியாமல் கோவிந்தராஜன் குழம்பினான். தீயவனிடத்தில் காட்டப்படும் நல்லெண்ணம், சேற்றில் சிதறிய பால் போன்றது (வீண்).

आहूतास्तेन साकूतं गच्छामस्तच्छलाद्वयम् ।
इत्युच्चैः निश्चिकायासौ बकायन्ते हि जिष्णवः ॥ 16

तेन - காஷ்ட்டாங்காரனாலே, आहूताः - அழைக்கப் பட்டிருக்கிற, वयं - நாம், तच्छलात् - அவனழைத்து வரவிட்ட வியாஜத்திநின்றும், साकूतः - அபிப்ராயத்தோடுகூட, गच्छामः- போவோம், इति - என்று, उच्चैः - மிகவும், असौ -

கோவிந்தராஜன், निश्चिकाय - நிச்சயம் பண்ணினான், (तथा)जिषणवः - ஜெயிக்க வேணுமென்று இச்சை உடையவர்கள், बकायन्ते हि - [1]கொக்குகள் போல ஆசரியா நின்றார்களன்றோ. 16

பொருள் : - "ஏதோ ஒரு (தீய) எண்ணத்துடன் அழைக்கப்பட்டுள்ள நாம் அங்கு செல்வோம்" என்று கோவிந்தராஜன் இறுதி முடிவெடுத்தான். வெற்றியை இலக்காகக் கொண்டவர்கள் கொக்குகள் போல நடந்துகொள்கின்றனர்.

काष्टाङ्गारेण सञ्जातं सख्यं प्रख्यापयन्नसौ ।
[2]डिण्डिमं ताडयामास गतेर्वार्ता हि पूर्वगा ॥ 17

काष्टाङ्गारेण - காஷ்ட்டாங்காரனாலே, संजातं - உண்டான, सख्यं - மித்ரத்வத்தை, प्रख्यापयन् - ப்ரக்யாதம் பண்ணினவனான, असौ - கோவிந்தமஹாராஜன், डिण्डिमं - முரசை, ताडयामास - அறைவித்தான், (तथा) गतेः - கமனத்தி நின்றும், वार्ता - வசனமானது, पूर्वगा हि - முந்தியடையா நின்றதன்றோ. 17

பொருள் : - காஷ்டாங்காரனுடன் ஏற்பட்ட நட்பை வெளியுலகிற்குச் சொல்ல விரும்பிய கோவிந்தராஜன், 'டிண்டிமம்' என்று அழைக்கப்படும் முரசை அறைவித்தான். ஒருவர் ஓரிடத்துக்குச் செல்லப்போகிறார் என்ற செய்தி, அவர் அங்கு போய்ச்சேரும் முன்னமேயே அவ்விடத்தை சென்றடைந்து விடும்.

---

1. ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு.
2. டிண்டிமம் என்பது ஒரு வகையான முரசு. அரசனால் அழைக்கப் பட்டவர்களுக்கு, அவர்கள் அரசனிடம் செல்லும்போது அதனை அறைவிப்பார்கள். தமிழ்நாட்டில் தொண்டைமண்டலத்தில் இத்தகைய பழக்கம் இருந்துவந்ததற்கான சான்றுகள் காணப்படுகின்றன.

चातुरङ्गबलं पश्चाच्चतुरोऽयं न्यशामयत् ।
आलोच्यात्मारिकृत्यानां प्राबल्यं हि मतोविधिः ॥ 18

चातुरबलं - சாதுரபலத்தை, पश्चात् - பிற்பாடு, चतुरोयं - சதுரனான கோவிந்த மஹாராஜன், न्यशामयत् - கண்டான், (तथा) आत्मारिकृत्यानाम् - தன்னுடைய சத்ருக்களுடைய, प्राबल्यं - ப்ரபல்யத்தை, आलोच्य - ஆலோசித்து, विधिः - பண்ணுகிறது, मतो हि - உடன்பட்டதன்றோ. 18

*பொருள் : - அறிவிற் சிறந்த கோவிந்தராஜன் தன்னைப் பின்தொடர, நால்வகைப் படைகளையும் ஏற்பாடு செய்தான். எதிரிகளின் வலிமையை உணர்ந்து, அதன்படி நடப்பதே சிறந்தது.*

प्रतस्थे चाथ सल्लग्ने पात्रदानादिपूर्वकम् ।
दानपूजातपः शीलशालिनां किं न सिध्यति ॥ 19

अथ - பிற்பாடு, सल्लग्ने - நல்ல லக்னத்திலே, पात्रदानादिपूर्वकम् - பாத்ரதானாதிபூர்வகமாக, प्रतस्थे- புறப்பட்டான், (तथा) दानपूजातपशीलशालिनाम् - தானபூஜை தபசீலங்களினால் நிறைந்தவர்களுக்கு, किं - என்ன, सिध्यति- சித்தியாகாநின்றது, न - அல்ல. 19

*பொருள் : - சிறந்த நேரத்தில், சிறந்தவர்களுக்குக் கொடையளித்து, ஜீவந்தரன் புறப்பட்டான். கொடை, வழிபாடு, தவம் நன்னடத்தை ஆகியவைகளை உடையவர்கள் எதைச் சாதிக்க மாட்டார்கள் ?*

अथ राजपुरीं प्राप्य राजा कैश्चित्प्रयाणकैः ।
निकषा तत्पुरीं क्वापि निषसाद महाबलः ॥ 20

अथ - பிற்பாடு, राजा - ராஜாவானவன், कैश्चित् प्रयाणकैः- சிறிது பயணங்களினாலே, राजपुरीम् - ராஜபுரியை, प्राप्य - அடைந்து, निकषातत्पुरीम् - ராஜபுரியினுடைய சமீபத்தை, क्वापि - ஓரிடத்திலே, महाबलः - மஹாபலத்தை உடைய கோவிந்தராஜன், निषसाद - இருந்தான். 20

*பொருள் : - பிறகு வலிமைமிக்க அரசன் கோவிந்தராஜன் சிறிது பயணம் செய்து, ராஜபுரியின் அருகாமையை அடைந்து, அங்கு ஓரிடத்தில் தங்கியிருந்தான்.*

प्राभृतं प्राहिणोत्तस्य काष्टाङ्गारो *मुधामुहुः ।
हन्त कापटिका लोके बुधायन्ते हि मायया ॥ 21

तस्य - கோவிந்தராஜனுக்கு, मुधा - வ்யர்த்தத்தினாலே காஷ்ட்டாங்காரனானவன், मुहुः - திரும்ப, प्राभृतं - கைக்காணிக்கையை, प्राहिणोत् - அனுப்பினான், (तथा) लोके - லோகத்திலே, कापटिकाः - கபடிகள், मायया - மாயையினாலே, बुधायन्ते हि - புத்திமான்கள் போல ஆசரியாநின்றார்களன்றோ, हन्त - கெட்ட கெட்ட. 21

*பொருள் : - காஷ்டாங்காரன் கோவிந்தராஜனுக்குக் காணிக்கைகளை வீணாக அனுப்பி வைத்தான். கெட்ட எண்ணம் கொண்டவர்கள், தாங்கள் செய்யும் செயலால், நல்ல எண்ணம் கொண்டவர்கள் போலக் காணப்படுகிறார்கள் அன்றோ!*

प्रतिप्राभृतमेतस्यै प्राहैषीत्स्वामिमातुलः ।
आ समीहितनिष्पत्तेराराध्याः खलु वैरिणः ॥ 22

---

* मुदा (पाठभेदः)

स्वामिमातुलः - ஜீவந்தரஸ்வாமி மாமனான கோவிந்தராஜன், एतस्मै - காஷ்ட்டாங்காரன் பொருட்டு, प्रतिप्राभृतम् - திரும்பி கைக்காணிக்கையை, प्राहैषीत्- அனுப்பினான், (तथा) आसमीहितनिष्पत्तेः - வாஞ்சித்தகாரியம் முடிகிற பர்யந்தம், वैरिणः - வைரிகள், आराध्याः खलु - ஆராத்யர்களன்றோ. 22

*பொருள் : - ஜீவந்தரனின் தாய்மாமனான கோவிந்தராஜனும் அவனுக்கு பதில்மரியாதைகளை அனுப்பி வைத்தான். நினைத்ததை முடிக்கும் வரை எதிரிகள் போற்றத் தகுந்தவர்களே!*

कन्याशुल्कतया लोके गन्त्रभेदमघोषयत् ।
उपायप्रष्ठरूढा हि कार्यनिष्टानिरङ्कुशाः ॥ 23

कन्याशुल्कतया - கன்யகையை பரியம் போடுகிற தன்மையினாலே, लोके - லோகத்திலே, यन्त्रभेदम् - சக்ர யந்திரத்திலிருக்கிற வராஹத்ரய பேதத்தை, अघोषयत् - கோஷிப்பித்தான், तदा उपायप्रष्ठरूढाः - உபாயத்தைப் பண்ணுகிறதிலே ப்ரரூடரானவர்கள், कार्यनिष्टानिरङ्कुशाः हि - கார்யத்தினோடிருக்கிறதிலே தடையில்லாதவர்களன்றோ.

*பொருள் : - கோவிந்தராஜன், தன் மகளைத் திருமணம் செய்ய விரும்புபவர், பரிசமாகச் சுழல் இயந்திரத்தில் வெற்றியடைவதைப் பணயமாக வைத்தான். சரியான வழியை அறிவதில் சிறந்தவர்கள், செயலிலும் சிறந்தவர்களாக விளங்குவர்.*

धनुर्धराश्च संभूतास्त्रैवर्णिककुलोद्भवाः ।
आमोहो देहिनामास्थामस्थानेऽपि हि पातयेत् ॥ 24

त्रैवर्णिककुलोद्भवाः - மூன்றுகுலத்திலுமுண்டான, धनुर्धराश्च - வில்லுக்காரர்களும், संभूता - வந்தார்கள், (तथा) आमोहः - மோஹமுள்ளபர்யந்தம், देहिनां - ஜீவன்களுக்கு, आस्थां - வாஞ்சையை, अस्थानेऽपि - ஸ்தானமல்லாதத்திலேயும், पातयेत् - விழப்படாநின்றதன்றோ. 24

**பொருள் : - முக்குலத்தில் தோன்றியவர்களும், வில்லாளிகளும், அவனது மகளை மணக்க முன்வந்தனர். ஒரு பொருளின் மீது ஏற்படும் ஈடுபாடு, பொருத்தமற்றதாக இருப்பினும், அதன்மீது கொண்ட மோகம் மனிதர்களை அதனில் ஈடுபடுத்தும்.**

ततश्चन्द्रकयन्त्रस्थवराहत्रयभेदने ।
न शेकुश्चापिनः* सर्वे क्व विद्या पारगामिनी ॥ 25

ततः - பிற்பாடு, चन्द्रकयन्त्रस्थवराहभेदने - சந்த்ர யந்தரத்திலிருக்கிற திருகு பன்றியான மூன்றையும், பேதிக்கிறத்தின் பொருட்டு, आपिनः - அடைந்திருக்கிற, सर्वे च - சமஸ்தர்களும், न शेकुः - சமர்த்தமானார்களில்லை, विद्यापारगामिनी - வித்தையினுடைய கரையை அடைந்தது, क्व - எங்கே. 25

**பொருள் : - பிறகு பிறை நிலவின் வடிவிலமைந்த இயந்திரத்தில், பன்றியின் உருவத்தில் சுழலும் பொம்மைகள் மூன்றையமைத்தான். அவை மூன்றையும் ஒரே நேரத்தில், ஒரே அம்பின் வாயிலாக வீழ்த்த அங்கிருந்தவர்களால் இயலவில்லை. கல்வியில் கரை கண்டவர் எவர் உளர்.**

---

* न शेकुः चापिनः (पाठभेदः) = चाप + णिनि = **வில்லாளிகள்.**

अलातचक्रतः शीघ्रं चक्रमारुह्य हेलया ।
विव्याध विजयासूनुर्भानुः किं न तमोहरः ॥ 26

अलातचक्रतः - அலாத சக்ரத்திநின்றும், शीघ्रं - சீக்ரமானது, चक्रं - சக்ரத்தை, हेलया - விளையாட்டினாலே, विजयासूनुः - ஜீவந்தரன், आरुह्य - ஏறி, विव्याध - எய்தான், (तथाहि) भानुः - சூர்யன், तमः - இருட்டை, हरः - கெடுக்கிறவன், किं न - ஏன் இல்லை ? 26

*பொருள் : - விஜயாவின் புதல்வனான அந்த ஜீவந்தரன் தீப்பற்றி எரியும் அந்தச் சக்கரத்தின் மீது விளையட்டாக ஏறி, அதனைத் துளைத்தான். பகலவன் இருட்டைப் போக்குபவன் அன்றோ!*

अथ गोविन्दराजोऽपि राज्ञामित्थमचीकथत् ।
सात्यं धरिरयं हीति स्थाने हि कृतिनां गिरः ॥ 27

अथ - பிற்பாடு, गोविन्दराजोऽपि - கோவிந்தராஜனும், राज्ञां - ராஜாக்களுக்கு, अयं - இவன், सात्यंधरिः - சத்யந்தர மஹாராஜனுடைய புத்ரன், हि - ஸ்புடமாக, इति - என்று, इत्थं - இப்படி, अचीकथत् - சொன்னான், (तथा) कृतिनां - புண்யவான்களுக்கு, गिरः - வசனமானது, स्थाने हि - ஸ்தானத்திலே அன்றோ. 27

*பொருள் : - இந்த கோவிந்தராஜனும் 'இவனே சத்யந்தரன் மகன்' என்று அரசனிடம் அறிவித்தான். செய்து முடிப்பவர்கள், சரியான இடங்களில்தான் விஷயத்தைக் கூறுவர்.*

राजानोऽप्येवमस्माभिरस्मारीत्यथ्यनन्दिषुः ।
आचष्टे हि नरेन्द्रत्वमालीढादिषु पाटवम् ॥ 28

राजानोपि - ராஜாக்களும், एवं - இப்படி, अस्माभिः - எங்களாலே, अस्मारि - சரிக்கப்பட்டுது, इति - என்று, अभ्यनन्दिषुः - சொன்னார்கள், (तथा) आलीढादिषु* - இடது கால் பின்னும் வலது கால் முன்னுமான வில்லு முதலானதுகளிலே, पाटवम् - படுத்வமானது, नरेन्द्रत्वं - நரேந்திரத்வத்தை, आचष्टे हि - சொல்லாநின்றதன்றோ. 28

*பொருள் :* - *அரசர்களும் தாங்கள் இதனை ஏற்றுக் கொண்டதாக போற்றினர். (வில்வித்தைப் பயிற்சியில் கால்களை முறைப்படி இவ்வாறு வைத்தே அம்புகளை எய்ய வேண்டும் என்னும் முறையை அறிந்தவன் மட்டுமே சிறந்த வீரனாகவும் அரசனாகவும் திகழமுடியும் என்பதையுணர்ந்தவன் ஜீவந்தரன்) பயிற்சி பெற்ற கால்களின் நடையை வைத்தே அவனது அரசத்தன்மையை அறிய முடியுமன்றோ!*

काष्टाङ्गारः कुमारस्य वीक्षणात्क्षीणमानसः ।
तच्छ्रुतेर्मृतकल्पोऽयमनल्पाधिरचिन्तयत् ॥ 29

कुमारस्य - ஜீவந்தரகுமாரனுடைய, वीक्षणात् - காண்கையினின்றும், क्षीणमाणसः - க்ஷீணமான மனதை உடைய, काष्टाङ्गारः - காஷ்ட்டாங்காரனானவன், तच्छ्रुतेः - கோவிந்த மஹாராஜன் சொன்ன வசனத்தினின்றும், मृतकल्पः - செத்தவனுக்கு சமானமாக கல்ப்பிக்கப்பட்ட, अनल्पाधिः - பகுபுத்தியையுடைய, अयं - இவன், अचिन्तयत् - சிந்தித்தான்.

---

* स्थानानि धन्विनां पञ्च तत्र वैशाखमस्त्रियाम्
त्रिवितस्त्यन्तरौ पादौ मण्डलं तोरणाकृतिः ।
अन्वर्थं स्यात् समपदम् आलीढं तु ततोऽग्रतः
दक्षिणे वाममाकुञ्च्य प्रत्यालीढं विपर्ययः ॥ (इति यादवः)

* *ஆலீடம் என்பது வலது காலை நீட்டி இடது காலை மடக்கி, அம்பு எய்யும் உடல் நிலை (posture) ஆகும்.*

பொருள் : - அரசகுமாரனைக் கண்டதால், காஷ்டாங்காரன் மனம் புழுங்கினான். கோவிந்தராஜன், ஜீவந்தரனைப் பற்றி விவரித்ததும், காஷ்டாங்காரன் இறந்தவன் போலானான். பலவிதமாகச் சிந்திக்கத் துவங்கினான்.

सत्यन्धरौ च सत्यस्मिन्सद्यो हन्त वयं हताः ।
वीरेण हि मही भोज्या योग्यतायां च किं पुनः ॥ 30

सत्यन्धरौ च - சத்யந்தர மஹாராஜநிடபுத்ரனான, अस्मिन्- ஜீவந்தரன், सति - உண்டாயுள்ளளவில், सद्यः - டக்கன், वयं - நாங்கள், हताः - கொல்லப்பட்டவர்கள், हन्त - கெட்ட கெட்ட, तथा वीरेण - வீரனாலே, मही - பூமியானது, भोज्या - போஜிக்கப்படுமது, योग्यतायां च - யோக்யத்திலேயும், किं पुनः - சொல்ல வேணுமோ. 30

பொருள் : - சத்யந்தரனின் புதல்வனான ஜீவந்தரன் இருக்கும்போது நாங்கள் அழிந்தோம். தகுதியுடைய வீரனால்தான் பூமி அனுபவிக்கப்பட வேண்டும் அல்லவா?

कथमेनं वाणिक्पाशं मथनोऽप्यवधीत्तदा ।
आत्मनीने विनात्मानमञ्जसा न हि कश्चन ॥ 31

वाणिक्पाशं - வணிகபாதனான, एनं - இவனை, मथनोऽपि- மதனனும், तथा - அப்பொழுது, कथं - எப்படி, अवधीत् - சொன்னான், आत्मनीने - தன்னுடைய காரியத்திலே, आत्मानं- தன்னை, विना - அன்றியிலே, अञ्जसा - நிச்சயித்ததனாலே, कश्चन - ஒருத்தனும், नहि - இல்லையன்றோ. 31

பொருள் : - இந்தக் கெட்ட வணிகனைக் கொன்றுவிட்டதாக அப்போது மதனன் (காஷ்டாங்காரனின் மைத்துனன்) கூறினானே ! எனது வேலையை முடிக்க, என்னைத் தவிர வேறு நம்பிக்கையானவர் ஒருவரும் இல்லையே !

दुराकूतः किमाहूतो मातुलोऽस्य मया मुधा ।
स्वबधाय हि मूढात्मा कृत्योत्थापनमिच्छति ॥ 32

अस्य - ஜீவந்தரனுடைய, मातुलः - மாமனானவன், मया- என்னாலே मुधा - வ்யர்தத்தினாலே, दुराकूतः - பாப கர்மமானது, किमाहूतः - அழைக்கப்பட்டதோ, तथा मूढात्मा - மூடாத்மாவானவன், स्वबधाय - தன்னை கொல்லுகிறதின் பொருட்டு, कृत्योत्थापनम् - காயோத்யோகத்தை, इच्छति - வாஹியாநின்றதன்றோ. 32

பொருள் : - கெட்ட எண்ணம் கொண்ட இந்தத் தாய்மாமனை நான் ஏன் வீணாக அழைத்தேன்? முட்டாள்தான் தற்கொலை செய்துகொள்ள வேதாளத்தை அழைப்பான்.

गोविन्दराजयुक्तोऽयं दुर्दान्तः किं विधित्सति ।
मरुत्सखे मरुद्धूते मह्यां किं वा न दह्यते ॥ 33

गोविन्दराजयुक्तः - கோவிந்தராஜனோடேகூடின, दुर्दान्तः - ஜெயிக்கிறதற்கு அரிதான, अयं - ஜீவந்தரன், किं - என்னத்தை, विधित्सति - வாஞ்சியாநின்றான், (तथा) मरुत्सखे - அக்னியானது, मरुद्धूते .- காத்தினால் செய்யப்பட்டுள்ளளவில், मह्यां - பூமியிலே, किं वा - என்னத்தைத்தான், न दह्यते - தகியாநின்றதல்ல. 33

பொருள் : - கோவிந்தராஜனுடன் சேர்ந்துள்ள, வெல்வதற்கு அரிதான ஜீவந்தரன் காற்றுடன் இணைந்த நெருப்புப் போல, எதைத்தான் அழிக்கமாட்டான்?

इति चिन्ताकुलं शत्रुं स्वामिमित्राणि चिक्षिपुः ।
विपदो वीतपुण्यानां तिष्टन्त्येव हि पृष्टतः ॥ 34

इति - என்று, चिन्ताकुलं - சிந்தாகுலமான, शत्रुं - சத்ருவை, स्वामिमित्राणि - ஸ்வாமிமித்ரர்கள், चिक्षिपुः - அதட்டினார்கள், (तथा) वीतपुण्यानां - புண்ணியமில்லாதவர் களுக்கு, विपदः - ஆபத்துக்கள், पृष्टतः - ப்ருஷ்டபாகத்தி நின்றும், तिष्टन्त्येव हि - இராநின்றதுகளன்றோ. 34

பொருள் : - இவ்வாறு சிந்தனைவயப்பட்ட எதிரி காஷ்டாங்காரனை, ஜீவந்தரனின் நண்பர்கள் மிரட்டத் தொடங்கினர். நல்வினைப்பயன் குறைந்தவர்களுக்கு, தீவினைகள் அவர்களுக்குப் பின்புறம் காத்துக்கொண்டிருக் கின்றன.

मत्सरी कौरवेणायं भर्त्सनादयुयुत्सत ।
मत्सराणां हि नोदेति वस्तुयाथात्म्यचिन्तनम् ॥ 35

कौरवेण - ஜீவந்தரனோடே, मत्सरी - மாத்சர்யத்தை யுடைய, अयं - காஷ்ட்டாங்காரன், भर्त्सनात् - அதட்டுகிறத்தி நின்றும், अयुयुत्सत - யுத்தம்பண்ண வேணுமென்று வாஞ்சித்தான், (तथा) मत्सराणां - மாத்ஸர்ய மானவர் களுக்கு, वस्तुयाथात्म्यचिन्तनम् - வஸ்து யாதாத்ம்யமான சிந்தனமானது, नोदेति हि - உதியாநின்றதில்லையன்றோ.

பொருள் : - ஜீவந்தரனைப் பார்த்துப் பொறாமைப் படும் காஷ்டாங்காரன் ஜீவந்தரனின் நண்பர்கள் தன்னை மிரட்டுவதைக் கண்டு, அவனுடன் போர்புரிய விரும்பினான். இப்பொருள் இப்படிப்பட்டது என்ற எண்ணம் பொறாமை கொண்டோர்க்கு ஏற்படாது அல்லவா?

केचित्कौरवतः केचिद्वैरितोऽप्य भवन्नृपाः ।
सुजनेतरलोकोऽयमधुना न हि जायते ॥ 36

केचित् नृपाः - சிறிது ராஜாக்கள், कौरवतः - ஜீவந்தர நிடத்திநின்று, केचित् नृपाः -சிறிது ராஜாக்கள், वैरिणोऽपि - வைரியான காஷ்டாங்காரநிடத்திநின்றும், अभवत् - ஆனார்கள், (तथाहि) सुजनेतरलोकः - சஜ்ஜனதுர்ஜனர்களோடு கூடியிருக்கிற, अयं - இது, अधुना - இப்பொழுது, जायते - உண்டாகாநின்றது, न हि - இல்லையன்றோ. 36

பொருள் : - ஒரு சில அரசர்கள் குரு வம்சத்தில் தோன்றிய ஜீவந்தரனின் பக்கமும், ஒரு சிலர் எதிரி காஷ்டாங்காரனின் பக்கமும் போருக்காக அணி வகுத்தனர். இவர்கள் நல்லோர், இவர் தீயோர் என்னும் பாகுபாடு இப்போது ஏற்பட்டது.

कौरवोऽप्याहवेऽराति लोकान्तरमजीगमत् ।
दुर्बला हि बलिष्टेन बाध्यन्ते हन्त संसृतौ ॥ 37

कौरवोपि - ஜீவந்தரனும், आहवे - யுத்தரங்கத்திலே, अरातिम् - சத்ருவை, लोकान्तरम् - லோகாந்தரத்தை, अजीगमत् - அடைவித்தான், (तथाहि) संसृतौ - சம்சாரத்திலே, दुर्बलाः - துர்பலர்கள், बलिष्टेन - பலிஷ்ட்டனாலே, बाध्यते हि- பாதிக்கப்பட்டார்கள் அன்றோ, हन्त - கெட்ட கெட்ட. 37

பொருள் : - கௌரவனான ஜீவந்தரன் போரில் காஷ்டாங்காரனைக் கொன்றான். இவ்வுலகில், வலிமை யுள்ளவர்கள் வலிமையற்றவர்களை எப்போதுமே துன்புறுத்துகின்றனர் அன்றோ ?

अथ संग्रामसंरम्भं कौरवोऽयमवारयत् ।
मुधा वधादि भीत्या हि क्षत्रिया व्रतिनो मताः ॥ 38

अथ - பிற்பாடு, संग्राम संरम्भं - யுத்தரங்கத்தினுடைய ப்ராரம்பத்தை, अयं - இந்த, कौरवः - ஜீவந்தரன், अवारयत् - தடையிட்டான், (तथाहि) क्षत्रियाः - ராஜாக்கள், मुधा - வ்யர்த்தத்தினாலே, वधादिभीत्या - வதை முதலான பயத்தினாலே, व्रतिनः - விரதத்தை உடைத்தானவர்கள், मता हि - உடன்படப்பட்டவர்களன்றோ. 38

பொருள் : - பிறகு ஜீவந்தரன் போரை ஒரு முடிவுக்குக் கொண்டுவந்தான். உண்மையான வீரர்கள் அச்சத்தை ஏற்படுத்தும் உயிர்க்கொலையை வீணாகச் செய்ய மாட்டார்கள்.

वीरसूर्विजया जाता वीरपत्नी च मे सुता ।
इत्युक्त्वा मातुलोऽप्येनमानन्दादभ्यनन्दयत् ॥ 39

विजया - விஜயமஹாதேவி, वीरसूः - வீரனான புத்ரனை யுடைத்தானவளும், जाता - ஆனாள், मे - என்னுடைய, सुता- புத்ரியும், वीरपत्नी च - வீரத்துக்கு பத்னியானவளுமானாள், इति - என்று, उक्त्वा - சொல்லி, मातुलोऽपि - மாமனும், एनं - ஜீவந்தரனை, आनन्दात् - சந்தோஷத்திநின்றும், अभ्यनन्दयत्- சந்தோஷிப்பித்தான். 39

*பொருள் :* - 'அரசி விஜயமாதேவி, வீரனைப் பெற்றவளாக ஆயினள். என் மகளும் வீரனின் மனைவியாயினள்' என்று கோவிந்தராஜன் தனது மகிழ்ச்சியைக் கொண்டாடினான்.

समन्ततः समायाताः सामन्तास्तं सिषेविरे ।
समौ हि *नाद्यसभ्यानां संपदां च लयोदयौ ॥ 40

समन्ततः - எங்குநின்றும், समायाताः - வந்திருக்கிற, सामन्ताः - சாமந்தர்கள், तं - ஜீவந்தரனை, सिषेवि - சேவித்தார்கள், (तथा) संपदां - சம்பத்துக்களுடைய, लयोदयौ- நாசமும் உதயமும், आद्यसभ्यानां - உயர்ந்த சான்றோர் களுக்கு, न समौ हि - சமானங்களன்றோ. 40

*பொருள் :* - எல்லா இடங்களினின்றும் வந்திருந்த சிற்றரசர்கள் ஜீவந்தரனை வணங்கினர். செல்வத்தின் எழுச்சியும் வீழ்ச்சியும் உயர்ந்த சான்றோர்களுக்கு சமம் இல்லையா ?

राजपुर्यामगाच्चायमभिषेक्तुं जिनालयम् ।
भगवद्दिव्यसान्निध्ये निष्प्रत्यूहा हि सिद्धयः ॥ 41

अयं - ஜீவந்தரன், राजपुर्यां - ராஜபுரியிலே, अभिषेक्तुम् - அபிஷேகம் பண்ணுகிறதற்கு, जिनालयम् - ஜினாலயத்தை, अगात् - அடைந்தான், (तथा) भगवद्दिव्यसान्निध्ये - பகவானுடைய திவ்ய சன்னிதியிலே, निष्प्रत्यूहाः - விக்னங்கள் இல்லாமல், सिद्धयो हि - சிந்திக்கிறதுகளன்றோ. 41

---

1. em. नाट्यसभ्यानां, Ptd, Ed., p. 112.

பொருள் : - முடிசூட்டிக்கொள்வதற்காக ஜீவந்தரன் தலைநகரில் உள்ள ஜைன ஆலயத்துக்குச் சென்றான். இறைவனது* இருப்பிடத்தில் இடையூறில்லாமல் எல்லாவற்றையும் அடைய முடியும் அல்லவா ?

तावता सन्यधात्तत्र यक्षो यक्षचरो मुदा ।
फलमेव हि यच्छन्ति पनसा इव सज्जनाः ॥ 42

तावता - அவ்வளவினாலே, तत्र - அவ்விடத்திலே, यक्षचरः - நாயாயிருந்த, यक्षः - யக்ஷனானவன், मुदा - சந்தோஷத்தினாலே, सन्यधात् - வந்தான், (तथा) पनसाः - பலா மரங்கள், इव - போல சஜ்ஜனர்கள், फलमेव - பலத்தையே, यच्छन्ति - கொடாநின்றார்களன்றோ. 42

பொருள் : - முன்பு நாயாக இருந்து ஜீவந்தரனால் மீண்டும் யக்ஷனாக மாற்றப்பட்ட அந்த யக்ஷன் அப்போது மகிழ்ச்சியுடன் அங்கு தோன்றினான். சான்றோர்கள் பலா மரங்கள் போல, (இனிப்பான) பயன்களையே (பழங்களையே) அளிக்கிறார்கள்.

अथ गोविन्दराजेन यक्षराजो यथाविधि ।
अभ्यषिञ्चन्महाराजं कौरवं गुरुगौरवात् ॥ 43

अथ - பிற்பாடு, गोविन्दराजेन - கோவிந்தராஜனோடே, यक्षराजः - யக்ஷராஜனானவன், यथाविधि - விதிக்ரமமாக, कौरवं - குருகுலத்தின், महाराजं - மஹாராஜனை, गुरुगौरवात् - பெரிதான வாத்ஸல்யத்திநின்றும், अभ्यषिञ्चत् - அபிஷேகம் பண்ணினான். 43

---

* ஜைனர்கள் இறைக்கொள்கையை மறுப்பவர்களாயினும் மஹாவீரரை உருவ வழிபாடு செய்யத் துவங்கிய பின்னர், மஹாவீரரே இறைவன் என்ற கொள்கையுடைத்தராயினர்.

பொருள் :- பிறகு கோவிந்தராஜனைக்கொண்டு குரு வம்சத்தைச் சேர்ந்த ஜீவந்தரனுக்கு யக்ஷர்களின் அரசன் சிறந்த முறையிலான மரியாதைகளோடு முடி சூட்டினான்.

अयादापृच्छ्य राजेन्द्रं यक्षेन्द्रोऽपि स्वमन्दिरम् ।
न ह्यासक्त्या तु सापेक्षो भानुः पद्मविकासने ॥ 44

यक्षेन्द्रोऽपि - யக்ஷேந்திரனும், राजेन्द्रं - ராஜேந்திரனை, आपृच्छ्य - கேட்டு, स्वमन्दिरं - தன்னுடைய மனையை, अयात्- அடைந்தான், (तथा) तु - பின்னை, भानुः - சூர்யன், पद्मविकासने- பத்மவிகாசனத்திலே, सापेक्षः - அபேக்ஷையுடன்கூட, आसक्त्या - ஆசக்தியினாலே, नहि - இல்லையன்றோ. 44

பொருள் : - யக்ஷர்களின் அரசனும், அரசனான ஜீவந்தரனிடம் அனுமதி பெற்று, தன் இருப்பிடம் சென்றான். தாமரை மலர்வதில் ஈடுபாடும், விருப்பமும் கொண்டவனாகத்தானே சூரியன் இருப்பான்!

तर्पिताखिललोकोऽस्मात् सौधाभ्यन्तरमाश्रितः ।
सिंहासनमलञ्चक्रे राजसिंहः क्रमागतम् ॥ 45

तर्पिताखिललोकः - த்ருப்திப் பண்ணப்பட்ட சமஸ்த லோகத்தை யுடைத்தான் ஜீவந்தரன், अस्मात् - இங்கு நின்றும், सौधाभ्यन्तरम् - சௌந்தாப்யந்திரத்தை, आश्रितः - அடைந்திருக்கிற, राजसिंहः - ராஜஸ்ரேஷ்ட்டனானவன், क्रमागतम् - பாரம்பர்யமாய் வந்து, सिंहासनम् - சிம்ஹாசனத்தை, अलंचक्रे - அலங்கரித்தான். 45

பொருள் : - எல்லா மக்களையும் மகிழ்வித்த பின்னர் ஜீவந்தரன் ஜினாலயத்திலிருந்து புறப்பட்டு அரண்மனை வந்தடைந்தான். அரசர்களுக்குள் சிங்கம் போன்ற அவன், அங்கு முறைப்படி தனக்கு வந்திருக்கும் அரியணையில் அமர்ந்தான்.

तद्वृत्तान्तवितर्कोऽभूल्लोके विस्मयबृंहितः ।
अतर्क्यसंपदापद्भ्यां विस्मयो हि विशेषतः ॥ 46

लोके - லோகத்திலே, विस्मयबृंहितः - ஆச்சர்யத்தை வர்த்திப்பிக்கிறதான, तद्वृत्तान्तवितर्कः - ஜீவந்தரனுடைய, वृत्तान्तं - விசாரமானது, अभूत् - ஆச்சுது, (तथा) अतर्क्य-संपदापद्भ्यां - விசாரிக்கப்போகாத ஸம்பத் ஆபத்துக்களி நின்றும் विशेषतः - விசேஷத்திநின்றும், विस्मयो हि - ஆச்சரியமன்றோ. 46

பொருள் : - இந்த நடப்பை உலகத்தினர் மிக்க வியப்புடன் பேசிக்கொண்டார்கள். தாங்கள் சந்திக்காத உயர்வு தாழ்வுகளைப் பற்றிய செய்திகள், அவற்றைக் கேட்பவர்களிடம் வியப்பை மட்டுமே ஏற்படுத்தும்.

क्व पूज्यं राजपुत्रत्वं प्रेतावासे क्व वा जनिः ।
क्व वा राज्यपुनःप्राप्तिरहो कर्मविचित्रिता ॥ 47

पूज्यराजपुत्रत्वं - பூஜ்யமான ராஜபுத்ரத்வமானது, क्व- எங்கே, प्रेतावासे - ச்மசானபூமியிலே, अजनि - ஜனித்து, क्व - எங்கே, पुनः - பிற்பாடு, राज्ये -ராஜ்யத்திலே, प्राप्तिः - ப்ராப்தியானது, क्व वा - எங்கேதான், कर्मविचित्रिता - கர்மவிசித்ரத்வமானது, अहो - ஆச்சரியம். 47

பொருள் : - போற்றத்தக்க அரசனுக்கு மகனாக உதித்ததெங்கே ? சுடுகாட்டில் பிறந்ததெங்கே ! அரசைத் திரும்பப் பெற்றதெங்கே ? விதியின் விசித்திரத்தை என்ன சொல்வது ?

पुण्यपापादृते नान्यत्सुखे दुःखे च कारणम् ।
तन्तवो न हि लूतायाः कूपपातनिरोधिनः ॥ 48

पुण्यपापात् - புண்ணிய பாபத்திநின்றும், ऋते - அன்றியிலே, सुखदुःखे च - சுகதுக்கங்கள், कारणम् - காரணமானது, अन्यत् - மற்றொன்று, नहि - இல்லையன்றோ, (तथा) लूतायाः - சிலந்திப் பூச்சியினுடைய, तन्तवः - நூல்கள், कूपपातनिरोधिनः - கிணத்திலே விழுகிறதைத் தடையிடுகிறது, न हि - இல்லையன்றோ. 48

**பொருள் : - நல்வினைகளும் தீவினைகளுமே இன்பத்துக்கும் துன்பத்துக்கும் காரணமாகின்றன. சிலந்திவலையால் ஒரு மனிதனைக் கிணற்றில் விழாமல் காப்பாற்ற முடியாது.**

हत्वा जिघांसुमात्मानं लेभे राज्यं जिघांसितः ।
भाव्यवश्यं भवेदेव न हि केनापि रुध्यते ॥ 49

जिघांसितः - கொல்லவேணுமென்று இச்சையுடைய ஜீவந்தரன், आत्मानं - தன்னை, जिघांसुम् - கொல்ல வேணுமென்று வாஞ்சையுடைய காஷ்ட்டாங்காரனை, हत्वा கொன்று, राज्यं - ராஜ்யத்தை, लेभे - பெற்றான், (तथा) भावि - வருகிறதானது, अवश्यं - நிச்சயமாக, भवेदेव - ஆகக்கடவது, केनापि - ஒருத்தனாலேயும், रुध्यते - தடையிடப்படாநின்றது, न हि - இல்லையன்றோ. 49

பொருள் : - தன்னைக் கொல்ல எண்ணியவனைக் கொன்று, ஜீவந்தரன் அரசை அடைந்தான். வருவதை யாராலும் தடுக்க இயலாது.

* जिजीविषाप्रपञ्चेन जातोऽयं राजवञ्चकः ।
काष्टाङ्गारोऽपि नष्टोऽभूत्स्वयं नाशी हि नाशकः ॥ 50

राजवञ्चकः - ராஜாவினிடத்திலே வஞ்சகனான, जिजीविषाप्रपञ्चेन - ஜீவிக்கவேணுமென்று இருக்கிற பிரபஞ்சத்திலே, जातः - உண்டான, अयं - இந்த, काष्टाङ्गारोऽपि- காஷ்ட்டாங்காரனும், नष्टः - நாசமான, अभूत् - ஆனான், स्वयं- தானே, नाशकः - கெடுக்க வேணுமென்கிறவன், नाशी हि - கெடாநின்ற தன்றோ. 50

பொருள் : - அரசனை வஞ்சனையால் கொன்று விட்டு, தான்மட்டும் வாழவேண்டுமென்றெண்ணிய இந்தக் காஷ்டாங்காரனும் அழிந்தான். பிறரைக் கெடுக்க நினைப்பவன், தானே கெடுவான்.

यक्षः क्षणोपकारेण प्राणदायी बभूव सः ।
काष्टाङ्गारः कृतघ्नोऽभूत्स्वभावो न हि वार्यते ॥ 51

क्षणोपकारेण - க்ஷணோபகாரணத்தினாலே, सः यक्षः - அந்த யக்ஷனானவன், प्राणदायी - ப்ராணனைக் கொடுக்கிறவன், बभूव - ஆனான், काष्टाङ्गारः - காஷ்ட்டாங்காரனானவன், कृतघ्नः - செய்த நன்றியைக் கெடுக்கப்பட்டவன், अभूत् - ஆனான், (तथा) स्वभावः - ஸ்வபாவமானது, वार्यते - தடையிடப்படாநின்றது, नहि - இல்லையன்றோ. 51

---

* கெடுவான் கேடு நினைப்பான் (பழமொழி)

பொருள் : - ஒரு கணநேர உதவியைக் கொண்டு அந்த யக்ஷன் உயிரைக் காப்பாற்றுபவனாக மாறினான். காஷ்டாங்காரன் செய்நன்றி கொன்றவனாயினன். ஒருவனது தன்மையை மாற்ற இயலாது.

अपकारोपकाराभ्यां सदसन्तौ न भेदिनौ ।
*दग्धं च भाति कल्याणं केनाङ्गारविशुद्धता ॥ 52

अपकारोपकाराभ्यां - அபகாரோபகாரங்களினாலே, सदसन्तौ - சஜ்ஜனர்கள், न भेदिनौ - பேதிக்கப்படுமவர்களல்ல, (तथा) कल्याणं - ஸ்வர்ணமானது, दग्धं च - சுடப்பட்டாலும், भाति - விளங்காநின்றது, अङ्गारविशुद्धता - கரிசுத்தத்வமாகிறது, केन - எதனாலே. 52

பொருள் : - உதவியோ அல்லது கெடுதலோ, சான்றோர்களையோ அல்லது தீயவர்களையோ மாற்றுவதில்லை. நெருப்பில் வைத்து உருக்கினாலும் (பொசுக்கினாலும்) பொன்னின் நிறம் மாறுவதில்லை. கரியும் நிறம் மாறுவதில்லை. அதாவது சான்றோர்கள் இன்பத்திலும் துன்பத்திலும் தங்கள் நற்குணங்களை விடுவதில்லை. தீயவர்களும் தீச்செயல்களை விடுவதில்லை. நெருப்பில் போட்டு உருக்கினாலும் பொன்னின் நிறம் மாறாது. அதே நெருப்பில் கரியைப் போட்டுப் பொசுக்கினாலும் கரியும் தன் நிறம் மாறாது. (स्वभावो दुरतिक्रमः)

---

* சுடினுஞ் செம்பொன் றன்னொளி கெடாது
ஆற்றுப் பெருக்கற்றடி சுடுமன்னா மவவா
நாற்றுப் பெருக்காலுல கட்டும் - ஏற்றவற்கு
நல்லகுடி பிறந்தார் நல்கூர்ந் தாரானுலு
மில்லை யென மாட்டாரிசைந்து (நல்வழி)

रिक्तारिक्तदशायां च सदसन्तौ न भेदिनौ ।
खातापि हि नदी दत्ते पानीयं पानीयं न पयोनिधिः ॥ 53

रिक्तारिक्तदशायाश्च - தரித்ர சம்பத்து வந்த அவஸ்தையிலேயும், सदसन्तौ - சஜ்ஜனதுர்ஜனர்கள், न भेदिनौ - பேதிக்கப்படுமவர்களல்ல, (तथा) नदी - நதீயானது, खातापि - வெட்டப்பட்டாலும், पानीयं - ஜலத்தை, दत्ते - கொடாநின்றது, पयोनिधिः - சமுத்ரமானது, नहि - இல்லையன்றோ.

*பொருள் :- ஏழ்மை, செல்வம் இவ்விரண்டு நிலைகளிலும் சான்றோர்களும் தீயோர்களும் தம் நிலை மாறுவதில்லை. நதியின் படுகையை வெட்டினாலும் (தோண்டினாலும்) நதி குடிநீரைத்தான் தரும். கடல் அப்படியல்ல. உவர்நீரைத்தான் தரும்.*

इतीयं किंवदन्ती च तद्देशे शंवदाप्यभूत् ।
राजन्वती सती भूमिः कुतो वा न सुखायते ॥ 54

तद्देशे - அந்த தேசத்திலே, इति - என்று, इयं किंवदन्ती च- எந்த ஜனஸ்ருதீயும், शंवदापि - சுகத்தைச் சொல்லுகிறதும், अभूत् - ஆச்சுது, (तथा) राजन्वती - ராஜநீதியோடே கூடின, सती - ப்ரஸஸ்தமான, भूमिः - பூமியானது, कुतो वा - என்ன காரணத்திநின்றுந்தான், न सुखायते - சுகமாக ஆசரியா நின்றதல்ல. 54

*பொருள் :- இவ்வாறாக அந்நாட்டு மக்கள் உரையாடிக் கொண்டார்கள். அரசனுடன் சேர்ந்த அந்த நாடு இன்பத்தைத் தவிர, வேறு எதனை அடைய முடியும் ?*

काष्टाङ्गारकुडुम्बस्याप्यनुमेने सुखासिकाम् ।
स्वस्थानेऽपि महाराजो न ह्यास्थानेऽपि रुट् सताम् ॥55

महाराजः - ஜீவந்தரமஹாராஜாவானவன், स्वस्थानेपि - ஸ்வஸ்தானத்திலேயும், काष्टाङ्गारकुटुम्बस्यापि - காஷ்ட்டாங்காரனுடைய குடும்பத்துக்கும், सुखासिकां - சுகமாக இருக்கிறதை, अनुमेने - எண்ணினான், (तथा) सतां - சத்புருஷர்களுக்கு, रुट् - கோபமானது, अस्थानेऽपि - ஸ்தானமல்லாதத்திலேயும், नहि - இல்லையன்றோ. 55

*பொருள் : - ஜீவந்தரன், தனக்கு எதிரியாக விளங்கிய காஷ்டாங்காரனின் குடும்பத்தினரைத் துன்புறுத்த விரும்ப வில்லை. மாறாக அவர்கள் இன்புற்று இருக்கவே விரும்பினான். சான்றோர்கள் தங்கள் எதிரிகளின் மீதுகூடச் சினம் கொள்வதில்லை.*

यौवराज्ये च नन्दाढ्यं वृद्धक्षत्रोचिते पदे ।
गन्धोत्कटं च चक्रेऽसौ लोकवन्द्ये च मातरौ ॥ 56

असौ - ஜீவந்தரனானவன், यौवराज्ये च - யௌவராஜ்ய பதத்திலேயும், नन्दाढ्यं - நந்தாட்யனையும், वृद्धक्षत्रोचिते - விருத்த க்ஷத்ரியர்களுக்கு யோக்யமானவன், पदे - ஸ்தானத்திலேயும், गन्धोत्कटं च - கந்தோத்கடனையும், चक्रे- பண்ணினான், मातरौ - இரண்டு தாய்மார்களையும், लोकवन्द्ये- லோகவந்த்யர்களாகவும் பண்ணினான்.

*பொருள் : - பிறகு ஜீவந்தரன், நந்தாட்யனை (வணிகன் கந்தோத்கடன் சுனந்தா ஆகியோருக்குப் பிறந்த மகன்) இளவரசனாகவும், ஜீவகனின் வளர்ப்புத் தந்தையும், நந்தாட்யனின் தந்தையுமான கந்தோத்கடனை வயது முதிர்ந்த அரசனுக்குரிய பதவியிலும் அமர்த்தினான். இவ்வாறு தனது தாய் விஜயாவையும் தனது வளர்புத்தாய் சுனந்தாவையும் உலகினர் போற்றும்படி செய்தான்.*

अकरामकरोद्धात्रीं वर्षाणि द्वादशाप्ययम् ।
महिषैः क्षुभितं तोयं न हि सद्यः प्रसीदति ॥ 57

अयं - ஜீவந்தரன், द्वादशापि वर्षाणि - பன்னிரண்டு வர்ஷங்களும், धात्रीं- பூமியை, अकराम् - வரியில்லாமல், अकरोत् - பண்ணினான், (तथा) महिषैः - எருமைகளினாலே, क्षुभितं - கலக்கப்பட்ட, तोयं - ஜலம், सद्यः - சீக்கிரமாக, प्रसीदति - தெளியாநின்றது, नहि - இல்லையன்றோ. 57

*பொருள் : - பிறகு இவ்வாறு ஜீவந்தரன் பன்னிரண்டு வருடங்கள், மக்களுக்கு வரிவிதிக்காமல் ஆட்சி செயதான். எருமைகளால் கலக்கப்பட்ட நீர் விரைவாகத் தெளியாதன்றோ!*

पद्मवक्त्रादिमित्रेभ्यो यथायोग्यमदात्पदम् ।
अविशेषपरिज्ञाने न हि लोकोऽनुरज्यते ॥ 58

पद्मवक्त्रादिमित्रेभ्यः - பத்மமுகன் முதலான மித்ரர்கள் பொருட்டு, पदं - ஸ்தானத்தை, यथायोग्यम् - யதா யோக்யமாக, अदात् - கொடுத்தான், (तथा) अविशेषपरिज्ञाने- விசேஷ பரிஞானமில்லாதத்திலே, लोकः - ஜனமானது, अनुरज्यते - சந்தோஷப்படாநின்றது, न हि - இல்லையன்றோ.

*பொருள் : - பத்மமுகன் முதலான நண்பர்களுக்கு, தகுதியான பதவிகளை அளித்தான். சிறப்பான அறிவுடையவர்களிடத்தில் மக்கள் மிகுந்த ஈடுபாடு கொள்வார்கள் அல்லவா ?*

पद्मादयोऽपि तद्देव्यः समागत्य तदाज्ञया ।
तं समीक्ष्य क्षणे चासन्क्षीणाखिलमनोन्यथा ॥ 59

पद्मादयोऽपि - பத்மை முதலான, तद्देव्यः - ஜீவந்தரன் தேவிமார்களும், तदाज्ञया - ஜீவந்தரனுடைய ஆக்ஞை யினாலே, समागत्य - வந்து, तं - ஜீவந்தரனை, समीक्ष्य - பார்த்து, क्षणे च - க்ஷணத்திலேயும், क्षीणाखिलमनोव्यथाः - கெடப்பட்ட சமஸ்த மனோதுக்கத்தையுடைத்தானவர்கள், आसन् - ஆனார்கள். 59

*பொருள் : - பத்மா முதலான அவனது (ஜீவந்தரனது) மனைவியர், அவனது ஆணைப்படி வந்து சேர்ந்தனர். அவனைப் பார்த்தவுடனேயே அவனது பிரிவால் ஏற்பட்ட வருத்தம் நீங்கியவர்களாக அவர்கள் ஆயினர்.*

चिरस्थाय्यपि नष्टं स्याद्विरुद्धार्थे हि वीक्षिते ।
सन्निधावपि दीपस्य किं तमिस्रं गुहामुखम् ॥ 60

विरुद्धार्थे - விருத்தமானது, हि - ஸ்புடமாக, वीक्षिते - பார்க்கப்பட்டுள்ளளவில், चिरस्थाय्यपि - பகுகாலமிருக் கிறதும், नष्टं - நாசமானது, स्यात् - ஆகக்கடவது, (तथा) दीपस्य - தீபத்தினுடைய, सन्निधावपि - சன்னிதியிலேயும், गुहामुखं - குஹா முகமானது, तमिस्रं - இருட்டானது, किं - என்ன. 60

*பொருள் : - வெகுகாலமாக ஒரு பொருள் இருப்பினும், அதற்கு மாறான ஒன்றைக் கண்டவுடன் அது அழிந்து விடுகிறது. விளக்கின் ஒளி சிறிதாக விளங்கினாலும் இருள் சூழ்ந்த குகையின் வாயில் புலப்படும் அல்லவா ? (இதுவரை மக்கள் காஷ்டாங்காரனின் ஆட்சியில் இருளாகிய துயரையே கண்டிருந்தனர். ஜீவந்தரன் என்ற ஒளி தோன்றியவுடன் துயர் மறைந்துவிட்டது என்பது பொருள்)*

अथायं नयतः पुत्रीं दत्तां गोविन्दभूभुजां ।
पर्यणैषीन्महाराजः पार्थिवैर्विहितोत्सवः ॥ 61

अथ - பிற்பாடு, नयतः - முறைப்படி, पुत्रीं - புத்ரியான, गोविन्दभूभुजाः - கோவிந்தராஜாவினாலே, दत्तां - கொடுக்கப் பட்ட, लक्ष्मणां - லக்ஷ்மணையை, पार्थिवैः - ராஜாக்களினாலே, विहितोत्सवः - பண்ணப்பட்ட உத்ஸவத்தை உடைய, अयं - இந்த, महाराजः - ஜீவந்தரமஹாராஜாவானவன், पर्यणैषीत् - விவாஹம் பண்ணினான். 61

इति श्रीमद्वादीभसिंहसूरिविरचिते क्षत्रचूडामणौ
लक्ष्मणालम्भो नाम दशमो लम्भः ॥

*பொருள் : - பிறகு அவன் கோவிந்தராஜனின் புதல்வியை முறைப்படி மணம் முடித்தான். அங்கு வந்திருந்த அரசர்கள் அதனை விழாவாகக்கொண்டாடினர்.*



# एकादशोलम्भः
# मुक्तिश्रीलम्भः
## முக்திஸ்ரீலம்பம்

अथ राज्यश्रिया लब्ध्वा लक्ष्मणां मुमुदे कृती ।
चिरकाङ्क्षितलाभे हि तृप्तिः स्यादतिशायिनी ॥ 1

अथ - பிற்பாடு, कृती - புண்ணியவானான ஜீவந்தரன், राज्यश्रिया - ராஜ்யஸ்ரீயோடே, लक्ष्मणाम् - லக்ஷ்மணையை, लब्ध्वा - பெற்று, मुमुदे - சந்தோஷித்தான், (तथा) चिरकाङ्क्षित लाभे - பகுகாலம் வஞ்சிக்கப்பட்டது, तृप्तिः - சந்தோஷ மானது, अतिशायिनी - அதிசயத்தை உடையது, स्याद्धि - ஆகக்கடவதன்றோ. 1

*பொருள் : - பிறகு செயல் முடித்த ஜீவந்தரன் அரசாகிய செல்வத்தையும், லக்ஷ்மணா என்ற மனைவியையும் பெற்று மிகுந்த மகிழ்ச்சி அடைந்தான். காத்திருந்து பெற்ற மனநிறைவு அதனுடைய அளவைக் காட்டிலும் மிக அதிகமாக உணரப்படுகின்றது.*

लब्ध्वा राज्यमयं राजा रेजे सर्वगुणैरपि ।
काचो हि याति वैगुण्यं गुण्यतां हारगो मणि ॥ 2

अयं राजा - இந்த ஜீவந்தரராஜன், राज्यं - ராஜ்யத்தை, लब्ध्वा- பெற்று, सर्वगुणैरपि - சர்வகுணங்களினாலேயும், रेजे- விளங்கினான், (तथा) काचः - வளையில் கல்லானது, वैगुण्यं- விகுணத்தை, याति - அடையாநின்றது, हारगः - முத்துமாலையை அடைந்திருக்கிற, मणिः - ரத்னமானது, गुण्यतां - குண்யத்வத்தை, याति हि - அடையாநின்றதன்றோ.

பொருள் : - கழுத்தில் அணியும் ஹாரத்தில் காணப்படும் விலைமதிப்பற்ற மணியுடன் ஒப்பிடும்போது வெறும் கண்ணாடிக்கல் தன் மதிப்பை இழக்கின்றதன்றோ.

कृतिनामेकरूपा हि वृत्तिः संपदसंपदोः ।
न हि नादेयतोयेन तोयधेरस्ति विक्रिया ॥ 3

कृतिनां - புண்யஜீவன்களுக்கு, संपदसंपदोः - சம்பத்து விபத்துக்களிலே, वृत्तिः - வர்த்தனையானது, एकरूपा हि - ஸமானரூபமன்றோ, (तथा) नादेयतोयेन - நதியினுடைய ஜலத்தினாலே, तोयधेः - ஸமுத்ரத்துக்கு, विक्रिया - விகாரமானது, अस्ति - உண்டாகாநின்றது, नहि - இல்லையன்றோ. 3

பொருள் : - செயல் முடிப்பவர்களுக்கு செல்வங்களும் ஏழ்மையும் ஒரே மாதிரியானவை. பல நதிகள் வந்து கலப்பதால் கடல் நீரின் சுவையில் எந்தவிதமான மாற்றமும் இல்லை.

सुखदुखे प्रजाधीने तदाभूतां प्रजापतेः ।
प्रजानां जन्मवर्जं हि सर्वत्र पितरौ नृपाः ॥ 4

प्रजापतेः - ராஜாவுக்கு, तदा - அப்பொழுது, प्रजाधीने - ப்ரஜைகளுடைய ஆதீனமான, सुखदुःखे - சுகதுக்கங்கள், अभूतां - ஆச்சுதுகள், (तथा) प्रजानां - ப்ரஜைகளுக்கு, सर्वत्र - எல்லாவிடத்திலே, नृपाः - ராஜாக்கள், जन्मवर्जम् - ஜன்மம் தவிர, पितरौ हि - தாய்தகப்பனன்றோ.

பொருள் : - மக்களுடைய இன்ப துன்பங்கள் அரசனுடைய இன்ப துன்பங்களாக ஆகும் போது பிறப்பைத் தவிர மற்ற எல்லா செயல்களிலும் அரசரே மக்களுக்கு தாய் தந்தையர் ஆகின்றார்.

आसीत्प्रीतिकरं तस्य करदानं च दानवत् ।
वृषलाः किं न तुष्यन्ति शालेये बीजवापिनः ॥ 5

तस्य - ஜீவந்தரனுக்கு, करदानं च - வாரிக் கொடுக்கிறதும், दानवत् - தானமானதுபோல, प्रीतिकरं- ப்ரீதியை பண்ணுகிறது, आसीत् - ஆச்சுது, (तथा) शालेये - நெல் விளைகிற க்ஷேத்திரத்திலே, बीजवापिनः - விரைக்கப்பட்டிருக்கிற, वृषलाः - க்ருஷிவலர்கள், किं न तुष्यन्ति - ஏன் சந்தோஷியா நின்றார்களல்ல. 5

*பொருள் : - அரசன் ஜீவன்தரனுக்கு கொடுக்கும் வரியைக்கூட மக்கள் மகிழ்ச்சியுடன் கொடுத்தார்கள். உழவர்கள் நெல்விளையும் வயலில் விதையை விதைப்பதில் மிக்க மகிழ்கிறார்கள் அன்றோ. (வயலில் விதையை விதைப்பது அது பயிராகி அதிகப் பயனைக் கொடுப்பதற்காக, அதே போல அரசனிடம் வரிகொடுப்பது அதுவே பல்கிப் பெருகி மக்களை மீண்டும் வந்தடைவதற்காக. ஆகவே வரிகொடுப்பதற்கு மக்கள் மிகவும் விரும்பினர். ஏனெனில் ஜீவந்தரனைப் போன்ற அரசன் அந்த வரிப் பணத்தை மக்களின் நன்மைக்காகவே செலவிடுவான் என்ற காரணத்தால்)*

मित्रोदासीनशत्रूणां विषयेष्वपसर्पतः ।
तदज्ञानेऽपि तदज्ञानात्तदैवासीत्प्रतिक्रिया ॥ 6

मित्रोदासीनशत्रूणां - மித்ர உதாசீன சத்ருக்களுடைய, विषयेषु - விஷயங்களிலே, अपसर्पतः - விலகி இருக்கிற, तत् ज्ञानात् - அதை அறிந்ததினின்றும், तदज्ञानेऽपि - அது அறியாதத்திலேயும், तदैव - அதுவே, प्रतिक्रिया - ப்ரதிக்ரியையானது, आसीत् - ஆச்சுது. 6

பொருள் : - நண்பன், உதாஸீனன், எதிரி ஆகிய இம்மூவரின் தொடர்புடைய செய்திகளில் ஜீவந்தரன் விலகி இருந்த போதிலும் அவன் அறிவுக் கூர்மையால் அவர்களைப் பற்றி நேரடியாக அறியாமலேயே, அவர்கள் சம்மந்தப்பட்ட செயல்களில் இவன் தக்கவாறு மறு செயல்களைச் செய்தான். (ஒரு அரசனுக்கு நட்பு, பகை இவை இரண்டையும் பாராட்டாத சமநோக்குடைய அரசர்கள், பகை அரசர்கள், என்று மூன்றுவிதமாக அண்டை நாட்டினர் அமைவர். நட்புக் கருதி, ஒரு நாட்டின் மீது படை எடுக்காமல் இருப்பதோ, சமநிலையில் இருக்கிறான் என்பதற்காக சந்தேகிப்பதோ, பகையாக இருக்கிறான் என்பதற்காக படைஎடுப்பதோ, ஒரு அரசனால் இயலாத செயல். ஜீவந்தரனைப் பொருத்த வரை அவன் நண்பன் என்பதற்காக மிகுந்த உரிமையோ, சமநிலையானவன் என்பதற்காக எச்சரிக்கையோ, பகைவன் என்பதற்காக காழ்ப்போ கொள்ளாமல், அவர்களை அறிந்து வரும் பொருட்டு, ஐந்தாம் படையையும் பயன்படுத்தாமல், தனது அறிவுகூர்மையால் அவர்களை உணர்ந்து அதற்கு ஏற்றாற்போல் செயலாற்றி வந்தான் என்பது கருத்து)

रात्रिंदिवविभागेषु नियतो नियतिं व्यधात् ।
कालातिपातमात्रेण कर्तव्यं हि विनश्यति ॥ 7

रात्रिंदिवाविभागेषु - ராத்ரி பகல் விபாகங்களிலே, नियतः- நிச்சயமாய், नियतिं - காலத்தை, व्यधात् - பண்ணினான், (तथा) कालातिपातमात्रेण - காலாதீதக்ரமத்தினாலே, कर्तव्यं - பண்ணுகிற கார்யம், विनश्यति हि - கெடாநின்றதன்றோ. 7

பொருள் : - இரவு மற்றும் பகல் வேலைகளில் செய்யவேண்டிய கடமைகளை ஜீவகன் வரையறை செய்து வைத்திருந்தான். காலம் தாழ்த்துதலால் கடமைகள் அழிந்து போகின்றன.

तपसा हि समं राज्यं योगक्षेमप्रपञ्चतः ।
प्रमादे सत्यधःपातादन्यथा च महोदयात् ॥ 8

योगक्षेमप्रपञ्चतः - யோகக்ஷேமபிரபஞ்சத்தினின்றும், राज्यं - ராஜ்யமானது, तपसा - தபஸோடே, समं हि - சமானமன்றோ, (तथा) प्रमादे - ப்ரமாதமானது, सति - உண்டாயுள்ளளவில், अधःपातात् - கீழே விழுகிறத்தி னின்றும், अन्यथा च - அல்லாவிட்டால், महोदयात् - மஹத்தான ஐச்வர்யத்திநின்றும். 8

*பொருள் : - மிகுந்த முயற்சியில் கிடைத்த ஒரு அரசை காப்பாற்றுவது என்பது தவம் இயற்றுவதற்கு சமமானது. சிறிது மயக்கத்தினால், வீழ்ச்சியும், கவனம் தவறாமையால் உயர்வும் ஏற்படுகிறது.*

प्रबुद्धेऽस्मिन्भुवं कृत्स्नां रक्षत्येकपुरीमिव ।
राजन्वती च भूरासीदन्वर्थं रत्नसूरपि ॥ 9

प्रबुद्धे - வர்த்திக்கப்பட்டிருக்கிற, अस्मिन् - ஜீவந்தரன், एकपुरीमिव - ஒரு பட்டணத்தைப்போல, कृत्स्नां - ஸமஸ்தமான, भुवं - பூமியை, रक्षति - ரக்ஷித்துள்ளளவில், राजन्वती च - ராஜநீதியுடனுங்கூடின, भूः - பூமியானது, अन्वर्थं - அன்வர்த்தமாக, रत्नसूरपि - ரத்னத்தை பிறப்பிப்பதும், आसीत् - ஆச்சுது. 9

*பொருள் : - ஜீவந்தரன் விழிப்புடன் இந்த உலகை ஒரே ஒரு நகரம் போல ஆண்டு கொண்டு இருந்தபோது இப்புவி இரத்தினங்களை பிறப்பிப்பவள் என்ற பெயருக்கு ஏற்றாற் போல் விளங்கினாள். (அரசன் சிறப்பாக ஆட்சி செய்தால்தான் பூமியும் சிறந்த பொருட்களைத் தருவதாக விளங்கும்)*

एवं विराजमानेऽस्मिन् राजराजे महोदये ।
विजया जननी तस्य विरक्ता संसृतावभूत् ॥ 10

एवं - இப்படி, महोदये - மஹத்தான ஐச்வர்யத்தை உடைய, राजराजे - ராஜாக்களுக்கெல்லாம் ராஜாவான, अस्मिन् - ஜீவந்தரனானவன், विराजमाने - விளங்கா நின்றுள்ளளவில், तस्य - ஜீவந்தரனுடைய, जननी - தாயானவள், विजया - விஜயமஹாதேவியானவள், संसृतौ - ஸம்சாரத்திலே, विरक्ता - விரக்தியை யுடைத்தானவன், अभूत् - ஆனான். 10

*பொருள் : - இவ்வாறு அரசர்க்கெல்லாம் அரசனாக ஜீவந்தரன் விளங்கிக் கொண்டு இருக்கும்போது அவனது தாய் விஜயமஹாதேவி உலக வாழ்க்கையை வெறுத்தாள்.*

पैतृकं पदमद्राक्षमत्राहं पुत्र पुङ्गवे ।
कृताः पुरोपकर्तारः कृतकृत्या यथोचितम् ॥ 11

अत्र - இவ்விடத்திலே, पुत्रपुङ्गवे - புத்ரஸ்ரேஷ்ட நிடத்திலே, पैतृकम् - பித்ரு சம்மந்தமான, पदं - ஸ்தானத்தை, अहं - நான், अद्राक्षम् - கண்டேன், कृतकृत्याः - க்ருதக்ருதயர்களான, यथोचितम् - யதாயோக்யமாக, पुरोपकर्तारः - பூர்வத்தில் பண்ணப்பட்ட உபகாரிகள், कृताः - பண்ணப்பட்டார்கள். 11

*பொருள் : - எனது சிறந்த மகனிடத்தில் முன்னோர்களைப் போன்று அரசாட்சி செய்யும் நிலையைக் கண்டேன். முன்பு உதவி செய்த எல்லோருக்கும் அவர்கள் செய்த செயல்களுக்கான நன்றிக்கடன் செலுத்தப்பட்டது.*

फलं च पुण्यपापानां मया मय्येव वीक्षितम् ।
शास्त्रादृते किमन्यत्र कर्मपाकोऽयमीक्षितः ॥ 12

पुण्यपापानां - புண்யபாங்களுடைய, फलं च - பலமும், मया - என்னாலே, मय्येव - என்னிடத்திலேயே, शास्त्रात् - சாஸ்த்திரத்தினின்றும், ऋते - அன்றியிலே, वीक्षितम् - காணப்பட்டுது, अयं - இந்த, कर्मपाकः - கர்மோதயமானது, अन्यत्र - மற்றோரிடத்திலே, ईक्षितम् - காணப்பட்டது, किं - என்ன. 12

*பொருள் : - நான் செய்த நற்செயல்களுக்கும், தீச்செயல்களுக்கும் பயன்கள் என்னாலே என்னிடத்தில் கண்டுகொள்ளப்பட்டன. சாத்திரங்களைத் தவிற வேறு எது ஒன்றைக் கொண்டு எனது செயல்களின் பலனை அறிய முடியும் ?*

अतोऽपास्य सुतस्नेहं तपस्यानि यथोचितम् ।
ज्ञात्वापि कुण्डपातोऽयं कुत्सितानां हि चेष्टितम् ॥ 13

अतः - இது காரணத்தினின்றும், सुतस्नेहं - புத்ரஸ்நேகத்தை, अपास्य - விட்டு, तपस्यानि - தபஸுக்களை, यथोचितम् - யதாயோக்யமாக, ज्ञात्वापि - அறிந்தும், कुण्डपातः- குண்டத்தில் விழுகிறதான, अयं - இது, कुत्सितानां- குத்ஸிதர்களுடைய, चेष्टितं हि - நடக்கையன்றோ. 13

*பொருள் : - என் மகன் மீது உள்ள ஈடுபாட்டைவிட்டு விட்டு முறைப்படி நான் தவம் இயற்றுவேன் அறிந்தும் தீயில் வீழ்வது அறிவிலிகளின் செயல் அல்லவா.*

इति वैराग्यतस्तस्याः सुनन्दापि व्यरज्यत ।
पाके हि पुण्यपापानां भवेद्बाह्यं च कारणम् ॥ 14

इति - என்று, तस्याः - விஜயமஹாதேவியினுடைய, वैराग्यः - வைராக்யத்தினின்றும், सुनन्दापि - சுநந்தையும், व्यरज्यत - வெறுத்தாள், (तथा) पुण्यपापानाम् - புண்ய பாபங்களுடைய, पाके - உதயத்திலே, बाह्यञ्च - பாஹ்ய காரணமும், भवेत् हि - ஆகக்கடவதன்றோ. 14

பொருள் : - இவ்வாறு வைராக்யம் ஏற்பட்ட அந்த விஜயமகாதேவி துறவறம் மேற்கொண்டாள். அரசனுடைய (ஜீவந்தரன்) தாயைப் பார்த்து அவனுடைய வளர்ப்புத்தாயான சுனந்தாவும் துறவறத்தை மேற்கொண்டாள். நல்வினைக்கோ அல்லது தீவினைக்கோ வெளியில் காணும் மாற்றங்கள் ஒருவிதத்தில் காரணமாகின்றன.

ततः कृच्छ्रायमाणं* ते महीनाथं च कृच्छ्रतः ।
अनुज्ञाप्य ततो गत्वा दीक्षिषातां यथाविधि ॥ 15

ततः - பிற்பாடு, कृच्छ्रायमाणं - ப்ரயாஸமான, महीनाथञ्च- ஜீவந்தரனையும், ते - தாய்மார் இரண்டு பேர்களும், कृच्छ्रतः- ப்ரயாசத்தினின்றும், अनुज्ञाप्य - ஸம்மதி பண்ணிவித்து, ततः- அங்குநின்றும், गत्वा - போய், यथाविधि - விதிக்ரமமாக, दीक्षिषातां - தீக்ஷித்தார்கள். 15

பொருள் : - மன வருத்தமடைந்த அரசனை அவ்விரண்டு தாய்மார்களும், உடலை வருத்துதல் முதலான செயல்களை தாங்கள் செய்தாக வேண்டும் என்று கூறி ஜீவகனிடம் அனுமதி பெற்று அங்கிருந்து சென்று முறைப்படி ஜினதீட்சையை ஏற்றார்கள்.

* कृच्छ्रायमाणे, IDJO, p. 55

पद्माख्या श्रमणीमुख्या विश्राण्य श्रमणीपदम् ।
तन्मातृभ्यां ततस्तां च महीनाथमबोधयत् ॥ 16

पद्माख्या श्रमणीमुख्या - ஆர்யாங்கனைகளுக்கு முக்யையான பத்மையென்று பேரையுடைய ஆர்யாங்கனைகள், तन्मात्राभ्यां - ஜீவந்தரனுடைய தாய்மார்கள் பொருட்டு, श्रमणीपदम् - ஆர்யாங்கனைகளுடைய ஸ்தானத்தை, विश्राण्य- கொடுத்து, महीनाथम् - அந்த ஜீவந்தர ராஜாவையும், अबोधयत् - போதித்தாள். 16

*பொருள் : - பத்மா என்பவள், சமணப் பெண் துறவிகளில் முதன்மையானவள் ஜீவந்தரனுடைய தாய்மார்களுக்கு துறவிப்பட்டமளித்தாள். ஜீவந்தரனுக்கும் இவ்வாறு போதித்தாள்.*

प्रव्रज्या जातुचित्प्राज्ञैः प्रतिषेद्धुं न युज्यते ।
न हि खादापतन्ती चेद्रत्नवृष्टिर्निवार्यते ॥ 17

प्रव्रज्या - தீக்ஷையானது, जातुजित् - ஒருக்காலும், प्राज्ञैः- ஞானவான்களினாலே, प्रतिषेद्धुं - தடையிடுகிறதற்கு, न युज्यते - யோஜிக்கபடா நின்றதில்லை, (तथा) खात् आपतन्ती- ஆகாயத்தினின்றும் விழா நின்றிருக்கிற, रत्नवृष्टिः - ரத்னவிருஷ்டியானது, चेत् - ஆகில், निवार्यते - தடையிடப்படாநின்றது, नहि - இல்லையன்றோ. 17

*பொருள் : - துறவு மேற்கொள்வதை அறிவாளிகள் ஒருபோதும் தடை செய்வது இல்லை. விண்ணில் இருந்து பொழியும் ரத்தினக் கற்களால் ஆன மழையை யார்தான் தடை செய்வார்கள் !*

वयस्यन्तेऽपि वा दीक्षा प्रेक्षावद्भिरपेक्ष्यताम् ।
भस्मने रत्नहारोऽयं पण्डितैर्न हि दह्यते ॥ 18

अन्ते वयस्यापि - அன்த்ய வயசிலேயானாலுந்தான், दीक्षा - தீக்ஷயானது, प्रेक्षावद्भिः - புத்திசாலிகளினாலே, अपेक्ष्यताम् - அபேக்ஷிக்கப்படுமது, (तथा) अयम् - இந்த, रत्नहारः - ரத்னமாலையானது, भस्मने - சாம்பலின் பொருட்டு, पण्डितैः - ஞானவான்களினாலே, दह्यते - சுடப்படாநின்றது, नहि - இல்லையன்றோ. 18

*பொருள் : - அறிவாளிகள் வயது முதிர்ந்தாலும்கூட ஜினதீக்ஷயை ஏற்றுக்கொள்ளலாம். கிடைத்தற்கரிய ரத்தினக் கற்கள் பதித்த ஹாரத்தை அறிவாளிகள் கொளுத்த வேண்டுமென்றால் கொளுத்துவார்களா! (ஜினதீக்ஷ என்பது கிடைத்தற்கரிய ரத்தின மாலையை ஒத்தது. உலக இன்பத்தைத் துய்க்க அப்படிப்பட்ட ஜினதீக்ஷயை ஏற்கக்கூடாது. ஆனால் உலக வாழ்க்கையை வெறுப்பவர்கள் ஜினதீக்ஷ ஏற்பது என்பது, அவர்கள் வாழ்க்கையின் முதுமைப் பருவத்தை அடைந்தாலும் ஏற்புடையதே.*

* इति प्रबोधितो नत्वा प्रसवित्रीं सकाशतः ।
प्रश्रयेण गतो राजा प्राविक्षन्नृपमन्दिरम् ॥ 19

प्रबोधितः - போதிக்கப்பட்ட, प्रसवित्रीं - தாயை, नत्वा - நமஸ்கரித்து, सकाशतः - ப்ரகாரத்தினின்றும், प्रश्रयेण - வணக்கத்தோடே அடைந்த ராஜா ஜீவந்தர ராஜாவானவன், नृपमन्दिरम् - தன்னுடைய மனையை, प्राविक्षत् - ப்ரவேசித்தான்.

---

** மின்னார் சிலம்புங் குரலன்ன மேனான்*
*மன்னா பிரித்தாய் பிரிந்தாய் சிறைவைத்தனான*
*பொன்னார் மார்ப சிறைப்பட்டனைப் போலுமென்றா*
*னின்னார் பிறவிப்ப பிணக்கின் மருந்தாய சொல்லான். (சீவகசிந்தாமணி)*

பொருள் : - இவ்வாறு அறிவுறை கூறப்பட்ட ஜீவந்தரன் தன் தாயை அடக்கத்துடன் வணங்கி அங்கிருந்து புறப்பட்டு அரச மாளிகையை அடைந்தான்.

न चिराद्धि पदं दत्ते कृतिना हृदि विक्रिया ।
यदि रत्नेऽपि मालिन्यं नहि तत्कृच्छ्रशोधनम् ॥ 20

कृतिनाम् - புண்யவான்களுக்கு, हृदि - மனசிலே, विक्रिया- விகாரமானது, चिरात् - நெடுங்காலத்தினின்றும், पदम्- ஸ்தானத்தை, दत्ते - கொடாநின்றது, नहि - இல்லையன்றோ, (तथा) रत्नेऽपि - ரத்னத்திலேயும், मालिन्यम्- மலினத்வ மானது, यदि - யாகில் அந்த ரத்னம், कृच्छ्रशोधनम्- ப்ரயாஸ சோதனமானது, नहि - இல்லையன்றோ. 20

பொருள் : - எடுத்த செயலை முடிப்பவர்கள் மனதில் நடந்த நிகழ்ச்சிகளால் ஏற்பட்ட மாற்றம் வெகுகாலம் நிற்காது. விலை உயர்ந்த ரத்தினக் கல் வெகுநேரம் சோதிக்கப்படுவதில்லை.

अथास्य क्षात्रविद्यस्य क्षणवद्भुञ्जतो महीम् ।
त्रिदशोपमसौख्येन त्रिंशद्वर्षाण्ययासिषुः ॥ 21

अथ - பிற்பாடு, क्षात्रविद्यस्य - ராஜவித்தையை உடைய, अस्य - ஜீவந்தரனுக்கு, महीं - பூமியை, क्षणवत् - க்ஷணமானது போல, भुञ्जते - அனுபவியாநின்றவனுக்கு, त्रिदशोपमसौख्येन- தேவலோகத்திற்கு ஸமானமான ஸௌக்யத்தினாலே, त्रिंशद्वर्षाणि - முப்பது வருஷங்கள், अयासिषुः - அடைந்ததுகள். 21

*பொருள் : - பிறகு சிறந்த அரசியல் அறிவை உடைய ஜீவந்தரன் ஆட்சி செய்துகொண்டு இருந்தபோது இந்திரன் போல முப்பது வருடங்களை ஒரு நொடிபோல் இனிமையாகக் கழித்தான்.*

ततः कदाचिदस्यासीज्जलक्रीडामहोत्सवः ।
वसन्ते सह कान्ताभिरष्टाभिरतिकौतुकात् ॥ 22

ततः - பிற்பாடு, कदाचित् - ஒருக்கால், तस्य - ஜீவந்தரனுக்கு, वसन्ते - வஸந்த காலத்திலே, अष्टाभिः कान्ताभिः - எட்டு ஸ்திரியர்களோட, सह - கூட, अतिकौतुकात्- மிகவும் சந்தோஷத்தினின்றும், जलक्रीडामहोत्सवः - ஜலக்ரீடா மஹோத்ஸவமானது, आसीत् - ஆச்சுது. 22

*பொருள் : - பிறகு இளவேனிற் காலத்தில் ஜீவந்தரன் தனது எட்டு மனைவிகளுடன் மிக்க மகிழ்ச்சியுடன் நீர்விளையாட்டில் ஈடுபட்டான்.*

जलक्रीडाश्रमात्सोऽयमाक्रीडे च सनीडके ।
क्रीडन्कापटिकैः श्लाघ्यं कापेयं निरवर्तयत् ॥ 23

जलक्रीडाश्रमात् - ஜலக்ரீடையினுடைய வருத்ததினின்றும், सोऽयं - அப்படிப்பட்ட ஜீவந்தரன், सनीडके - கூண்டோடே கூடி இருக்கிற, आक्रीडे च - உத்யான வனத்திலேயும், कापटिकैः - கபடங்களினாலே, क्रीडन् - க்ரிடியாநின்ற குரங்கானது, श्लाघ्यम् - ஸ்லாக்யமாக, कापेयम् - குரங்கை, निरवर्तयत् - கண்டான். 23

பொருள் : - நீர் விளையாட்டில் சோர்வுற்ற அவன் தகுந்த பாதுகாப்புடன் இருக்கும் அரண்மனைக் கோட்டத்தில், ஏமாற்று விளையாட்டுக்களில் (ஒளிந்து) ஈடுபட்டான். அப்போது ஒரு குரங்கைக் கண்டான்.

अन्यसंपर्कतः क्रुद्धां मर्कटीं कोऽपि मर्कटः ।
प्रकृतिस्थां बहूपायैर्नाशकत्कर्तुमुद्यतः ॥ 24

अन्य संपर्कतः - மற்றொரு குரங்குனிடைய ஸம்சர்க்கத்தினின்றும், क्रुद्धां - கோபித்திருக்கிற, मर्कटीं - பெண்குரங்கை, कोऽपि मर्कटः- ஒரு ஆண் குரங்கானது, बहूपायैः - நானா உபாயங்களினாலே, प्रकृतिस्थां - ஸ்வபாவமாக, कर्तुं - பண்ணுகிறதற்கு, उद्यतः - உத்யுக்தமான குரங்கானது, नाशकत्- சமர்த்தமாச்சுதில்லை. 24

பொருள் : - வேறு ஒரு பெண் குரங்கிடம் ஈடுபட்டிருந்த ஒரு ஆண் குரங்கைக் கண்டு சினம் கொண்டிருக்கும், ஒரு பெண் குரங்கை அந்த ஆண் குரங்கு சமாதானம் செய்வதற்கு பலவிதமாக முயன்றும் அந்த ஆண் குரங்கால் அந்தபெண் குரங்கை சமாதானம் செய்ய இயலவில்லை.

ततः शाखामृगोऽप्यासीन्मायिको मृतवद्वशः ।
तदवस्थां भयग्रस्ता वानरीऽयमपाकरोत् ॥ 25

ततः - பிற்பாடு, मायिकः - மாயையுடைய, शाखामृगोऽपि- குரங்கும், मृतवद्वशः - மரணமானது போல அவஸ்தையுடையதானது, आसीत् - ஆச்சுது, भयग्रस्ता - பயத்தினாலே முழங்கப்பட்டிருக்கிற, इयं वानरी - இந்த பெண் குரங்கு, तदवस्थां - அந்த அவஸ்தையை, अपाकरोत् - போக்கித்து. 25

பொருள் : - பிறகு ஏமாற்றுவதில் கைதேர்ந்த அந்த ஆண் குரங்கு இறந்தது போல் விழுந்தது. பயம் கொண்ட அந்த பெண் குரங்கு அந்த நிலையை நீக்கியது. (இறந்தது போன்ற நிலையை)

हर्षूलो हरिरप्यस्यै पनसस्य फलं ददौ ।
वनपालो जहारैतद्वानरीमपि भर्त्सयन् ॥ 26

हर्षूलः - சந்தோஷமாய் இருக்கிற, हरिरपि - ஆண் குரங்கும், अस्यै - இந்த பெண் குரங்கின் பொருட்டு, पनसस्य- பலாமரத்தினுடைய, फलं - பழத்தை, ददौ - கொடுத்து, वानरीमपि - பெண் குரங்கையும், भर्त्सयन् - அதட்டா நின்றவனாய்க்கொண்டு, वनपालः - வனபாலகனானவன், एतत् -இந்தப் பலாப்பழத்தை, जहार - ஸ்வீகரித்தான். 26

பொருள் : - அந்த ஆண் குரங்கு அந்த பெண் குரங்கிற்கு ஒரு பலாப்பழத்தை அளித்தது. அந்தப் பழத்தை அந்த தோட்டத்தின் காவலாளி அந்த பெண் குரங்கிடம் இருந்து மிரட்டிப் பறித்துக் கொண்டான்.

इत्यशेषं विशेषज्ञो वीक्षमाणः क्षितीश्वरः ।
तत्क्षणे जातवैराग्यादनुप्रेक्षामभावयत् ॥ 27

इति - என்று, अशेषं - சமஸ்தத்தை, वीक्ष्यमाणः - பாராநின்றிருக்கிற, विशेषज्ञः - விசேஷத்தை அறிந்த, क्षितीश्वरः - ஜீவந்தரனானவன், तत्क्षणे - அந்த க்ஷணத்திலே, जातवैराग्यात् - உண்டான வைராக்யத்தினின்றும், अनुप्रेक्षां - த்விதூஷணாப்ரேக்ஷயை, अभावयत् - பாவித்தான். 27

பொருள் : - இவ்வாறு எல்லாவற்றையும் பார்த்த அறிவிற்சிறந்த அரசனாகிய ஜீவந்தரன் அந்த இடத்திலேயே உலகப் பொருட்களின் மீதுள்ள ஈடுபாட்டை அழித்தான்.

मद्यते वनपालोऽयं काष्टाङ्गारायते हरिः ।
राज्यं फलायते तस्मान्मयैव त्याज्यमेव तत् ॥ 28

अयं वनपालः - இந்த வனபாலனானவன், मद्यते - என்னைப்போல ஆசரியாநின்றான், हरिः - குரங்கானது, काष्टाङ्गारायते - காஷ்ட்டாங்காரன் போல ஆசரியாநின்றது, राज्यं - ராஜ்யமானது, फलायते - பலமானது போல ஆசரியாநின்றது, तस्मात् - அது காரணத்திநின்றும், मयैव - என்னாலேயே, तत् - அந்த ராஜ்யமானது, त्याज्यमेव - விடப்படுமதே. 28

பொருள் : - தான் தோட்டக்காரனாகவும், காஷ்ட்டாங்காரன் குரங்காகவும், அரசு பழமாகவும் உருவகப் படுத்தப்படுகின்றன. ஆகவே நானே இந்த அரசை விட்டுவிட வேண்டும் எண்ணினான்.

जाता पुष्टाः पुनर्नष्टा इति प्राणभृतां प्रथाः ।
न स्थिता इति तत्कुर्याः स्थायिन्यात्मन्पदे मतिम् ॥29

जाताः - பிறந்தார்கள், पुष्टाः - பரிபூர்ணமாக இருந்தார்கள், पुनः - பிற்பாடு, नष्टाः - கெட்டார்கள், इति - என்று, प्राणभृतां-

* கைப்பழமிழந்த மந்தி கட்டியங்காரனொத்த
திப்பழந்துரந்து கொண்ட சிலதனு மென்னை யொத்தா
னிப்பழமின்று போகத்தின்பமே போதுமென்று
மெய்படவுணர்வு தோன்றி மீட்டிதுகூறினானே. (சீவகசிந்தாமணி)

ஜீவன்களுக்கு, प्रथाः - ப்ரஸித்தங்கள், स्थिताः - இருந்தார்கள், न - இல்லை, इति - என்று, ततः - அது காரணத்திநின்றும், आत्मन् - வாராய் ஆத்மனே! स्थायिनि - ஸ்திரமான, पदे - மோக்ஷமாகிற ஸ்தானத்திலே, मतिः - புத்தியை, कुर्याः - பண்ணு. 29

*பொருள் : - பிறந்தார்கள், செழித்தார்கள், அழிந்தார்கள் என்று உயிரினங்கள் கூறப்படுகின்றன. இருந்தார்கள் என்பதைச் செய்யவேண்டும் என்பதால் வீடுபேறு என்பதில் மனமே, நீ அறிவைச் செலுத்து.*

स्थायीति क्षणमात्रं वा ज्ञायते न हि जीवितम् ।
कोटेरप्यधिकं हन्त जन्तूनां हि मनीषितम् ॥ 30

जीवितम् - ஆயுஷ்யமானது, क्षणमात्रं वा - க்ஷணமாத்ர மானாலுந்தான், स्थायि इति - இராநின்றதென்று, ज्ञायते - அறியப்படாநின்றது, न हि - இல்லையன்றோ, (तथा) जन्तूनां- ஜீவன்களுக்கு, मनीषितम् - வாஞ்சையானது, कोटेरपि- கோடியினின்றும், अधिकं हि - அதிகமன்றோ, हन्त- கெட்ட கெட்ட. 30

*பொருள் : - ஒருவனுடைய ஆயுள் ஒரு கணநேரமா ! அல்லது நிலைத்து நிற்குமா ! என்று அறிய முடியவில்லை. உயிரினங்கள் தங்கள் ஆயுள் கோடி வருடங்களுக்கும் மேலாக வேண்டும் என்று விரும்புகிறார்கள் அன்றோ !*

अवश्यं यदि नश्यन्ति स्थित्वापि विषयाश्चिरम् ।
स्वयं त्याज्यास्तथा हि स्यान्मुक्तिः संसृतिरन्यथा ॥ 31

विषया: - விஷயங்கள், चिरं - நெடுங்காலம், स्थित्वापि- இருந்தும், अवश्यं - நிச்சயமாக, नश्यन्ति - கெடாநின்றதுகள், यदि - ஆகில், स्वयं - தானே, त्याज्यः - விடப்படுமதுகள், तथाहि - அப்படியாகில், मुक्तिः - மோக்ஷமானது, स्यात् - ஆகக்கடவது, अन्यथा - அல்லாவிட்டால், संसृतिः - ஸம்ஸாரமாம். 31

பொருள் : - இவ்வுலகில் உள்ள பொருட்களில் ஒரு சில நெடுங்காலம் வாழ்ந்தும் அழிந்து விடுகின்றன. ஆகவே இந்த உலகப்பொருட்களின் மீது இருக்கக்கூடிய ஈடுபாட்டை விட்டுவிடவேண்டும். அப்போதுதான் வீடு பேறு கிடைக்கும். இல்லை என்றால் மீண்டும் இந்த உலக வாழ்க்கைதான்.

अनश्वरसुखावाप्तौ सत्यां नश्वरकायतः ।
किं वृथैव नयस्यात्मन्क्षणं वा सफलं नय ॥ 32

नश्वरकायतः -கேடான சரீரத்தினின்றும், अनश्वरसुखा-वाप्तौ-மோக்ஷ சுகப்ராப்தியானது, सत्यां -உண்டாயுள்ளளவில், वृथैव - வர்த்தனையினாலேயே, किं - என்ன, नयसि - அடைவியாய்நின்றாய், आत्मन् - வாராய் ஆத்மனே, क्षणं वा- க்ஷணமானாலுந்தான், सफलं - பலத்தோடே கூட, नय - அடவி. 32

பொருள் : - உயிரே ! அழியும் உடலின் வாயிலாக அழியாத வீடுபேற்றை அடைய முடியும் என்று இருக்கும் போது ஏன் வீணாக உலகப் பொருட்களை நோக்கி அழைத்துச் செல்கிறாய். ஒரு கண நேரமாவது வாழ்க்கையை பயன் உள்ளதாக ஆக்கு.

पयोधौ नष्टनौकस्य पतत्रेरिव जीव ते ।
सत्यपाये शरण्यं न तत्स्वास्थ्ये हि सहस्रधा ॥ 33

पयोधौ - சமுத்ரத்திலே, नष्टनौकस्य - கெட்ட கப்பலை உடைய, पतत्रेः - மீகாமனுக்கு, इव - போல, जीव - வாராய் ஜீவனே ! ते - உனக்கு, अपाये - அபாயமானது, सति - உண்டாயுள்ளளவில், शरण्यं - சரண்யமான பேர், न - ஒருத்தருமில்லை, तत् - அதுகாரணத்திநின்றும், स्वास्थ्ये - பழையாட்போலே ஸ்வஸ்தமாய் இருந்து உள்ளளவில், सहस्रधा हि - ஆயிரம் பேர்களன்றோ. 33

*பொருள் : - உயிரே ! நீ கடலில் கப்பலை இழந்த மாலுமியைப் போல இருக்கிறாய் நீ அடைக்கலமாக அடைவதற்கு எவரும் இல்லை. ஆகவே நீ உனக்கு ஏற்றதைத் தேர்ந்தெடுத்தால் உனக்கு உதவி செய்வார் ஆயிரக் கணக்கானவர்கள் (உயிர் என்பது மாலுமியாகவும், இவ்வுலக வாழ்க்கை கடலாகவும், இன்பங்கள் கப்பலாகவும், உருவகிக்கப் படுகின்றன. இன்பங்கள் நிறைவு பெற்ற பின்னர் துன்பப் பெருங்கடலில் நீந்துவது இயலாது. ஆகவே ஆத்மா தனக்கு ஏற்ற நிலையை தேர்ந்தெடுத்தால் பிறவிப் பெருங்கடலில் இருந்து அதனைக் காப்பாற்ற பல்வேறு வழிகள் தென்படுகின்றன. இவ்வாறு ஆத்மா வீடுபேறு அடைய முடிகிறது)*

आयुधीयैरतिस्निग्धैर्बन्धुभिश्चाभिसंवृतः ।
जन्तुः संरक्ष्यमाणोऽपि पश्यतामेव नश्यति ॥ 34

आयुधीयैः - ஆயுதங்களோடேயும், अतिस्निग्धैः - மிகவும் ஸ்நேகங்களோடேயும் கூடி இருக்கிற, बहुभिश्च - அநேகம் பேர்களினாலேயும், संवृतः - சூழப்பட்டிருக்கிற, संरक्ष्यमाणोऽपि - நன்றாக ரக்ஷிக்கப்பட்டிருக்கிற, जन्तुः -

ஜீவனும், पश्यतामेव - பார்க்கிற பேர்களுக்கே, नश्यति - நாசமாகாநின்றது. 34

*பொருள் : - அன்பான சுற்றத்தார் கையில் பலவித ஆயுதங்களோடு ஒருவனை ஆபத்தில் இருந்து காப்பாற்ற சுற்றி நின்று கொண்டாலும் அவனைக் காப்பாற்ற இயலாது. பார்த்துக்கொண்டு இருக்கும்போதே அவன் அழிந்து விடுவான்.*

मन्त्रयन्त्रादयोऽप्यात्मन्स्वतन्त्रं शरणं न ते ।
किं तु सत्येव पुण्ये हि नो चेत्के नाम तैः स्थिताः ॥ 35

मन्त्रयन्त्रादयोऽपि - மந்த்ர யந்த்ர முதலானதுகளும், आत्मन् - வாராய் ஆத்மனே, ते - உனக்கு, स्वतन्त्रम् - ஸ்வாதீனமாக, शरणम् - சரணமானது, न - அல்ல, किन्तु - விசேஷமுண்டு, हि - ஸ்புடமாக, पुण्ये - புண்யமானது, सत्येव - உண்டாயுள்ளளவிலே சரணமாம், नोचेत् - புண்யமில்லையாகில், के नाम - எவர்கள்தான், तैः - யந்த்ர மந்த்ராதிகளினாலே, स्थिताः - இருந்தவர்கள். 35

*பொருள் : - மந்திரம், யந்திரம் முதலானவையும் இவ்வுயிரைக் காப்பதற்கு இயலாது ஏனெனில் அவைகள் பாதுகாப்பாக இருப்பதற்குக்கூட ஒருவரது நல்வினைப் பயன் காரணமாகிறது. இல்லை என்றால் அவைகளால் எந்தப் பயனும் இல்லை.*

नटवन्नैकवेषेण भ्रमस्यामन्स्व कर्मतः ।
तिरश्चिनिरये पापाद्दिविपुण्याद्द्वयान्नरे ॥ 36

नैकवेषेण - அநேக வேஷத்தினாலே, नटवत् - நர்த்தனம் பண்ணுகிறவன் போல, आत्मन् - வாராய் ஆத்மனே, पापात् - பாபத்திநின்று, तिरश्चि - திர்யக்கதியிலே, निरये - நரக

கதியிலே, पुण्यात् - புண்யத்தினின்றும், दिवि - தேவ லோகத்திலே, द्वयात् - புண்ணிய பாபத்திநின்றும், नरे - மனுஷ்ய கதியிலே, स्वकर्मतः - தன்னுடைய புண்யபாப கர்மத்தினின்றும், भ्राम्यसि - ப்ரமியா நின்றாய். 36

***பொருள் : - உயிரே ! நீ பலவிதமான வேடங்களை ஏற்று நடிக்கும் நடிகன் போல தீச்செயலை நரகத்திலும், நற்செயலை தேவர் உலகிலும், இவ்விரண்டையும் மனிதனாகப் பிறந்து இவ்வுலகில் செய்கிறாய். இவ்வாறு உனது செயல்களால் இங்குமங்கும் அலைந்து உழலுகிறாய்.***

पञ्चानन इवामोक्षादसिपञ्चर आहितः ।
क्षणेऽपि दुःसहे देहे देहिन्हन्त कथं वसेः ॥ 37

असिपञ्चर आहितः - ஆயுதக் கூண்டிலே அகப்பட்டிருக்கிற, पञ्चाननः - ஸிம்ஹமானது, आमोक्षात् - விடுவிச்சுக் கொண்டு, इव - போல, क्षणेऽपि - க்ஷணமாத்திரத்திலேயும், दुःसहे - ஸஹிக்கிறதற்கு அரிதான, देहे - சரீரத்திலே, देहिन् - வாராய் ஆத்மனே, कथं - எப்படி, वसेः - வஸியாநின்றாய், हन्त - கெட்ட கெட்ட. 37

***பொருள் : - ஆயுதக்கூண்டில் அடைபட்டிருக்கும் சிங்கம், அதில் இருந்து விடுபடும் வரை எவ்வாறு நிலை கொள்ளாமல் தவிக்குமோ, அதைப்போல பொறுத்துக் கொள்ள முடியாத துன்பம் தரும் இவ்வுடலில் நீ எவ்வாறு இருக்க முடிகிறது?***

तन्नास्ति यन्न वै भुक्तं पुद्गलेषु मुहुस्त्वया ।
तल्लेशस्तव किं तृप्त्यै बिन्दुः पीताम्बुधेरिव ॥ 38

त्वया - உன்னாலே, मुहुः - திரும்பத் திரும்ப, पुद्गलेषु -

அனுபவிக்கப்பட்டது, न - அல்ல, तत् - அது, नास्ति - இல்லை, पीतांबुधेः - பாநம் பண்ணப்பட்ட சமுத்ர ஜலத்தை உடைத்தானவனுக்கு, बिन्दुः - மூல பிந்துவானது, इव - போல, तव - உனக்கு, तल्लेशः - அந்த லேசமான ஒரு பவத்தில் உண்டான சுகமானது, तृप्त्यै किं - திருப்தியின் பொருட்டு.

*பொருள் : - நீ, மீண்டும் மீண்டும் உலக பொருட்களை நன்கு நுகர்ந்துவிட்டாய். கடல் நீர் போன்ற உலக இன்பங்கள் அனைத்தையும் நுகர்ந்த பின்னர். ஒரு துளி இன்பத்துக்காகத் துயர்ப்படுகிறாய்.*

भुक्तोज्झितं तदुच्छिष्टं भोक्तुमेवोत्सुकायसे ।
अभुक्तं मुक्ति सौख्यं त्वमतुच्छं हन्त नेच्छसि ॥ 39

भुक्तोज्झितं - அனுபவிச்சுவிடப்பட்ட, उच्छिष्टं - எச்சிலுக்கு சமானமான, तत् - அதை, भोक्तुमेव - அனுபவிக்கிற தற்கே, उत्सुखायसे - வாஞ்சியாநின்றாய், अभुक्तं - ஒருக்காலும் அனுபவியாது, अतुच्छं - பெருசாயிருக்கிற, मुक्तिसौख्यं - மோக்ஷ சுகத்தை, त्वं - நீ, नेच्छसि - வாஞ்சியா நின்றாயில்லை, हन्त - கெட்ட கெட்ட.

*பொருள் : - நீ முன்பு அனுபவித்ததும், அற்பமுமான சுகத்தையே மீண்டும் பெற முயலுகின்றாய். முன்பு அனுபவிக்காத ஆனந்தமான மோக்ஷ சுகத்தைப் பெற விரும்பவில்லை.*

संसृतौ कर्म रागाद्यैस्ततः कायान्तरं ततः ।
इन्द्रियाणीन्द्रियद्वारा रागाद्याश्चक्रकं पुनः ॥ 40

संसृतौ - சம்சாரத்திலே, रागाद्यः - ராகமுதலானது களினாலே, कर्म - கர்மமானது, ततः - அந்த கர்மத்தி னாலும், कायान्तरं - மற்றொரு சரீரமாம் அந்த சரீரத்தி

வழிகளான, रागाद्याः- ராக முதலானதுகள், पुनः - பிற்பாடு, चक्रकम् - சுழலுகிறது. 40

பொருள் : - இப்படைப்பில் ஈடுபாடு முதலியவற்றால், கடமைகளும், கடமைகளைச் சரியாகச் செய்தாலோ, செய்யாவிட்டாலோ, அதற்கேற்ற உடல்களும், அவ்வுடல்களுக்கேற்ற புலன்களும், அப்புலன்களால் மீண்டும் ஈடுபாடு முதலான உணர்வுகளும் தோன்றுகின்றன. இவை சுழற்சியாக மீண்டும் மீண்டும் தோன்றுகின்றன.

सत्यनादौ प्रबन्धेस्मिन्कार्यकारणरूपके ।
येन दुःखायसे नित्यमद्य वात्मन्विमुञ्च तत् ॥ 41

कार्यकारणरूपके - கார்யகாரண ரூபமான, अनादौ - அனாதியான, अस्मिन् प्रबन्धे - இந்த ப்ரபந்தமானது, सति - உண்டாயுள்ளளவில், येन - யாதொரு கர்மத்தினாலே, दुःखायसे - துக்கப்படாநின்றாய், नित्यं - அனவரதமும், तत्- அந்த கர்மத்தை, आत्मन् - வாராய் ஆத்மனே, अद्य वा - இப்பொழுதாவது, विमुञ्च - விடு, इति - என்று. 41

பொருள் : - தொடக்கமற்ற, செயலும் அதன் காரணமாகவும் விளங்கும் இந்த உலகில் நீ எந்தச் செயலால் மீண்டும் மீண்டும் பிறப்பெடுத்து வருகிறாயோ, அந்தச் செயலை விட்டொழிக்க முயல வேண்டும்.

त्यक्तोपात्तशरीरादिः स्वकर्मानुगुणं भ्रमन् ।
त्वमात्मन्नेक एवासि जनने मरणेऽपि च ॥ 42

त्यक्तोपात्त शरीरादिः - விடுகிறது ஸ்வீகரிக்கிறதுமான சரீர முதலானதையுடைய, स्वकर्मानुगुणम् - தன்னுடைய கர்மங்களுக்கு அனுகுணமாக, भ्रमन् - ப்ரமியாநின்ற, त्वं -

नी, आत्मन् - வாராய் ஆத்மனே, जनने मरणेऽपि च - ஜனனமரணத்திலேயும், एक एव - ஒருத்தனே, असि- ஆகாநின்றாய். 42

*பொருள் : - உயிரே ! நீ உனது ஊழ்வினைப் பயனால் பலவிதமான உடல்களை எடுத்துக்கொண்டு அவைகளுக்கான சுகதுக்கங்களை அனுபவித்து வருகிறாய். பிறப்பிலும் இறப்பிலும் நீ ஒருவனே நிலையானவன்.*

*बन्धवो हि श्मशानान्ता गृह एवार्जितं धनम् ।
भस्मने गात्रमेकं त्वां धर्म एव न मुञ्चति ॥ 43

हि - ஸ்புடமாக, बन्धवः - பந்துக்கள், श्मशानान्ताः - ஸ்மசானபர்யந்தங்கள், गृह एव - க்ரஹத்திலேயே, अर्जितम्- தேடப்பட்ட, धनम् - தனமானது, गात्रम् - சரீரமானது, भस्मने- சாம்பலின் பொருட்டு, एकं - ஒருத்தான, त्वां - உன்னை, धर्म एव - தர்மமே, न मुञ्चति - விடாநின்றதில்லை. 43

*பொருள் : - சுற்றத்தார் சுடுகாடு மட்டுமே வருவர். சம்பாதித்தப் பொருளும் வீட்டிலேயே இருக்கும் சரீரமும் சாம்பலாகும் மட்டும் இருக்கும். ஆனால் தர்மம் ஒன்றுதான் ஆத்மாவை விடுவதில்லை.*

पुत्रमित्रकलत्राद्यमन्यदप्यन्तरालजम् ।
नानुयायीति नाश्चर्यं नन्वङ्गं सहजं तथा ॥ 44

पुत्रमित्रकलत्राद्यं - புத்ரமித்ரா ஸ்திரியர் முதலானதும், अन्यदपि - மற்றதும், अन्तरालजम् - இடையிலே உண்டானது,

---

* *அத்தமும் வாழ்வு மகத்து மட்டே விழியம் பொழுக*
*மெத்திய மாதரும் வீதிமட்டே விம்மி விம்மியிடு*
*கைத்தலை மேல் வைத்தழுமைந்தருஞ் சுடுகாடு மட்டே*
*பற்றித் தொடருமிரு வினைப் புண்ணிய பாவமுமே.*
*(பட்டணத்துப்பிள்ளை)*

हि - ஸ்புடமாக, नानुयायीति - கூடவராநின்றதில்லை யென்கிறது, नाश्चर्यम् - ஆச்சரியம் அல்ல, ननु - நிச்சயமாக, सहजं - கூட உண்டான, अङ्गम् - சரீரம், तथा - அப்படி, न - வருகிறதில்லை. 44

*பொருள் : - மகன், நண்பன் மனைவி போன்ற உறவுகள் இடையே ஏற்பட்டவைதான். இவர்கள் பின்தொடர வில்லையே என்று வியப்படையத் தேவையில்லை. உடலும் அப்படியேதான்.*

त्वमेव कर्मणां कर्ता भोक्ता च फलसन्ततेः ।
मोक्ता च तात किं भुक्तौ स्वाधीनायां न चेष्टसे ॥ 45

त्वमेव - நீயே, कर्मणां - கர்மங்களுக்கு, कर्ता- கர்த்தாவும், फलसन्ततेः - பல ஸமூகத்திற்கு, भोक्ता च - அனுபவிக்கிறவனும், मोक्ता च - அந்த கர்மங்களை விடுகிற வனும் நீயே , तात - வாராய் பூஜ்யனே, स्वाधीनायां - ஸ்வாதீனமான, मुक्तौ - மோக்ஷத்திலே, न चेष्टसे किं - ஏன் நடவாநின்றாயில்லை.

*பொருள் : - வினைகளைச் செய்பவனும் நீயே, அவற்றின் பயன்களை நுகர்பவனும் நீயே ! ஊழ்வினைகளை அறுப்பவனும் நீயே ! ஆதலால், நீ வீடுபேறு பெறுவதற்கு முயற்சியை ஏன் மேற்கொள்ளக் கூடாது ?*

अज्ञातं कर्मणैवात्मन्स्वाधीनेऽपि सुखोदये ।
नेहसे तदुपायेषु यतसे दुःखसाधने ॥ 46

आत्मन् - வாராய் ஆத்மனே, कर्मणैव - கர்மத்தினாலே, अज्ञातं - அறியப்படாதது, स्वाधीनेऽपि - ஸ்வாதீனமுமான,

सुखोदये - சுகோதயத்திலேயும், तदुपायेषु - ஸ்வாதீனமான உபாயங்களிலே, नेहसे - வாஞ்சியா நின்றாயில்லை, दुःखसाधने - துக்க காரணத்திலே, यतसे - யத்னம் பண்ணாநின்றாய். 46

*பொருள் :- உயிரே ! நீ உனது கடமைகளைச் செய்வதனாலேயே இன்பத்தை அடைய முடியும் என்று இருக்கும்போது, உனது கடமைகளில் ஈடுபாடு காட்டாமல், வேறு வழிகளில் சென்று, துயரை அடைய முயற்சி செய்கிறாயே !*

देहात्मकोऽहमित्यात्मञ्जातु चेतसि मा कृथाः ।
कर्मतो ह्यपृथक्त्वं ते त्वं निचोलासिसन्निभः ॥ 47

देहात्मकः - சரீரஸ்வரூபமானவன், अहं - நான், इति - என்று, आत्मन् - வாராய் ஆத்மனே, चेतसि - மனஸிலே, जातु- ஒருக்காலும், मा कृथाः - பண்ண வேண்டாம், निचोलासि-सन्निभः - உறையிலுள்ள ஆயுதத்துக்கும் சமானமானவன், त्वं- நீ, ते - உனக்கு, कर्मतः - கர்மத்திநின்றும், अपृथक्त्वं हि - வேறல்லாததன்றோ. 47

*பொருள் :- உயிரே, "உடல்தான் நான்" என்று நீ ஒருபோதும் மனதிற்கொள்ளாதே. ஊழ்வினைப் பயனால் உனக்கும் உடலுக்கும் தொடர்பு ஏற்பட்டுள்ளது. நீ உறையினுள் வைக்கப்பட்டுள்ள கத்தி போன்றவன்.*

अध्रुवत्वादमेध्यत्वादचित्त्वाच्चान्यदङ्गकम् ।
चित्वनित्यत्वमेध्यत्वैरात्मन्नन्योऽसि कायतः ॥ 48

अध्रुवत्वात् - அனியத்வத்திநின்றும், अमेध्यत्वात् - அசுத்தத்தினின்றும், अचित्त्वात् च - அக்ஞானத்தினின்றும், अङ्गम्- சரீரமானது, अन्यत् - வேறு, चित्वनित्यत्वमेध्यत्वैः-

ஞானமும், நித்யமும் சுத்யத்வமுமென்கிற இதுகளினாலே, आत्मन् - வாராய் ஆத்மனே, कायतः - சரீரத்தினின்றும், अन्योऽसि - அன்யனாகாநின்றாய். 48

பொருள் : - நிலையாமை, மாசு, அறியாமை ஆகியவைகளை உடைய உடல் வேறு, நிலைத்திருக்கும் தன்மை, தூய்மை, அறிவு ஆகியவற்றால் அமைந்த உயிர் வேறு. ஆகவே உயிரே, நீ உடலிலிருந்து வேறுபட்டவன்.

हेये स्वयं सती बुद्धिर्यत्नेनाप्यसती शुभे ।
तद्धेतुकर्म तद्वन्तमात्मानमपि साधयेत् ॥ 49

हेये - ஹேயத்திலே, बुद्धिः - புத்தியானது, स्वयं - தானே, सती - ப்ரஸஸ்தமானது, शुभे - சுபத்திலே, यत्नेनापि - ப்ரயத்தனத்தினாலேயும், असती - அப்ரஸஸ்தியானது, तत् हेतुः - அதற்கான காரணம், कर्म - கர்மமானது, तद्वन्तम् - அந்த கர்மத்தை உடைய, आत्मानमपि - ஆத்மனையும், साधयेत् - சாதிக்கக் கடவது. 49

பொருள் : - விடவேண்டிய (தீய) பொருட்களில் மனம் தானாகவே ஈடுபடும். நல்ல, ஏற்றுக்கொள்ளப்பட வேண்டியவைகளில், பெரு முயற்சி செய்தும்கூட மனம் ஈடுபடாது. அதற்கான காரணம் ஊழ்வினையே. அந்த ஊழ்வினை, உயிர் ஏற்றுக் கொண்டுள்ள உடலை விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறது.

मेध्यानामपि वस्तूनां यत्संपर्कादमेध्यता ।
तद्गात्रमशुचीत्येतत्किं नाल्पमलसंभवम् ॥ 50

मेध्यानामपि - சுத்தமாயிருக்கிற, वस्तूनां - வஸ்த்துக்களுக்கும், यत्संपर्कात् - யாதொரு சரீரத்தினுடைய

ஸம்ஸர்கத்திநின்றும், अमेध्यता - அசுத்தமானது, तद्गात्रम् - அப்படிப்பட்ட சரீரமானது, अशुचिः - அசுசியானது, इति - என்று, एतत् - இது, अल्पमलसंभवम्- ஸ்வல்பமல சம்பவமானது எ, किन्न - எனல்ல. 50

பொருள் : - தூய்மையான பொருட்களும், உடலின் சேர்க்கையால் அழுக்கடைகின்றன. அப்படிப்பட்ட உடல் தூய்மையற்றது என்றும் சிறிதாக வெளியேற்றப்பட்ட அழுக்குகளிலிருந்து தோன்றியது (சுக்கிலம், இரத்தம் முதலானவைகளிலிருந்து) என்றும் கொள்ளவேண்டும்.

*अस्पृष्टं दृष्टमङ्गं हि सामर्थ्यात्कर्मशिल्पिनः ।
रम्यमूहे किमन्यत्स्यान्मलमांसास्थिमज्जतः ॥ 51

कर्मशिल्पिनः - கர்மமாகிற சில்பிகளுடைய, सामर्थ्यात्- சாமர்த்தியத்தினின்றும், दृष्टं - காணப்பட்ட, अस्पृष्टं - ஸ்பர்சிக்கிறதற்கு யோக்யமல்லாதது, अङ्गं हि - சரீரமன்றோ, ऊहे - ஊஹிக்கிறத்திலே, रम्यं - ரம்யமானது, किं- என்ன, मलमांसास्थिमज्जतः - மலமாம்சம், அஸ்தி, மஜ்ஜை இதுநின்றும், अन्यत् - வேறானது, स्यात् - ஆகக்கடவது.

பொருள் : - ஊழ்வினை என்னும் சிற்பி, தனது திறமையால் ஏற்படுத்திய சிற்பம் இவ்வுடல். இது தொடுவதற்குக்கூட தகுதியற்றது. ஆராய்ந்து பார்த்தால் இவ்வுடல், மலம், மாமிசம், எலும்பு, தசைகள் இவைகளாலாகியதே அன்றி வேறல்ல.

दैवादन्तः स्वरूपं चेद्बहिर्देहस्य किं परैः ।
आस्तामनुभवेच्छेयमात्मन्को नाम पश्यति ॥ 52

---

* अस्पष्टं

दैवात् - கர்மவசத்தினின்றும், देहस्य - சரீரத்தினுடைய, अन्तस्वरूपम् - உள்ளே இருக்கிற ஸ்வரூபமானது, बहिः - புறத்தியிலே, चेत् - ஆகில், परैः - அன்யங்களினாலே, किं - என்ன, आत्मन् - வாராய் ஆத்மனே, अनुभवेत् च इयम् - அனுபவிக்கவேணுமென்கிற இந்த வார்த்தையானது, आस्ताम् - இருக்கட்டும், के नाम - எவன்தான், पश्यन्ति - பாராநின்றான். 52

*பொருள் : - உயிரே ! ஊழ்வினையால்தான் ஒருவனது பண்பு அமையுமென்றால், வெளித்தோற்றமாக விளங்கும் உடலால் என்ன பயன் ? இதனை இவன் நுகர்வான், என்ற சொற்கள் இருக்கட்டும். யார் எதை அறிவார் ?*

एवं पिशितपिण्डस्य क्षयिणोऽक्षय शंकृतः ।
गात्रस्यात्मन्क्षयात्पूर्वं तत्फलं प्राप्य तत्यज ॥ 53

एवं - இப்படி, पिशितपिण्डस्य - மாம்ஸபிண்டமான, क्षयिणो - கெடக்கூடிய, अक्षयशंकृतः - கேடில்லாத சுகத்தைப் பண்ணப்பட்ட, गात्रस्य - சரீரத்தினுடைய, क्षयात् - கேடிநின்றும், पूर्वं - முந்தி, आत्मन् - வாராய் ஆத்மனே, तत्फलम् - சரீரத்தினாலாகிற பலத்தை, प्राप्य - அடைந்து, तत्- அந்த சரீரத்தை, त्यज - விடக்கடவாய். 53

*பொருள் : - இவ்வாறு (எலும்பு, குருதி, மாமிசம் இவைகளைச் சேர்த்து) பிசையப்பட்ட, அழியக் கூடிய உடல், வீடுபேறு அடைவதற்கான சாதனமாக அமைந்து, அதற்கான சரியான பயனை அளித்தவுடன், ஆத்மாவிடமிருந்து விடுபடுகிறது.*

आत्तसारं वपुः कुर्यास्तथात्मस्तत्क्षयेऽप्यभीः ।
आत्तसारेक्षुदाहेऽपि न हि शोचन्ति मानवाः ॥ 54

आत्मन् - வாராய் ஆத்மனே, वपुः - சரீரத்தை, आत्तसारम्- ஸ்வீகரிக்கப்பட்ட ஸாரத்தையுடையதானதாக, कुर्यात् - பண்ணக்கடவே, तथा - அப்படி, तत् क्षयेऽपि - அந்த சரீரக்ஷயத்திலேயும், अभीः -பயப்படாதே, आत्तसारे क्षुदाहेऽपि - ஸ்வீகரிக்கப்பட்ட சாரத்தையுடைய கருப்பங்கோதை சுடுகிறதி லேயும், मानवाः - மனுஷ்யர்கள், शोचन्ति - துக்கியா நின்றார்கள், न हि - இல்லையன்றோ. 54

*பொருள் : - சாறு பிழிந்தெடுக்கப்பட்ட சக்கையாக உடலைக் கொள்ளவேண்டும். அது அழிந்தபோதும் அதைக்கண்டு அஞ்சாதே. கரும்புச் சக்கை எரிக்கப்படும் போது மனிதர்கள் மனம் வருந்துவது இல்லை.*

अजस्रमास्रवन्त्यात्मन्दुर्मोचाः कर्मपुद्गलाः ।
तैः पूर्णस्त्वमधोधः स्या जलपूर्णो यथा प्लवः ॥ 55

आत्मन् - வாராய் ஆத்மனே, दुर्मोचाः - விடுகிறதற்கரிய தான, कर्मपुद्गलाः - கர்மபுத்கலங்கள், अजस्रम्- அனவரதம், आस्रवन्ति - ஆஸ்ரவமாகாநின்றதுகள், जलपूर्णैः - ஜலத்தினால் நிறைந்திக்கிற, प्लवः - தெப்பமானது, यथा - எப்படி, तथा - அப்படி, तैः - அந்த கர்மங்களினாலே, पूर्णः - நிறையப் பட்ட, त्वं - நீ, अधोधः - கீழே, கீழே, स्यात् - ஆகக்கடவே.

*பொருள் : - உயிரே! ஊழ்வினைப் பயன்களாலமைந்த, விடமுடியாத உலக ஈடுபாடு, ஓடத்தில் விழுந்த ஓட்டைகள் போல, வாழ்வை மூழ்கடிக்கின்றன.*

तन्निदानं तवैवात्मन्योगभावौ सदातनौ ।
तौ विद्धि सपरिस्पन्दं परिणामं शुभाशुभम् ॥ 56

आत्मन् - வாராய் ஆத்மனே, तवैव - உனக்கே, सदातनौ- அனவரதமும் விஸ்தரிக்கப்பட்ட, योगभावौ - மன வசன காய யோக ராக த்வேஷங்கள், तन्निदानं - அந்த கர்மத்திற்கு காரணம், तौ - யோக பாவங்களை, सपरिस्पन्दं - சபலத்தோடு கூடின, शुभाशुभम् - சுபாசுபமான, परिणामम् - பரிணாமமென்று, विद्धि - அறி.

***பொருள் : - உயிரே ! அப்படிப்பட்ட ஊழ்வினைக்குக் காரணம் உன்னுடைய நிலையற்ற உள்ளத்தாலும், உடலாலும் எப்போதும் ஏற்படும் விருப்பு, வெறுப்பு ஆகியவையே. இவையே நன்மையையும் தீமையையும் வெளிக்காட்டுவது (பரிணமிக்க செய்வது) என்று அறிவாயாக.***

आस्रवोऽयममुष्येति ज्ञात्वात्मन्कर्मकारणे ।
तत्तन्निमित्तवैधुर्यादपवाह्योर्ध्वगो भव ॥ 57

आत्मन् - வாராய் ஆத்மனே, कर्मकारणे - கர்ம காரணங்களான யோக பாவங்கள், अमुष्य - இந்த பரிணாமத்துக்கு, अयमास्रवः - இந்த ஆஸ்ரவமானது, इति - என்று, ज्ञात्वा - அறிந்து, तत्तन्निमित्तवैधुर्यात् - அதுக்கு காரணங்களைக் கெடுத்ததினின்றும், अपवाह्य - அந்தரங்கத்தை யுடைத்தானவனே, ऊर्ध्वगः- மேலே மோக்ஷத்தை அடையப்பட்டவன், भव - ஆகக்கடவே. 57

***பொருள் : - உயிரே ! இப்படிப்பட்ட வெளிக்காட்டு தலுக்குக் காரணமானவைகளே (சஞ்சலமான மனம், உடல், ஏற்படுத்தும் விருப்பு, வெறுப்புகள்) வழுவல்களுக்கு காரணமாகின்றன என்பதை யுணர்ந்து, அவற்றை நீக்குபவனே வீடுபேறு பெறத்தக்கவன்.***

संरक्ष्य समितिं गुप्तिमनुप्रेक्षापरायणः ।
तपः संयमधर्मात्मा त्वं स्या जितपरीषहः ॥ 58

समितिं - சமிதியை, गुप्तिं - குப்தியை, संरक्ष - நன்றாக ரக்ஷிக்கக்கடவே, अनुप्रेक्षापरायणः - அனுப்ரேக்ஷையில் தாத்பர்யத்தை உடையவனாய், तपस्संयमधर्मात्मा - தபஸ்ஸம்யமத்ரம ஸ்வரூபனான, त्वं - நீ, जितपरीषहः - ஜயிக்கப்பட்ட பரீஷஹத்தை யுடைத்தானவன், स्याः - ஆகக்கடவே.

*பொருள் : - உயிரினங்களை துன்புறுத்தாமல் இருத்தல், சமிதி எனப்படும். கெட்ட செயல்களை செய்யாமல் இருத்தல் குப்தி எனப்படும். நிலையாமை, அடைக்கலம் இல்லாத தன்மை, உலக வாழ்வு, ஒன்றாக இருத்தல், பிற பொருட்களில் இருந்து வேறுபட்டு இருத்தல் தூய்மையின்மை, ஈடுபாடு, அடக்கம், முதுமையின்மை உலகம், அறிவூட்டுவதற்கு இயலாமை, அறம் என்பவை அனுப்ரேக்ஷை எனப்படும். உள்ளார்ந்தது, வெளிப்படை யானது என்று தவம் இரு வகைப்படும். புலனடக்கம்,அறம், பசி, தாகம், குளிர், வெப்பம், நோய், துயர் இவை பரிஷங்கள் எனப்படும் இவற்றை எல்லாம் வென்று (இவற்றுக் கெல்லாம் அப்பாற்பட்டு) நீ விளங்க வேண்டும்.*

एवं च त्वयि सत्यात्मन्कर्मास्रवनिरोधनात् ।
नीरन्ध्रपोतवद्भूया निरपायो भवाम्बुधौ ॥ 59

एवं च - இப்படியும், आत्मन् - வாராய் ஆத்மனே உன்னிடத்தில், सति- உண்டாயுள்ளளவில், कर्मास्रवनिरोधनात्- கர்மாஸ்வரங்களைத் தடைபண்ணுகிறத்துநின்றும், नीरन्ध्रपोतवत् - ரந்தரமில்லாத கப்பலானது போல, भवाम्बुधौ- ஸம்சாரமாகிற சமுத்ரத்திலே, निरपायः - அபாயமில்லாதவன், भूयाः - ஆகக்கடவாய்.

பொருள் : - உயிரே ! நீ இவ்வாறு இருந்தால், முன் வினைப் பயன்களால் ஏற்பட்ட, தவறுகளைக் களைந்து, ஓட்டை விழாத படகு போல, இவ்வுலக வாழ்க்கை என்னும் கடலில் ஆபத்து இல்லாமல் பயணம் செய்வாய்.

विकथादिवियुक्तस्त्वमात्मभावनयान्वितः ।
त्यक्तबाह्यस्पृहो भूया गुप्त्याद्यास्ते करस्थिताः ॥ 60

विकथावियुक्तः - விகதை முதலானதுகளினாலே விடப்பட்ட, आत्मभावनयान्वितः - பாவனையோடே கூடின, त्वं - நீ, त्यक्तबाह्यस्पृहः - விடப்பட்ட பாஹ்யவார்த்தயை யுடைத்தானவன், भूयाः - ஆகக்கடவதே உனக்கு, गुप्त्याद्याः- குப்தி முதலானதுகள், करस्थिताः - கையிலே இருக்கப்பட்டதுகளாம். 60

பொருள் : - உயிரே நீ வீணர் கதைகளைப் பேசாமல் எல்லா உயிர்களையும், உன்னைப் போல் நினைத்து உன்னைக் காட்டிலும் மாறுபட்ட வெளியில் உள்ள பொருட்களின் மீது, பற்று அற்றவனாக ஆக வேண்டும். அப்போது இதற்கு முன்னால் கூறிய தீச் செயல்களில் இருந்து உன்னைப் பார்த்துக் கொள்வதாகிய 'குப்தி' என்பன போன்ற மற்ற இயல்புகளும் உனக்குக் கட்டுப்பட்டு இருக்கும்.

एवमक्लेशगम्येऽस्मिन्नात्माधीनतया सदा ।
श्रेयोमार्गे मतिं कुर्याः किं बाह्ये तापकारिणि ॥ 61

एवं - இப்படி, अक्लेशगम्ये - க்லேசமில்லாமல் அடையப்பட்டது, श्रेयो मार्गे - இந்த மோக்ஷ மாரக்கத்திலே, आत्माधीनतया - ஆத்மாத்வத்தினாலே, सदा - அனவரதமும், मतिं - புத்தியை, कुर्याः - பண்ணு, तापकारिणि - துக்க காரணமான, बाह्ये - பாஹ்யத்திலே, किं - என்ன. 61

பொருள் : - இவ்வாறு நீ இன்பத்துடன் பெறக்கூடிய வீடுபேற்றில், மனதைச் செலுத்துவாய். மனதில்

ஈடுபாட்டையும், பரிதவிப்பையும் ஏற்படுத்தும் அழியக்கூடிய உலகப் பொருட்களின் மீது மனதைச் செலுத்தாதே.

शुष्कनिर्बन्धतो बाह्ये मुह्यतस्तव हृद्यथा ।
प्रत्यक्षितैव नन्वात्मन्प्रत्यक्षनिरयोचिता ॥ 62

शुष्कनिर्बन्धतः - வ்ருதாநிர்பந்தத்தினின்றும், बाह्ये - பாஹ்யத்திலே, मुह्यतः - மோஹியாநின்ற, तव - உனக்கு, हृत्- மனஸானது, यथा ननु - நிச்சயமாக, आत्मन् - வாராய் ஆத்மனே, प्रत्यक्षनिरयोचिता - ப்ரத்யக்ஷமாக நரகத்திற்கு யோக்யமான துக்கமானது, प्रत्यक्षितैव - ப்ரத்யக்ஷமாக காணப்பட்டதே. 62

*பொருள் :* - வேண்டாத கட்டாயத்தால் வெளியுலக பொருட்களின் மீது அளவில்லா ஆசை கொண்டுள்ள உனக்கு இதற்கு முன்னமேயே நரகத்திற்கு ஒப்பான, துயர் அனுபவிக்கப்பட்டுவிட்டது.

रत्नत्रयप्रकर्षेण बद्धकर्मक्षयोऽपि ते ।
आध्मातः कथमप्यग्निर्दाह्यं किं वावशेषयेत् ॥ 63

रत्नत्रयप्रकर्षेण - ரத்னத்ரயத்தினுடைய உத்க்ருஷ்ட்டத்தினாலே, ते - உனக்கு, बद्धकर्मक्षयोऽपि - கட்டப்பட்ட கர்மக்ஷயமுமாம், (तथा) आध्मातः - எரியாநின்றிருக்கிறது, अग्निः - அக்னியானது, कथमपि - எப்படியும், दाह्यं - தஹிக்கிறதற்கு காரணமானது, किं वा - என்னத்தைத்தான், अवशेषयेत्- சேஷிக்கக் கடவது. 63

*பொருள் :* - நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம், ஆகிய இம்மூன்று விலை மதிப்பற்ற ரத்தினங்களை கொண்டிருக்கும் உனக்கு முன் வினைப் பயன்கள் குறையும். எரிந்து கொண்டிருக்கும் நெருப்பு எதையும் விட்டு வைப்பதில்லை.

क्षयादनास्रवाच्चात्मन्कर्मणामसि केवली ।
निर्गमे चाप्रवेशे च धाराबन्धे कुतो जलम् ॥ 64

आत्मन् - வாராய் ஆத்மனே, कर्मणाम् - கர்மங்களுடைய, क्षयात् - க்ஷயத்தினின்றும், अनास्रवात् च - ஆஸ்ரவமில்லாதத்தினின்றும், केवली - கேவலியானவன், असि - ஆகாநின்றாய், (तथा) निर्गमे च - நிர்கமனத்தையும், अप्रवेशे च - ப்ரவேசமுமில்லாத, धाराबन्धे - ஜலதாரையை கூடியுள்ளளவில், जलं - ஜலமானது, कुतः - எங்குநின்றும்.

*பொருள் : - முன் வினைப்பயன்களின் அழிவாலும், இப்பிறவியில் உலகப் பொருட்களின் மீது ஈடுபாடு அற்று இருப்பதாலும், நீ வீடுபேற்றை அடைவாய். தடை செய்யப் பட்ட நீரை உடைய ஓடையில் எவ்வாறு நீர் இருக்கும் ? அதாவது முன் வினைப்பயன் இப்பிறவியில் உலகப் பொருட்களின் மீது ஈடுபாடு, இவ்விரண்டும் ஓடையில் வந்து செல்லும் நீர் போன்றது. இவை இரண்டும் (நீர் வரத்தும், நீர் செல்வதும்) இல்லையென்றால் ஓடை என்று ஒன்று கிடையாது. தடைப்பட்ட நீர் அங்கேயே காய்ந்து விடும். அப்போது ஓடை என்பது இருக்காது. அதைப்போல முன்வினைப்பயனும் இப்பிறவியில் ஈடுபாடும் இல்லாத ஒருவனுக்கு வீடு பேறு என்பது நிச்சயம்.*

रत्नत्रयस्य पूर्तिश्च त्वयात्मन्सुलभैव सा ।
मोहक्षोभविहीनस्य परिणामो हि निर्मलः ॥ 65

आत्मन् - வாராய் ஆத்மனே, त्वया - உன்னாலே, रत्नत्रयस्य पूर्तिश्च - ரத்னத்ரயத்தினுடைய பரிபூர்ணமுமான அதுவும், सुलभैव - எளிதே, (तथा) मोहक्षोभविहीनस्य - மோஹத்தினாலே கலக்கமில்லாத ஜீவனுக்கு, परिणामः - பரிணாமமானது, निर्मलो हि - நிர்மலமன்றோ. 65

பொருள் : - உயிரே ! இம்மூன்று ரத்தினங்களை முழுவதுமாக கொண்டிருக்கும் உன்னால் வீடுபேற்றை அடைவது மிகவும் எளிதானது. ஏனெனில் ஈடுபாடும் அதனால் ஏற்படும் மனக் கலக்கமும் இல்லாதவனுடைய வளர்ச்சி தூய்மையாக இருக்குமன்றோ !

परिणामविशुध्यर्थं तपो बाह्यं विधीयते ।
न हि तण्डुलपाकः स्यात्पावकादि परिक्षये ॥ 66

परिणामविशुध्यर्थं - பரிணாம விசுத்தி நிமித்தமாக, बाह्यं तपः - பாஹ்ய தபசானது, विधीयते - பண்ணப்படுமது, (तथा) पावकादिपरिक्षये - நெருப்பு முதலானதிலே, तण्डुलपाकः - அரிசி அசனமாகிறது, स्यात् - ஆகக்கடவது, न हि - இல்லையன்றோ.

பொருள் : - ஊழ்வினைப்பயன் குறைபடுதல், இப்பிறவியில் தன்னைச் சுற்றியுள்ள பொருட்கள் மீது ஈடுபாடு அற்று இருத்தல், இவை இரண்டும் தூய்மை என்ற பெயரில் பரிணாம வளர்ச்சியடைந்து, ஐம்புலன்களைக் கட்டுப்படுத்துகிறது. நெருப்பு இல்லாவிடில் அரிசி எவ்வாறு வேகும் ? (அதாவது ஊழ்வினைப்பயன், ஈடுபாடு இவையிரண்டும் நெருப்புக்கு உவமை. ஐம்புலன்களின் செயல்பாடு அரிசியை வேகவைக்கும் செயலுக்கு உவமை. ஆகவே, நெருப்பு இல்லாவிடில் அரிசி வேகாது அல்லவா ?)

परिणामविशुद्धिश्च बाह्ये स्यात् निःस्पृहस्य ते ।
निःस्पृहत्वं तु सौख्यं तद्बाह्ये मुह्यसि किं मुधा ॥ 67

बाह्ये - பாஹ்யத்திலே, निःस्पृहस्य - நிஸ்பருஹனான, ते- உனக்கு, परिणामविशुद्धिश्च - பரிணாமவிசுத்தியும், स्यात् - ஆகக்கடவது, तु - விசேஷமுண்டு, निःस्पृहत्वं - வாஞ்சையில்லாதது, सौख्यम् - சுகமானது, तत् - அது, காரணத்திநின்றும், बाह्ये - பாஹ்யத்திலே, मुधा - வ்யர்தத்தினாலே, किं - என்ன, मुह्यसि - மோஹியாநின்றாய்.

பொருள் : - உலகப் பொருட்களில் மீது நீ பற்றற்று இருந்தால் அதன் காரணமாக உனக்கு தூய்மை ஏற்படும். ஈடுபாடு அற்று இருத்தலே இன்பமாகும். ஆகவே நீ ஏன் உலகப் பொருட்களில் வீணாக மயங்குகிறாய்.

गुप्तेन्द्रियः क्षणं वात्मन्नात्मन्यात्मानमात्मना ।
भावयन्पश्य तत्सौख्यमास्तां निश्रेयसादिकम् ॥ 68

गुप्तेन्द्रियःक्षणं वा - மறைக்கப்பட்ட இந்திரியங்களை க்ஷணமாத்ரந்தான், आत्मन् - வாராய் ஆத்மனே, आत्मनि - தன்னிடத்திலே, आत्मानं- தன்னை, आत्मना - தன்னாலே, भावयन् - பாவியாநின்றவனாய்க்கொண்டு, तत् सौख्यम् - அனந்த சுகத்தை, पश्यतः - பாராநின்றவனுக்கு, निश्रेयसादिकम् - மோக்ஷ முதலானது, आस्तां - இருக்கட்டும். 68

பொருள் : - உயிரே நீ ஒரு கண நேரம் ஐம்புலன்களை அடக்கியவனாக, உன்னிடத்திலேயே உன்னால் உன்னை உணர்ந்து இன்பத்தை அடைவாயாக.

अनन्तं सौख्यमात्मोत्थमस्तीत्यत्र हि सा प्रमा ।
शान्तस्वान्तस्य या प्रीतिः स्वसंवेदनगोचरा:* ॥ 69

आत्मोत्थम् - தன்னாலே உண்டான, अनन्तं सौख्यं - அனந்த ஸௌக்யமானது, अस्ति - உண்டாகாநின்றது, इति - என்று, अत्र - இதிலே, शान्तस्वान्तस्य - சாந்தமான மனதை உடையவனுக்கு, स्वसंवेदनगोचरा: - ஆத்மஞான விஷயமான, या - யாதொரு, प्रीतिः - ப்ரீதியானது, सा - அது, प्रमा हि - ஞானமன்றோ. 69

பொருள் : - ஆன்மாவில் உண்டான இன்பம் முடிவற்றது என்பது, தன்னை தன்னால், தன்னிடத்தில் கண்டவருக்கு நிச்சயமாகத் தெரியும்.

---

* स्वंवेदनगोचरा: – आत्मज्ञानैकविषया: ।

प्रसारिताङ्घ्रिणा लोकः कटिनिक्षिप्तपाणिना ।
तुल्यः पुंसोर्ध्वमध्याधोविभागस्त्रिमरुद्धृतः ॥ 70

प्रसारिताङ्घ्रिणा - பரப்பப்பட்ட பாதத்தையுடைய, कटिनिक्षिप्तपाणिना - அரையிலே வைக்கப்பட்ட கையை உடைத்தான, पुंसा - புருஷனோடே, ऊर्ध्वमध्याधो विभागस्त्रिमरुद्धृतः - ஊர்த்வலோக, மத்யமலோக, அதோலோக, விபாகமான ஐச்வர்யத்தை உடைய, கனோதயிவாத, கனவாத, தனுவாதமென்னும் வாதத்ரயத்தினால் சூழப்பட்ட, लोकः - லோகமானது, तुल्यः - ஸமானமாம். 70

பொருள் :- இந்த உலகம் தனது கால்களை பரப்பிக்கொண்டு இடையில் கைகளை வைத்துக்கொண்டு நிற்கும் மனிதன் போல தலைப்பகுதி, இடைப்பகுதி, கடைப் பகுதி என்னும் மூன்று பகுதிகளைக் கொண்டதாக உள்ளது. மேகங்களைத் தோற்றுவிக்கும் காற்று, புயல் காற்று, தென்றல் காற்று என்னும் மூன்று காற்றுகளால் உலகம் சம நிலையில் விளங்குகிறது. அதாவது மேகங்களைத் தோற்றுவிக்கும் காற்று, உலகைச் செழிக்கச் செய்கிறது. புயல்காற்று தேவை இல்லாதவற்றை அழிக்கிறது. தென்றல் காற்று இவை இரண்டையும் சமப்படுத்துகிறது. ஆக இம்மூன்றும் இருக்கும் உலகமே இடையில் கையை வைத்துக் கொண்டிருக்கும் மனிதனைப் போல மாற்றங்களை எதிர்கொள்கிறது.

जन्ममृत्योः पदे ह्यात्मन्नसंख्यातप्रदेशके ।
लोके नायं प्रदेशोऽस्ति यस्मिन्नाभूरनन्तशः ॥ 71

जन्ममृत्योः - ஜனன மரணங்களுக்கு, पदे - ஸ்தானமானது, असंख्यातप्रदेशके - அஸம்க்யாத ப்ரதேசமான, लोके - லோகத்திலே, यस्मिन् - யாதொரு ப்ரதேசத்திலே, अनन्तशः - பலவாரம், नाभूः - ஆனாயில்லை, अयं प्रदेशः - இந்த ப்ரதேசமானது, नास्ति हि - இல்லையன்றோ. 71

*பொருள் : - பிறப்பு, இறப்பு இவையிரண்டிற்கும் அப்பாற்பட்ட, அதே நேரத்தில் இவையிரண்டும் மீண்டும் மீண்டும் ஏற்படும் ஒரு குறிப்பிட்ட இடம், இவ்வுலகில் இல்லை.*

सत्यज्ञाने पुनश्चात्मन्पूर्ववत्संसरिष्यसि ।
कारणे जृम्भमाणेऽपि न हि कार्यपरिक्षयः ॥ 72

पुनश्च - பிற்பாடும், आत्मन् - வாராய் ஆத்மனே, अज्ञाने - அக்ஞானமானது, सति - உண்டாயுள்ளளவில், पूर्ववत् - முன்போல, संसरिष्यसि - சஞ்சரியாநின்றாய், (तथा) कारणे - காரணமானது, जृम्भमाणेऽपि - வர்த்தித்துள்ளவிலும், कार्यपरिक्षयः - கார்யத்தினுடைய கேடானது, न हि - இல்லையன்றோ. 72

*பொருள் : - உயிரே ! நீ அறியாமை இருக்கும் வரையில் உலகில் உழலுகின்றாய். காரணம் வளரும் போது காரியம் அழிவுறுவதில்லை.*

यतस्व तत्तपस्यात्मन्मुक्त्वा मुग्धोचितं सुखम् ।
चिरस्थाय्यन्धकारोऽपि प्रकाशे हि विनश्यति ॥ 73

तत् - அது காரணத்தினின்றும், आत्मन् - வாராய் ஆத்மனே, मुग्धोचितं - மூடர்களுக்கு யோக்யமான, सुखं - சுகத்தை, मुक्त्वा - விட்டு, तपसि - தபஸிலே, यतस्व - யத்னம் பண்ணு, (तथा) चिरस्थायि - நெடுங்காலம் இருக்கப்பட்ட, अन्धकारोऽपि - அன்தகாரமானாலும், प्रकाशे - ப்ரகாசமானது, सति - உண்டாயுள்ளளவிலே, विनश्यति हि - கெடாநின்றதன்றோ. 73

*பொருள் : - உயிரே முட்டாள்களுக்கு ஏற்ற உலக இன்பத்தை விட்டு விட்டு தவம் செய்வதற்கு முயற்சி செய். இருட்டு நீண்ட காலம் இருந்தாலும் புதிதாக ஏற்படும் ஒரு ஒளி அந்த இருட்டை அழித்து விடுகிறது. (அறியாமை என்னும் இருளில் மூழ்கி அதையே இன்பமென நினைக்கும்*

*மூடர்கள் தவம் இயற்றுவது இல்லை. ஆனால் தவமியற்றத் துவங்குபவன், அதன் காரணமாக ஏற்படும் அறிவால் அறியாமை என்னும் இருளை போக்கிக்கொள்கிறான்)*

भव्यत्वं कर्मभूजन्म मानुष्यं स्वङ्गवंश्यता ।
दुर्लभं ते क्रमादात्मन् समवायस्तु किं पुनः ॥ 74

भव्यत्वं - பவ்யத்வமும், कर्मभूजन्म - கர்மபூமியிலே ஜன்மிக்கிறதும், मानुष्यं - மனுஷ்யத்வமும், स्वङ्गवंश्यता - பஞ்சேந்திரிய விஷயங்களிலே போகாமல், தனக்கு சரீர வசமாகிறதும், ते - உனக்கு, आत्मन् - வாராய் ஆத்மனே, क्रमात् - க்ரமத்தினின்றும், दुर्लभम् - ஒன்றொன்று வந்து லபிக்கிறது மஹா துர்லபமாம், तु - பின்னை, समवायः - சமூகமாய் ஒன்றாக வந்து வஹிக்கிறது, किं पुनः - சொல்ல வேணுமோ. 74

*பொருள் : - மூன்று இரத்தினங்களாகிய, நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகிய இம்மூன்றைப் பெறுவதும் (பவ்யத்வம்) ஊழ்வினையை அனுபவிக்க இந்த பூமியில் பிறப்பதும், ஊழ்வினையை நீக்கி, வீடுபேறு பெறுவதற்காக மானிடப் பிறவியைப் பெறுவதும் அதற்கு வழிகோலும் வகையில் ஐம்புலன்களை அடக்குவதும் ஒன்றாக அமைவது என்பது மிகவும் கடினம். இந்தப் பிறவியில் உனக்கு இப்படிப்பட்ட ஒரு வாய்ப்பு வந்து சேர்ந்திருக்கிறது. மேலும் என்ன வேண்டும் ?*

व्यर्थ स समवायोऽपि तवात्मन्धर्मधीर्न चेत् ।
कणिशोद्गमवैधुर्ये केदारादिगुणेन किम् ॥ 75

आत्मन् - வாராய் ஆத்மனே, तव - உனக்கு, धर्मधीः - தர்மபுத்தியானது, न चेत् - இல்லையாகில், स समवायोऽपि - பவ்யத்வம் முதலான, அந்த சமூகத்தோடே கூட வந்து பெறுகிறதும், व्यर्थं - வ்யர்த்தமாம், कणिशोद्गमवैधुर्ये -

பீஜோத்பத்தி வ்யர்த்தமாயுள்ளவில், केदारादिगुणेन - க்ஷேத்ர முதலான குணத்தினாலே, किं - என்ன ப்ரயோஜனம். 75

*பொருள் : - உயிரே உன்னுடைய அறிவு அறத்தில் செல்லவில்லை என்றால், இப்படிப்பட்ட அமைப்புக் கொண்டுள்ள மானிடப் பிறவி என்பது வீண். பழுதான விதையை கொண்டு, நல்விளைச்சலைத் தரக் கூடிய நிலத்தில் பயிர் விளைவிக்க முடியுமா ? (முடியாது)*

तदात्मन्दुर्लभं गात्रं धर्मार्थं मूढ कल्प्यताम् ।
भस्मने दहतो रत्नं मूढः कः स्यात्परो जनः ॥ 76

आत्मन् - வாராய் ஆத்மனே, तत् - ஆகவே, दुर्लभं - பெறுவதற்கருமையான, गात्रं - சரீரத்தை, धर्मार्थं - தர்ம நிமித்தமாக, मूढ - வாராய் மூடாத்மனே, कल्प्यताम् - கல்ப்பிக்கப்படுமது, रत्नं - ரத்னத்தை, भस्मने - சாம்பலின் பொருட்டு, दहतः - சுடுகிறவனைக் காட்டிலும், मूढः - மூடனானவன், परः - அன்யனான, जनः - ஜனமானது, कः - எவன், स्यात् - ஆகக்கடவது. 76

*பொருள் : - உயிரே ! பெறுவதற்கரிய மனித உடலைப் பெற்று, அறத்தின் பொருட்டு அந்த உடலை பயன்படுத்து. சாம்பலைப் பெறுவதற்காக முட்டாள்தான் விலை உயர்ந்த வைரக்கல்லை பொசுக்குவான்.*

देवता भविता श्वापि देवः श्वा धर्मपापतः ।
तं धर्मं दुर्लभं कुर्या धर्मो हि भुवि कामसूः ॥ 77

धर्मपापतः - புண்யபாபோதயத்தினின்று, श्वापि - நாயானது, देवता - தேவத்வமாகாநின்றது, देवः - தேவனானவனும், श्वा - நாயானது, भविता - ஆகாநின்றது, दुर्लभं - பெறுவதற்கு அருமையான, तं धर्मं - அந்த தர்மத்தை, कुर्यात् - பண்ணு, (तथा) धर्मः - தர்மமானது, भुवि - பூமியிலே, कामसूः हि - வாஞ்சித்ததைக் கறக்கிறதன்றோ. 77

பொருள் : - ஊழ்வினைப் பயனாய் விண்ணுலகைச் சேர்ந்த தேவனும் நாயாகப் பிறக்கிறான். தனது நல்வினையால் ஒரு நாய் கூட தேவனாகிறது. அப்படிப்பட்ட அந்த அறத்தை இப்புவியில் நீ செய். அறமே விரும்பியதை அளிக்கும் திறம் பெற்றது.

भव्यस्याबाह्यचित्तस्य सर्वसत्वानुकम्पिनः ।
करणत्रयशुद्धस्य तवात्मन्बोधिरेधताम् ॥ 78

भव्यस्य - பவ்யனான, अबाह्यचित्तस्य - பாஹ்யசித்தியில்லாத, सर्वसत्वानुकम्पिनः - ஸமஸ்த ஜீவன்களிலேயும் க்ருபையை யுடைத்தான, करणत्रयशुद्धस्य - ப்ரவருத்த பூர்வ கரணங்களினாலே சுத்தனாயிருப்பானாயிருக்கிற, तव - உனக்கு, आत्मन् - வாராய் ஆத்மனே, बोधिः - பெறுதற்கு அருமையான, ரத்னத்ரயமான போதியானது, एधताम् - வர்த்திக்கப்படுதாம். 78

பொருள் : - நற்காட்சி, நல்லறிவு நல்லொழுக்கம் இவை மூன்றையும் கொண்டுள்ள, உலகப் பொருட்களில் பட்டற்ற எல்லா உயிரினங்களிடத்தும் அன்பு கொண்டுள்ள, மனம், சொல், செயல் ஆகிய இம்மூன்றிலும் தூய்மையாக உள்ளவனுக்கு மெய்ஞானம் ஏற்படுகிறது.

पश्यात्मन्धर्ममाहात्म्यं धर्मकृत्यो न शोचति ।
विश्वैर्विश्वस्यते चित्रं स हि लोकद्वये सुखी ॥ 79

धर्मकृत्यः - தக்மத்தைப் பண்ணுகிறவன், न शोचति - துக்கியாநின்றானில்லை, आत्मन् - வாராய் ஆத்மனே, धर्ममाहात्म्यम् - தர்மமாஹாத்மியத்தை, पश्य - பார், विश्वैः - சமஸ்தர்களினாலேயும், विश्वस्यते - விச்வசிக்கப்படாநின்றான், सः - அவன், लोकद्वये - இகபரலோகத்திலேயும், सुखी - சுகியாநின்றான், चित्रं हि - ஆச்சரியமன்றோ. 79

பொருள் : - அறத்தைப் பின்பற்றுபவன் ஒருபோதும், வருத்தப்படுவது இல்லை. அவனிடம் எல்லோரும்,

*நம்பிக்கை வைக்கிறார்கள். அவன் இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தை அடைகிறான். இது ஆச்சரியம் அன்றோ.*

तवात्मन्नात्मनीनेऽस्मिञ्जैनधर्मेऽतिनिर्मले ।
स्थवीयसी रुचिः स्थेयादा मुक्तेर्मुक्तिदायिनी ॥ 80

आत्मन् - வாராய் ஆத்மனே, तव - உனக்கு, आत्मनीने - ஆத்மனுக்கு ஹிதத்தின் பொருட்டு, अतिनिर्मले - மிகவும் நிர்மலமான, अस्मिन् जैनधर्मे - இந்த ஜின தர்மத்திலே, मुक्तिदायिनी - மோக்ஷத்தை கொடுக்கிறதான, स्थवीयसी - ஸ்திரமான, रुचिः - ப்ரீதியான நம்பிக்கையானது, आमुक्तेः - மோக்ஷபர்யந்தம், स्थेयात् - ஸ்திரமாகக்கடவது. 80

*பொருள் : - உயிரே, உனது நன்மைக்காக அப்பழுக்கற்ற, வீடுபேற்றைக் கொடுக்கக்கூடிய நிலையான ஜைன அறத்தை மேற்கொள்வாயாக. அது ஒன்றே வீடு பேறுபெறும்வரை உலகப்பொருட்களினின்று விடுதலையை வழங்கக் கூடியது.*

इत्यनुप्रेक्षया चासीदक्षोभ्यास्य विरक्तता ।
व्यवस्था हि सतां शैली साहाय्येऽप्यत्र किं पुनः ॥ 81

इति - இப்படி என்று சொல்லிவந்த, अनुप्रेक्षया च - அனுப்ரேக்ஷையினாலேயும், अक्षोभ्यः - இந்திரிய விஷயங்களிநின்றும், अस्य - இந்த ஜீவந்தரனுக்கு, विरक्तता- விரக்தத்வமானது, आसीत् - ஆச்சுது, सतां - சத்புருஷர் களுக்கு, शैली - சீலஸ்வபாவமானது, व्यवस्था हि- ஸ்வபாவத்தினாலே, வ்யவஸ்தையாயிராநின்றதன்றோ, अत्र- இந்த சத்புருஷரிடத்திலே, साहाय्येऽपि - சகாயமும் வந்து கூடியுள்ளளவிலே, किं पुनः - சொல்லவேணுமே. 81

*பொருள் : - இப்படி சிந்தித்ததால் ஜீவந்தரனுக்கு ஐம்புலன்களால் ஏற்படும் இன்பங்களில் நாட்டம்*

இல்லாமல் போய்விட்டது. சரியான நேரத்தில் வந்து அடைந்த இப்படிப்பட்ட உணர்வு சான்றோர்களுடைய நல்லொழுக்கத்தை நிலை நிறுத்துவது அன்றோ.

विरक्तो राज्यमन्यच्च न तृणायाप्यमन्यत ।
हस्तस्थेप्यमृते को वा तिक्तसेवापरायणः ॥ 82

विरक्तः - விரக்தனான ஜீவந்தரனானவன், राज्यं - ராஜ்யத்தையும், अन्यच्च - அன்யமான சகல வஸ்த்துவையும், तृणायापि - த்ருணத்தின் பொருட்டு, अमन्यत - எண்ணினான், न - இல்லை, अमृतं - அம்ருதமானது, हस्तस्थेऽपि - கையிலே வந்திருந்துள்ளளவிலும், तिक्तसेवापरायणः - கசப்பான வஸ்துவை அனுபவிக்க வேணுமென்று தாத்பர்யத்தை உடைத்தானவர்கள், को वा - எவன்தான். 82

*பொருள் : - இவ்வாறு ஈடுபாடு அற்றுப்போன ஜீவந்தரன் அரசையும், மற்ற செல்வங்களையும் ஒரு (ஒரு புல்லளளவுகூட) புல்லாகக்கூட மதிக்கவில்லை. கையில் அமிர்தம் கிடைத்திருக்கும்போது கசப்பான பொருளை எவன்தான் உண்பான்?*

ततस्तस्याद्विनिर्गत्य संपूज्य परमेश्वरम् ।
योगीन्द्रादशृणोद्धर्ममधीती जिनशासने ॥ 83

ततः - பிற்பாடு, तस्मात् - அங்குநின்றும், विनिर्गत्य - புறப்பட்டு, परमेश्वरम् - ஸ்வாமியை, संपूज्य - பூஜித்து, जिनशासने - ஜினசாஸனமெல்லாம், अधीती - அப்யாஸம் பண்ணியுள்ளளவில், योगीन्द्रात् - யோகீந்த்ரர் இடத்தினின்றும், धर्मं - தர்மத்தை, अशृणोत् - கேட்டான், கேட்டான், 83

*பொருள் : - பிறகு அங்கிருந்து புறப்பட்ட ஜீவந்தரன் இறைவனை வணங்கி ஒரு முனிவரிடம் மாணவனாக அமர்ந்து ஜைனமத கோட்பாடுகளைக் கற்றுக்கொண்டான்.*

धर्मश्रुतेर्बभूवायं धार्मविद्योऽतिनिर्मलः ।
अत्युत्कटो हि रत्नांशुस्तदज्ञवेकटकर्मणा ॥ 84

धर्मश्रुतेः - தர்மஸ்ருதியினின்றும், अयं - இந்த ஜீவந்தரனானவன், अतिनिर्मलः - மிகவும் நிர்மலமான, धार्मविद्यः - தர்மசாஸ்திரத்தை உடைத்தானவன், बभूव - ஆனான், (तथाहि - அப்படியன்றோ,) रत्नांशुः - ரத்னகிரணமானது, तदज्ञवेकटकर्मणा - அதை அறிந்து ஸமஸ்த கடகத்தைப் பண்ணப்பட்டவனாலே, अत्युत्कटो हि - மிகவும் உத்க்ருஷ்ட்டமாகாநின்றதன்றோ. 84

*பொருள் : - அந்த அறத்தைக் கற்ற இந்த ஜீவந்தரன் தூய்மையான அறத்தின் அறிவைப் பெற்றவன் ஆனான். சிற்பி, சாணைக் கல்லில் தீட்டுவதால் மட்டுமே இரத்தினங்கள் ஒளிமிக்கதாக விளங்குகின்றன.*

पुनश्चारणयोगीन्द्रः पूर्वजन्मबुभुत्सया ।
भूपेन परिपृष्टोऽयमाचष्टास्य पुराभवम् ॥ 85

पुनः - பிற்பாடு, पूर्वजन्मबुभुत्सया - பூர்வஜன்மத்தைக் கேட்க வேணுமென்று வாஞ்சையையுடைத்தான, भूपेन - ராஜாவினாலே, परिपृष्टः - கேட்கப்பட்டிருப்பாராயிருக்கிற, अयं चारणयोगीन्द्रः - இந்த சாரணபரமேஷ்டியானவர், अस्य - இந்த ராஜாவுக்கு, पुराभवम् - பூர்வ பவத்தை, आचष्ट - சொன்னார். 85

*பொருள் : - பிறகு மீண்டும் தனது முற்பிறவியைப் பற்றிய அறிவைப் பெற வேண்டும் என்ற எண்ணத்தில் ஜீவந்தரன் தனக்கு உபதேசம் செய்த முனிவரை தனது முற்பிறவியைப் பற்றி கூறுமாறு வினவினான். அவரும் அதனை ஜீவந்தரனுக்கு எடுத்துரைத்தார்.*

भूपेन्द्र धातकीषण्डे भूम्यादितिलके पुरे ।
सूनुः पवनवेगस्य राज्ञोऽभूस्त्वं यशोधरः ॥ 86

भूपेन्द्र - வாராய் ராஜனே, धातकीषण्डे - தாதகீஷண்ட த்வீபத்திலே, भूम्यादि तिलके - பூமி திலகமென்று பேரை யுடைய, पुरे - பட்டணத்திலே, पवनवेगस्य - பவனவேக னென்று பேரையுடைய, राज्ञः - ராஜாவுக்கு, त्वं - நீ, यशोधरः- யசோதரனென்று பேரையுடைய, सूनुः - புத்ரனானவன், अभूः- ஆனாய். 86

*பொருள் : - அரசே, தாதகீஷண்டம் என்ற இடத்தில் பூம்யாதி திலகம் என்ற நகரில் பவனவேகன் என்ற அரசனுக்கு யசோதரன் என்ற பிள்ளையாக நீ பிறந்தாய்.*

राजहंस कदाचित्त्वं राजहंसस्य शावकम् ।
नीडात्क्रीडार्थमानीय निरवद्यमवीवृधः ॥ 87

राजहंस - வாராய் ராஜச்ரேஷ்டனே, कदाचित् - ஒருகால், त्वं - நீ, राजहंसस्य - ராஜஹம்ஸத்தினுடைய, शावकं - குட்டியை, नीडात् - கூட்டினின்றும், क्रीडार्थं - க்ரீடைநிமித்தமாக, आनीय - கொண்டு வந்து, निरवद्यं - தோஷமில்லாமல், अवीवृधाः - வளர்த்தாய். 87

*பொருள் : - அரசர்களுக்குள் அன்னம் போன்றவனே, அந்தப் பிறவியில் நீ ஒரு சமயம் ஒரு அன்னப் பறவையின் குஞ்சு ஒன்றை அதனுடைய கூட்டிலிருந்து விளையாட்டாக பிரித்து எடுத்து வந்து, எந்தவிதமான குறையும்மில்லாமல் வளர்த்து வந்தாய்.*

तत्कुतोऽपि समाकर्ण्य धार्मविद्यः स ते पिता ।
तदा धर्ममुपादिक्षद्यतोऽभूरति धार्मिकः ॥ 88

धार्मविधः - தர்ம சாஸ்திரத்தையுடைய, सः - அப்படிப் பட்ட, ते - உன்னுடைய, पिता - தகப்பனானவன், तत् - அதை, कुतोऽपि - எங்கிருந்தோ, समाकर्ण्य - கேட்டு, तदा - அப்பொழுது, यतः - யாதொரு காரணத்தினின்றும், अतिधार्मिकः - மிகுதியான தர்மத்தை உடையவன், अभूः - ஆகாநின்றாய் என்று, धर्म - தர்மத்தை, उपादिशत् - உபதேசம் பண்ணினான். 88

*பொருள் : - இந்த செய்தியை எங்கிருந்தோ கேட்டறிந்த, அறத்தை நன்கறிந்த உனது தந்தை, நீ சிறந்த அறவோனாக திகழ வேண்டும் என்பதற்காக அறத்தை உனக்கு உபதேசித்தான்.*

निवारितोऽपि पित्रा त्वमतिनिर्वेदतस्ततः ।
जातरूपधरो जातः स्त्रीभिरष्टाभिरन्वितः ।। 89

ततः - பிற்பாடு, पित्रा - உன்னுடைய பிதாவினாலே, निवारितः - தடையிடப்பட்டிருக்கிற, त्वमपि - நீயும், अतिनिर्वेगतः - மிகவும் வைராக்யத்தினின்றும், अष्टाभिः - எட்டுபிரகாரமான, स्त्रीभीः - ஸ்திரியர்களோட, अन्वितः - கூடினவனாயாக்கொண்டு, जातरूपधरः - நிர்வாண முத்ரையை தரிக்கப்பட்டவன், जातः - ஆனாய். 89

*பொருள் : - தீச்செயலை உணர்ந்து, உலக வாழ்வை வெறுத்து, தனது எட்டு மனைவியருடன், தனது தந்தை தடுத்தும்கூட ஜைனதீட்சையை மேற்கொண்டாய்.*

घोरेण तपसा लब्ध्वा देवत्वं च त्रिविष्टपात् ।
अष्टाभिः स्त्रीभिरेताभिरत्राभूर्भव्यपुङ्गव ।। 90

घोरेण - கொடிதான, तपसा - தபஸினாலே, देवत्वं च - தேவஸ்வரூபத்தையும், लब्ध्वा - பெற்று, त्रिविष्टपात् - தேவலோகத்தினின்றும், अष्टाभिः - எட்டுபிரகாரமான, एताभिः स्त्रीभिः - இந்த ஸ்திரியர்களோடே, अत्र - இவ்விடத்திலே, भव्यपुङ्गव - பவ்யச்ரேஷ்டனே, अभूः - ஆனாய். 90

*பொருள் : - பிறகு கடும் தவம் இயற்றி தேவர் உருவத்தை அடைந்து, அதனின்று இப்படிப்பட்ட எட்டுப் பெண்களுடன் இந்தப் பிறவியை எடுத்தாய்.*

स्वपदाद्बालहंसस्य पितृभ्यां च पुराभवे ।
वियोजनाद्वियोगस्ते बन्धोऽभूदिव बन्धनात् ॥ 91

पुराभवे - பூர்வபவத்திலே, पितृभ्यां च - தாய் தகப்பனிடத்துநின்றும், स्वपदात् - தன்னுடைய ஸ்தானத்தி நின்றும், बालहंसस्य - பாலஹம்சத்தினுடைய, वियोजनात् - பிரிந்த காரணத்தினின்றும் ஆச்சுது.

*பொருள் : - முற்பிறவியில் தாய் தந்தையரிடம் இருந்தும், தனது கூட்டில் இருந்தும் பால ஹம்சத்தைப் பிரித்ததால் உனக்கு இந்தப் பிறவியில் உனது உறவினரிடமிருந்து பிரிவும், இப்படிப்பட்ட பந்தங்களும் ஏற்பட்டன.*

इति योगीन्द्रवाक्येन भोगीव पविपाततः ।
भीतो राज्यादयं राजा प्रणम्य स्वपुरीमयात् ॥ 92

इति - இப்படியென்று, योगीन्द्रवाक्येन - யோகீந்த்ர ருடைய வசனத்திலே, पविपाततः - இடியினாலே, भोगीव - சர்ப்பமானது போல, ततः - பிற்பாடு, राज्यात् - ராஜ்யத்தி நின்றும், भीतः - பயந்திருக்கிற, अयं - இந்த ராஜாவானவன்,

प्रणम्य - நமஸ்கரித்து, स्वपुरीं - தன்னுடைய பட்டணத்தை, कुर्यात् - அடைந்தான். 92

*பொருள் : - முனிவருடைய இப்படிப்பட்ட சொல்லைக் கேட்டு இடியோசையால் அச்சமுற்ற பாம்பு போல அரசாட்சியில் இருந்து வெறுப்புற்ற ஜீவந்தரன் முனிவரை வணங்கி தனது நகரை நோக்கிச் சென்றான்.*

सद्धर्मामृतपानेन सानुजास्तस्य वल्लभाः ।
विषप्रख्यममन्यन्त तत्सौख्यं विषयोद्भवम् ॥ 93

तस्य - அவனுடைய, सानुजाः वल्लभाः - மனைவியரும், அவர்களது உடன்பிறந்தவர்களும், सद् - धर्म - अमृतपानेन - நல்லறமாகிய அமுதத்தைக் குடித்ததனால், विषयोद्भवं - உலகப்பொருட்களினால் ஏற்படும், तत्सौख्यं - அந்த இன்பத்தை, विषप्रख्यं - நஞ்சுக்கு ஒப்பாக, अमन्यन्त - நினைத்தனர்.

*பொருள் : - அவனது மனைவியரும் அவர்களது உடன்பிறந்தவர்களும் ஜீவந்தரனின் நல்லறங்களைச் செவியுற்று, உலகப் பொருட்களால் ஏற்படும் இன்பத்தை நஞ்சுக்கு ஒப்பாக மதித்தனர். (அதாவது, உலகப் பொருட்களை வெறுத்தனர்)*

तत्र गन्धर्वदत्तायाः पुत्रं सत्यं धराह्वयम् ।
अभिषिच्य ततस्ताभिः प्रापदास्थायिकां कृती ॥ 94

तत्र - அவ்விடத்திலே, गन्धर्वदत्तायाः - கந்தர்வதத்தையினுடைய, सत्यंधराह्वयम् - சத்யந்திரன் என்ற பேரையுடைய, पुत्रं - புத்ரனை, अभिषिच्य - அபிஷேகத்தைப் பண்ணி, ततः - பிற்பாடு, ताभिः - அந்தஸ்த்ரியர்களோடகூட, कृती -

புண்யவானான ஜீவந்தரனானவன், आस्थायिकां - ஸமவசரணத்தை, प्रापत् - அடைந்தான். 94

*பொருள் : - பிறகு ஜீவந்தரன் கந்தர்வதத்தையின் மகன் சத்யந்தரனை அரசனாக முடி சூட்டிவிட்டு, தனது எல்லா மனைவிகளுடனும் தவச்சாலையை அடைந்தான்.*

श्रीसभायां समभ्येत्य श्रीवीरं जिननायकम् ।
पूजयामास पूज्योऽयमस्तावीच्च पुनः पुनः ॥ 95

पूज्यः - பூஜ்யனான, अयं - இந்த ஜீவந்தரனானவன், श्रीसभायां - ஐச்வர்யத்தோடே கூடியிருக்கிற ஸமவசரணத்திலே, समभ्येत्य - அடைந்து, जिननायकम् - ஜினமுக்யனான, श्रीवीरं- ஐஸ்வர்யத்துடன் கூடியிருக்கிற வர்த்தமான ஸ்வாமியை, पूजयामास - பூஜித்தான், पुनः पुनः - திரும்ப திரும்ப, अस्तावीच्च - ஸ்தோத்திரம் பண்ணினான். 95

*பொருள் : - பிறகு மரியாதைக்கு உரிய ஜீவந்தரன் ஜினதேவரின் இருப்பிடமான ஸ்ரீசபை என்ற இடத்தை அடைந்து அங்கு அவரை வழிபட்டான். மீண்டும், மீண்டும் அவரைப் போற்றினான்.*

भगवन्भवरोगेण भीतोऽहं पीडितः सदा ।
त्वय्यकारणवैद्येऽपि सह्या किं तस्य कारणा ॥ 96

भगवन् - வாராய் ஸ்வாமியே, भवरोगेण - சம்சாரமாகிற வியாதியினாலே, भीतः - பயப்பட்டிருக்கிற, अहं - நான், सदा- எல்லா காலமும், पीडितः- பீடிதனான, अकारणवैद्येऽपि - காரணமில்லாத வைத்யனான, त्वयि - நீ இருந்துள்ள ளவிலும், तस्य कारणा - அதற்குக் காரணமான துக்கத்தை, सह्या- சகிக்கக்கடவது, किं-என்ன. 96

பொருள் : - பிறவிப்பிணியைப் போக்கவல்ல மருத்துவர் தாங்கள். காரணமில்லாமல் உயிர்கள்மீது கருணைகொண்டுள்ளவர் தாங்கள் . அப்படிப்பட்ட தாங்கள் இருக்கும்போது நான் ஏன் துயர்ப்பட வேண்டும் ?

त्वं सार्वः सर्वविद्देव सर्वकर्मणि कर्मठः ।
भव्यश्चाहं कुतो वा मे भवरोगो न शाम्यति ॥ 97

त्वं - நீ, सार्वः - ஸமஸ்த ஜீவன்களுக்கு ஹித்தைப் பண்ணுகிறவன், सर्ववित् - சமஸ்தத்தையும் அறிந்தவன், देव - வாராய் தேவனே, सर्वकर्मणि - சமஸ்த கர்மத்திலே, भव्यश्च - பவ்யனுமான, अहं - நான், कर्मठः - கர்மத்தை செய்யாதவன், कुतो वा - என்ன காரணத்தினின்றுந்தான், मे - எனக்கு, भवरोगः - சம்சாரமாகிற வியாதியானது, न शाम्यति - உபசம்மாகாதில்லை. 97

பொருள் : - நீ எல்லோருக்கும் நன்மை செய்பவன், எல்லாவற்றையும் அறிந்தவன், எல்லா கடமையையும் விட்ட எனக்கு உலக வாழ்வாகிய நோய் ஏன் நீங்கவில்லை.

निर्मोह मोहदावेन देहजीर्णोरुकानने ।
दह्यमानतया शश्वन्मुह्यन्तं रक्ष रक्ष माम् ॥ 98

निर्मोह - மயக்கம்மற்றவனே! मोहदावेन - மோஹமாகிற காட்டுத்தீயினாலே, देहजीर्ण उरु कानने - ஜீர்ண தேஹமான பெரிதான காட்டிலே, दह्यमानतया - வெகு நெருப்பினாலே, शश्वत् - நித்யமும், मुह्यन्तम् - மோஹிக்கப்பட்டிருக்கிற, मां - என்னை, रक्ष रक्ष - வாராய் ஸ்வாமீ ரக்ஷி ரக்ஷி. 98

பொருள் : - மயக்கமற்றவனே, மயக்கம் என்னும் காட்டுத் தீயினால் அழியக் கூடிய உடலாகிய மிகப் பெருங்காட்டில் எப்போதும் எரிந்துகொண்டு மயக்கம் அடைந்துள்ள என்னை காப்பாற்றுக.

संसारविषवृक्षस्य सर्वापत्फलदायिनः ।
अङ्कुरं रागमुन्मूलं वीतराग विधेहि मे ॥ 99

संसारविषवृक्षस्य - சம்சாரமாகிற விஷ விருட்சத்திற்கு, सर्वापत्फलदायिनः - எல்லா ஆபத்துக்களையும் பலனாக அளிக்கிற, अङ्कुरः - முளையாய் இருக்கிற, राग - ராகத்தை, मे - எனக்கு, वीतराग - வாராய் ராகமில்லாத ஸ்வாமியே, उन्मूलम् - வெறுக்கத்தக்கதாக, विधेहि - பண்ணு. 99

பொருள் : - எல்லாவிதமான ஆபத்துக்களையும் பழங்களாகக் கொண்ட உலக வாழ்க்கையாகிய நஞ்சு மரத்தின் முளை போல விளங்கும் ஈடுபாட்டை ஆசையுற்ற நீ வேறோடு களைந்து ஏறிவாயாக.

कर्णधार भवार्णोधेर्मध्यतो मज्जता मया ।
कृच्छ्रेण बोधिनौर्लब्धा भूयान्निर्वाणपारगा ॥ 100

कर्णधार भवार्णोधेः - சம்சாரமாகிற சமுத்ரத்தைக் கடப்பிக்கிற தர்மாமாகிற கப்பலுக்கு மீகாமனைப் போலேயிருக்கிற, मध्यतः - நடுவில், मज्जतः - மூழ்கும், मया - என்னாலே, कृच्छ्रेण - ப்ரயாசத்தினாலே, बोधिनौर्लब्धा ஞானமாகிற கப்பலைப் பெற்று, निर्वाणपारगा - மோக்ஷமாகிற கரையானது, भूयात् - ஆகக்கடவது. 100

பொருள் : - பிறவிப் பெருங்கடலை கடக்க உதவும் அறிவாகிய கப்பலின் மாலுமியைப் போல் விளங்குபவரே அக்கடலின் நடுவில் மூழ்கிக்கொண்டிருக்கும் எனக்கு நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் இவ்வைகளைக் கொண்டுள்ள ரத்னத்திரயம் என்னும் மரக்கலம் கிடைத்தது. அது எனக்கு வீடுபேற்றை அளிக்க வல்லது.

---

इति स्तोत्रावसाने च लब्ध्वायं त्रिजगद्गुरोः ।
अनुज्ञां जिनदीक्षायामानमद्गुणनायकम् ॥ 101

इति - என்று, स्तोत्रावसाने च - ஸ்தோத்ரத்தினுடைய அவசானத்திலேயும், अयं - இவன், त्रिजगद्गुरोः - த்ரிஜகத்குருவினுடைய, अनुज्ञां - அனுக்ஞையை, लब्ध्वा - பெற்று, जिनदीक्षायां - ஜினதீக்ஷையிலே, गणनायकम् - கணமுக்யரான கணதரரை, आनमत् - நமஸ்கரித்தான். 101

பொருள் :- இவ்வாறு அவரை பலவிதமாகப் போற்றினான். அதன் முடிவில் மூன்று உலகத்திற்கும் ஆசிரியராக விளங்கக்கூடிய அந்த முனிவரிடம் அனுமதி பெற்று ஜினதீட்சையை பெற்று கணநாயகனை வணங்கினான்.

प्राज्ञः प्रव्रज्य तत्पार्श्वे तपस्तेपेऽतिदुश्चरम् ।
येन कर्माष्टकस्यापि* नष्टता स्याद्यथाक्रमम् ॥ 102

प्राज्ञः - ஞானவானான ஜீவந்தரனானவன், तत्पार्श्वे - அந்த கணதரருடைய ஸமீபத்திலே, प्रव्रज्य - தீக்ஷித்து, येन - யாதொரு தபஸினாலே, कर्माष्टकस्यापि - எட்டு ப்ரகார கர்மத்துக்கும், यथाक्रमात् - யதாக்ரமமாக, नष्टता - வினாசமானது, स्यात् - ஆகக்கடவது, अतिदुश्चरम् - அதிதுச்சரமான, तपः - அப்படிப்பட்ட தபஸை, तेपे - தபித்தான். 102

பொருள் :- பிறகு அறிவு பெற்ற ஜீவந்தரன் அந்த கணநாதருடைய அருகிலேயே துறவு மேற்கொண்டான். எட்டுவிதமான பிரகார கருமங்களையும், முறைப்படி விட்டொழித்து, மிகக் கடுமையான தவத்தை மேற்கொண்டான்.

---

* कर्माष्टकम् - 1. ज्ञानावरणीयम्, 2. दर्शनावरणीयम्, 3. मोहनीयम्, 4. वेदनीयम्, 5. आयुष्यम् 6. नाम, 7. गोत्रम्, 8. अन्तरायम् ।

श्रीरत्नत्रयपूर्त्याथ जीवंधरमहामुनिः ।
अष्टाभिः स्वगुणैः* पुष्टोऽनन्तज्ञानसुखादिभिः ॥ 103

श्रीरत्नत्रयपूर्त्या - ஐச்வர்யத்துடனே கூடின ரத்னத்த்ரய ஸம்பூர்ணத்தினாலே, अथ - பிற்பாடு, जीवन्धरमहामुनिः - ஜீவந்தர மஹாமுனியானவன், अनन्तज्ञानसुखादिभिः - அனந்தஞான சுக முதலான, अष्टाभिः - எட்டுபிரகாரமான, स्वगुणैः - தன்னுடைய குணங்களினாலே, पुष्टः - ஸம்பூர்ண மானார். 103

*பொருள் : - ரத்ன திரயங்களில் முழுமை அடைந்ததால் ஜீவந்தரன் என்னும் மாமுனிவன் எட்டுவிதமான குணங்களால் முழுமை அடைந்தான்.*

सिद्धो लोकोत्तराभिख्यां केवलाख्यामकेवलाम् ।
अनुपमामनन्तां तमनुबोभूयते श्रियम् ॥ 104

सिद्धः लोकोत्तराभिख्यां - சித்தலோகமென்றும் பேரையுடைய, केवलाख्यां - கேவலமென்றும் பேரையுடைய, अकेवलाम् - மிகவும் முக்யமான, अनुपमां - உவமை இல்லாத, अनन्ताम् - அனந்த சப்தத்தை அன்த்யத்திலே உடைய, श्रियम् - ஐச்வர்யத்தை, अनुबोभूयते - அனுபவியாநின்றான். 104

*பொருள் : - பிறகு ஜீவகன் சித்தலோகம் என்னும் பெயரையும் கேவலம் (ஒன்று மட்டுமே) என்ற பெயரையும் கொண்ட மிகவும் முக்யமான உவமையற்ற முதலும் முடிவுமற்ற செல்வத்தை அனுபவித்திருந்தான்.*

---

* गुणष्टकम् - 1. अनन्तज्ञानं, 2. अनन्तदर्शनम्, 3. अनन्तवीर्यम्, 4. अनन्तसुखम्, 5. अव्याबाधत्वम्, 6. अगुरुलंधुत्वम्, 7. अतिसूक्ष्मत्वम् 8. अवगहनत्वम् ।

एवं निर्मलधर्मनिर्मितमदं शर्मस्वकर्मक्षय-
प्राप्तं प्राप्तुमतुच्छमिच्छतितरां यो वा महेच्छो जनः ।
सोऽयं दुर्मतकुञ्जर प्रहरणे पञ्चाननं पावनम्
जैनं धर्ममुपाश्रयेत मतिमान्निश्रेयसः प्राप्तये ॥ 105

एवं - இப்படி, स्वकर्मक्षयप्राप्तम् - தங்களுடைய கர்மக்ஷயங்களினாலேயடையப்பட்ட, निर्मलधर्मनिर्मितं நிர்மலமான தர்மங்களினால் நிர்மிக்கப்பட்ட, इदं शर्म - இந்த மோக்ஷ சுகத்தை, प्राप्तं - அடையிறதற்கு, महेच्छः - மஹத்தான வார்த்தையுடைய, यो वा जनः - யாதொரு ஜனனமானதுதான், अतुच्छं - மிகவும் அதிகமான, इच्छतितरां - வாஞ்சியாநின்றான், सोऽयं - அப்படிப்பட்ட ஜனமானது, दुर्मतकुञ्जरप्रहरणे - மித்யா மதங்களாகிற யானையைக் கொல்லுகிறத்திலே, पञ्चाननं - சிம்ஹம் போலான, पावनम् - பவித்ரமான, जैनं धर्मम् - ஜின தர்மத்தை, मतिमान् - புத்திமானானவன், निश्रेयसप्राप्तये - மோக்ஷத்தையடைகிறத்தின் பொருட்டு, उपाश्रयेत அடையக்கடவன். 105

பொருள் :- இவ்வாறு தூய்மையான அறத்தின்பாற்பட்டு இயற்றப்பட்ட ஊழ்வினையை அழித்து வீடுபேற்றைத் தரக்கூடிய இன்பத்தை விரும்பும் சிறந்த ஆசை கொண்ட ஒருவர், தீய மதமாகிய யானையைக் கொல்லவந்த தூய்மையான சிங்கம் போல் விளங்கும் ஜின தர்மத்தை வீடுபேற்றை அடைவதற்காக உபாசிக்க வேண்டும்.

---

स जतां राजराजोऽयं राजराजो महोदयैः ।
तेजसा वयसा शूरः क्षत्रचूडैमणिर्गुणैः ॥ 106

गुणैः - குணங்களினாலே, क्षत्रचूडामणिः - க்ஷத்ரியரான ராஜாக்களுக்கு சூடாமணியாயான, तेजसा - பராக்ரமத்தினாலே, वयसा - வயசினாலேயும், शूरः - சூரனான, महोदयैः - மஹத்தான ஐச்வர்யங்களினாலே, राज राजः - குபேரனான, अयं राजराजः - இந்த ஜீவந்தரனானவன், राजतां - விளங்கக்கடவன். 106

इति श्रीमद्वादीभसिंहसूरिविरचिते क्षत्रचूडामणौ
मुक्तिश्रीलम्भो नाम एकादशो लम्भः ।
क्षत्रचूडामणौ व्याख्यानम्
परिसमाप्तम् ॥

***பொருள் :*** - *அரசர்க்கெல்லாம் அரசனும், அரசர்களுள் மாணிக்கமுமாகிய ஜீவந்தரன் தனது வீரத்தாலும், வயதாலும், திறமையாலும், சிறந்த செல்வங்களினாலும் நன்கு விளங்கட்டும்.*

***முக்திஸ்ரீலம்பம் முற்றிற்று***

***க்ஷத்ரசூடாமணி முற்றிற்று***

***ஸ்ரீமத் பஞ்ச குருப்யோ நம:***

## துணைநூற்பட்டியல்


1. Kshattra chudamani of Vadibhasimha, (ptd., Ed.)
   Ed. T. S. Kuppuswamy Sastri, Sarasvativilasa Series
   No. III, Tanjore, 1903.

2. Gadyachintamani of Vadibhasimha,
   Ed. T. S. Kuppuswamy Sastri and S. Subramanya Sastri
   Sarasvativilasa Series, No. I, Tanjore, 1902.

3. Jivandhara Campu of Harichandra,
   Ed. Pt. Pannalal Sahityacharya, Bharatiya Jianapit,
   Kashi, 1958.

4. A History of Claassical Sanskrit Literature. (HCSL)
   M. Krishnamacharya, Motilal Banarsidass, Delhi, 1977.

5. *சீவகசிந்தாமணி, திருத்தக்கதேவர் மூலமும், நச்சினார்க்கினியர் உரையும், பதிப்பாசிரியர், உ. வே. சாமிநாதய்யர், ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை, 1949.*

6. *இணையதளம் :* International Digambar Jain
   Organization (IDJO) URL: HTTP://www.idjo.org






சரபோஜி மன்னர் II
(1798-1832)

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூலகம் மற்றும் ஆய்வு மையம்

உலகப் புகழ்பெற்ற அறிவுக் களஞ்சியமாகவும் அரும் பொருட்கள் உறைவிடமாகவும் கல்விக் கோயிலாகவும் திகழ்ந்து வருகிறது இந்நூலகம். தொட்டனைத் தூறும் மணற்கேணியாய் நூல் ஆர்வலர்களுக்கும், அறிஞர் பெருமக்களுக்கும் கற்றனைத்தூறும் அறிவுக் செல்வமளிக்கும் கவின் பெரும் கல்விக்கோயிலாகத் திகழ்கிறது. இந்நூலகத்தில் காணப்படும் கலை நுட்ப வேளைபாடுகளையும் ஆர்வத்துடன் அரிதின் முயன்று திரட்டப்பட்ட மதிப்புயர் பன்மொழி பழைய புத்தகங்களையும் அரிய கைளெழுத்துச் சுவடிகளையும் பார்வையாளர்கள் மிகவும் வியந்து போற்றுகின்றனர். உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து அறிஞர்கள் தாம் விரும்பிய பொருண்மையில் ஆய்வு மேற்கொள்ள அரிய கருத்துக்களைத் தன்னகத்தே அருமையுறக் கொண்டிருப்பதால் இநநூலகம் நோக்கி வந்தவண்ணம் உள்ளனர். புவியினுக்கு அணிசேர் பன்மொழி பனை ஓலைச் சுவடிகளையும், காகிதச் சுவடிகளையும் பெரிதும் பெற்றுள்ள இம்மகாநூலகம் இலக்கியத் தடத்தின் தனித் திறம் வாய்ந்ததாகத் திகழ்ந்து வருகின்றது.